

சிந்தால் வருஷங்கள்




# இளமைப் பருவம்

ஒரு அழகுப் பெண்மணி யாகத் திகழ தயார் செய்துகொண்டிருக்கி றீர்களா? உங்கள் இடைக்கால வருடங்களில் தான் மேனி எழிலுக்கு அதிகப்படியான பராமரிப்பு மிகவும் தேவை.

லட்சக் கணக்கானவர்களால் உபயோகிக்கப்பட்டு நம்பிக்கைக்குப் பாத்திரமான, இந்தியாவிலேயே பிரமிக்கச்செய்யும் ஜி–11 சேர்ந்த ஒரே சோப்பான சிந்தால் உபயோகித்து உங்கள் மேனியெழிலைப் பராமரிப்பதைவிட வேறு சிறந்தவழி யேது? சாதாரணமாக சருமத்தில் களங்கத்தை உண்டுபண்ணும், துர்நாற்றத்தை எழுப்பும் கிருமிகளை ஒழித்துக் களங்கமற்ற பரிசுத்தமான மேனி யெழிலோங்க சிந்தால் உறுதி செய்கிறது.




வியர்வை நாற்றத்தைப் போக்கி, எழிலுடன் விளங்கச்செய்யும் சோப்

மிகுந்த வனப்பிற்கும், பூரணப் பாதுகாப்பிற்கும் இனிய மணங்கமழும் வியர்வை நாற்றத்தைப் போக்கி ஆறுதல் அளிக்கும் ஜி-11 அடங்கியுள்ள கோத்ரெஜ் சிந்தால் டாய்லெட் பவுடர் உபயோகியுங்கள்.

கோத்ரெஜ் ஹேர்டானிக் கிலும் ஜி-11 அடங்கியுள்ளது.

Godrej கோத்ரெஜ்

**சோப்புகளில் முதன்மையான பெயர்**

CT.24.7/62 (8"x5") TAM.

1—19—8

# காஷ்மீர்

**உங்களுக்கு இன்ப உணர்ச்சியை அளிக்கும்**

வெள்ளிப் பனி மூடிய கம்பீரமான
மலைகளுக்கு மத்தியில் அமைந்துள்ளது;
அழகு வாய்ந்த ஏரிகளால் சூழப்பட்டுள்ளது;
பளிங்கு போன்ற தண்ணீருடன்
கூடிய ஆறுகள்; அழகின் அற்புதங்கள்
எல்லாம் ஒன்று சேர்ந்து களிநடனமிடும் நாடு;
பூத்துக் குலுங்கும் வண்ண மலர்க்காட்சிகள்,
பழங்கள், நீண்டு உயர்ந்துள்ள பிர், பைன்
மரக்காடுகள், தோட்டங்கள், புராதனமான
சரித்திரச் சின்னங்கள் யாவும் இணங்காண
முடியாத சுகத்தை அளிக்கும்

## காஷ்மீர்

உங்கள் நினைவை விட்டு அகலாத
விடுமுறை இன்பத்தை அளிக்கிறது.
பொழுது போக்கில் ஆவல் உடையவர்
களுக்கும் வேட்டைப் பிரியர்களுக்கும் ஓர்
இன்பபுரி. உறைபனிமீது உலாவுவது, வழுக்கு
வண்டி பிரயாணம், நீச்சல், படகு ஓட்டல்,
'கோல்ப்' போன்ற விளையாட்டுகள் ஏராளம்.

## காஷ்மீர்

**விளையாட்டுப் பிரியர்களின்
சுவர்க்கம்.**



விவரங்களுக்கு
அருகிலுள்ள டூரிஸ்ட் காரியாலயத்தை
அணுகுங்கள். அல்லது கீழ்க்கண்ட
விலாசத்துக்கு
எழுதுங்கள்

**டைரக்டர் ஆப் டூரிஸம்
ஜம்மு-காஷ்மீர் அரசாங்கம்
ஸ்ரீநகர்**

DA 62/241

# இப்பொழுது நடைபெறுகிறது!

சென்னை
**சித்ரா**
**ஸ்ரீ கிருஷ்ணா**
**காமதேனு**
**உமா**
**ராம்**
(கோடம்பாக்கம்)
மற்றும் தென்னகமெங்கும்



மதனா தியேட்டர்ஸ்

# ஆடிப்பெருக்கு

மூலக்கதை மக்களன்பன் · திரைக்கதை-வசனம் ஜாவர் சீதாராமன் · இசை A.M.ராஜா · கேமரா தம்பு · கலை பாலு · ஸ்டூடியோ மெஜஸ்டிக்

பாடல்கள் கண்ணதாசன்-கொத்தமங்கலம் சுப்பு-சந்தானம்-சுரதா

**டைரக்ஷன்... K.சங்கர்**

SANTHI

## விலாசத்தை
## கவனமாக
## எழுதுங்கள்




### துரிதமாகப் பட்டுவாடா
### செய்ய துணைபுரியுங்கள்



*எப்பொழுதும்*
*கடிதங்களிலும்*
*பார்க்கட்டுகளிலும்*
*விலாசத்தை*
*பூரணமாகவும்*
*தெளிவாகவும்*
*எழுதுங்கள்*



உங்களுக்கு சிறந்த முறையில்
சேவைசெய்ய எங்களுக்கு உதவுங்கள்.
தபால் தந்தி இலாகா

DA-62/150

DA 61/767

# உங்களுக்கு வழிகாட்டி

குடும்பக் கட்டுப்பாடைப்பற்றி உபயோகமான விவரங்கள் அடங்கிய துண்டுப் பிரசுரங்கள், மடிப்புப் புத்தகங்கள், சிறு புத்தகங்கள் முதலியவை ஆங்கில மொழியிலும், பல இந்திய மொழிகளிலும் கிடைக்கின்றன. சிகிச்சை நிலையத்தில் இந்த இலவச வழிகாட்டி ஒன்றை கேட்டு வாங்கிக்கொள்ளுங்கள்



அருகிலுள்ள அரசாங்கம் அங்கீகரித்துள்ள

**குடும்பக் கட்டுப்பாடு நிலையத்திற்கு**

**சென்று ஆலோசனை பெறுங்கள்**

ஆகஸ்ட் 15-உ முதல்...



சென்னை
**பிளாஸா**
**பாரத்**
**மேகலா**
மற்றும்
தென்னாடெங்கும்...





தேவர்
பிலிம்ஸ்...



# குடும்பத் தலைவன்



டைரக்ஷன்
**M.A. திருமுகம்**
தயாரிப்பு...
**சாண்டோ M.M.A. சின்னப்பா தேவர்**



Elegant.

# Rani

எந்த மாடல் ராணி தையல் இயந்திரத்தை வேண்டுமானாலும் நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். ஒருவித தொந்தரவுமின்றி வாழ்நாளுக்கும் அதிகமாக உழைப்பதற்கேற்றவாறு விசேஷ முறையில் தயாரிக்கப் பட்டது. சத்தம் சிறிதும் இல்லாதது. நவீன தையல் முறை. அனைத்தும் பெற்ற முன் தையல், பின் தையல்; நூல் முறுக்கினை அறிவிக்கும் சாதனம்; ரோட்டரி கொக்கி,மத்திய பாப்பின் யந்திர முறை — ஆகியவையுடன் வர்ணமிகு மூடிகள், பளபளக்கும் பலகைகள் கைமாடல், கால்மாடல் ஆகியவை மூடியும் திறக்கவும் வசதியுள்ள காபினட்கள் இரண்டு வருடங்களுக்கு உறுதிமொழி வழங்கப்படுகிறது.

## விரைவான நேர்த்தியான

## தையலுக்கு

தயாரிப்பாளர்:

**லோட்டடஸ் இண்டஸ்ட்ரீஸ்**

32, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1

விற்பனை ஏஜண்டுகள்:

**ஓரியண்ட் கிரிடிட் கார்ப்பொரேஷன்**

26 எர்ரபாலு செட்டித் தெரு, சென்னை-1; போன்:2 3615



# கல்கி

## பொருளடக்கம்

சுபகிருது, ஆவணி மீ 3உ — ஆகஸ்ட் 19, 1962













சிகரெட்டின் விலை எவ்வளவுக்கெவ்வளவு அதிகமோ அவ்வளவுக்கவ்வளவு தரமும் உயர்வு என்ற கருத்து பற்பலரிடம் உண்டு. இது எப்போதுமேயோ, எல்லா விஷயங்களிலுமேயோ உண்மையாகிவிடுவதில்லை. ஏனென்ருல், அத்தகைய விலையில் மிகப் பெரும் பங்கு பற்பலவான வரிகளுக்கே போய்ச் சேருகின்றன.

# ரூபாய்க்கு ரூபாய் தேறுமா ?

Panama
20
CIGARETTES
RUPEE

# பனமா

**ஒரு நல்ல சிகரெட்—**
**இறுதிவரை இன்பமூட்டுவது**



பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT 710 A.TM

Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 3

# நம் கடமை

ராஜாஜி

சுதந்திர தினமாகிய இன்று, விடுதலைப் போராட்டத்தைப் பற்றிச் சிறிது சிந்திப்போமாக.

அடிமை வாழ்வு எவ்வளவு சுக வாழ்வாயினும் அது தகாது என்று பிரிட்டிஷாரின் பேரில் இயக்கம் நடத்தினோம். சுதந்திரம் கிடைத்தால்தான் தேசத்தில் நல்ல நிர்வாகம் நிலைபெறும்; அப்போதுதான் நாடு பொருளாதார சுபிட்சம் அடைய முடியும் என்பதற்காக மட்டும் விடுதலை இயக்கம் நடைபெறவில்லை. நல்ல நிர்வாகமும், பொருளாதார முன்னேற்றமும் வேண்டும் என்பதில் ஐயமில்லை. ஆனால் திறமையான நிர்வாகம், பொருளாதார மேம்பாடு ஆகிய இலட்சியங்களுக்குச் சுதந்திரம் ஒரு மார்க்கம் என்பதாக எண்ணி அதற்காக இந்தப் போராட்டம் நடக்கவில்லை. அடிமை வாழ்வு கூடாது என்பதற்காக - அதாவது சுதந்திரத்தையே இலட்சியமாகக் கொண்டுதான் விடுதலைப் போர் நடைபெற்றது.

இன்று தொழிலுரிமை, சொத்துரிமை ஆகிய சுதந்திரங்களை யெல்லாம் அரசாங்கத்திடம் பறிகொடுத்து நிற்கும் நாம் இந்த உண்மையை ஆராய்ந்து பார்க்க வேண்டும். அரசாங்கத்தினால் கட்டுப்படுத்தப்படாமல் தனி மனிதர்கள் போட்டா போட்டியிட்டுத் தொழில் புரிந்தால் திறமையான முறையில், சிக்கனமான செலவில், நாட்டுக்கு அவசியமான இனங்களில் உற்பத்தி பெருகி, பொருளாதார முன்னேற்றம் காண முடியும் என்பதற்காக மட்டும் தனியார் தொழிலுரிமையைக் காக்கச் சுதந்திரக்கட்சி பாடுபடவில்லை. இந்த லௌகிக லாபங்களுக்கு மேலாக, சுதந்திரமாக வாழ்வதால் ஏற்படும் ஆன்ம நிறைவைப் பெரிதாக மதித்து அதற்காகவே சுதந்திரக் கட்சி உழைக்கிறது.

ஏனெனில் ரூபாய் அணா பைஸா முன்னேற்றத்தைவிட ஆன்மீக முன்னேற்றத்தை முக்கியமாகக் கருதுவதே சுதந்திரக் கட்சியின் அடிப்படை சித்தாந்தமாகும். கட்சியின் ஆதாரக் கோட்பாடுகளைச் சிறிதும் தளராமல் கடைப்பிடிக்க வேண்டியது அவசியமாகும். இவ்வாறு நான் சொல்லும்போது சிலருக்கு ஒரு தயக்கம் ஏற்படலாம். 'நம்முடைய கட்சியின் அடிப்படைத் தத்துவங்கள் சாதாரண மக்களைக் கவர்ந்திழுக்குமா?' என்ற ஐயம் தோன்றலாம்.

இந்த ஐயம் நியாயமே. சுதந்திரக் கட்சியின் அடிப்படைக் கோட்பாடுகள் பகுத்தறிவைக் கொண்டு ஆராய்ந்து பார்த்து ஏற்க வேண்டியவை. மற்றக் கட்சிகளின் கொள்கைகளைப் போல் பாமர மக்களுடைய உணர்ச்சிகளைத் தூண்டிவிட்டு அவர்களை வசியப்படுத்துபவை அல்ல.

எல்லா அரசியல் கட்சிகளின் இலட்சியமும் ஒன்றேதான். நாட்டில் சந்தோஷமும், சுபிட்சமும், அபிவிருத்தியும் ஏற்படவேண்டும் என்பதே எல்லாக் கட்சிகளின் இலட்சியம். சுதந்திரக் கட்சியின் குறிக்கோளும் இதுவேதான். இந்தக் குறிக்கோளை அடைய ஒவ்வொரு கட்சியும் ஒவ்வொரு மார்க்கத்தைப் பின்பற்றுகிறது. சுதந்திரக் கட்சியானது சுதந்திரம் என்ற ஆன்ம நிறைவை இழக்காமல் பெறும் முன்னேற்றமே உண்மையானது எனக் கருதுகிறது. சமுதாயமும், குடும்பமும், பண்ணையும், பட்டறையும் சர்க்கார் தலையீடு இல்லாமல் நமது முன்னாட்களில் எப்படிச் சுதந்திரமாக வளர்ந்து வந்தனவோ அதே

போலத்தான் இனியும் வளர வேண்டும் என்கிறது. சர்க்கார் சர்வாதீனம் குறைந்து மக்களுடைய சுதந்திரம் பெருக வேண்டுமென்கிறது. தொழில் துறையில் சர்க்காரின் ஏக போக்கியம் குறைவது போலவே சமூக சேவையிலும் அரசாங்கத்தின் தலையீடு குறைய வேண்டும்; மக்கள் மனமொப்பித் தாங்களாக ஒப்புரவு சேவை புரிய வசதி அளிக்க வேண்டும்; அப்போதுதான் தன்னலம் கலக்காத தியாகத்தின் பேரில் உண்மையான சமுதாய உணர்ச்சி உருவாகும் என்கிறது.

இந்தக் கோட்பாடுகளில் ஏனைய கட்சிக் கொள்கைகளில் உள்ளது போல மக்களை ஏமாற்றியும் மயக்கியும் ஆகர்ஷிப்பதற்கு எதுவும் இல்லை என்பது உண்மை.

'காரியங்களை யெல்லாம் சர்க்கார் ஏற்று நடத்தி வைக்கும் அளவுக்கு நம்முடைய பொறுப்பு குறைகிறதல்லவா?' என்று நிம்மதி யடைபவர்களை நாம் ஈர்க்க இயலாது. அதாவது சுதந்திரத்தின் பெருமையை உணராமல், அரசாங்கத்தின் தலையீட்டை சர்வ சகஜமாக எண்ணி வரவேற்கும் அடிமை மனப்பான்மையுள்ள மக்களை நாம் கவர முடியாது. பாமரர்கள் மீது மற்றக் கட்சிகள் வீசும் சம விநியோக மோகனாஸ்திரத்தை நாம் பிரயோகிக்க முடியாது. இன்றைய நிலைமையில் இந்த நாட்டில் சொத்துக்களைச் சமவிநியோகம் செய்வது நடக்கிற காரியமா, அவ்வாறு செய்தாலும் அது நாட்டுக்கு நன்மை தருமா என்பதை யெல்லாம் பற்றிக் கவலையில்லாது, ஒரு சாராரைச் 'சட்டப்படி' கொள்ளை யடித்து அந்தக் கொள்ளைப் பொருளை ஏழைகளுக்குப் பகிர்ந்து தரப் போவதாகக் காங்கிரஸும், கம்யூனிஸ்டுக் கட்சியும் வலை வீசுகின்றன. அதைப் போல் நாமும் ஒரு மோச வழியைத் தேடலாமே என்று எண்ணலாகாது.

இதைக் கட்சி அபிமானிகள் யாவரும் தீர்க்கமாகச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். காக்கைக்குப் பறக்கத் தெரியும். நாய்க்கு ஓடத் தெரியும். காக்கை ஓடப் பார்த்தால் தோல்வி அடையும். நாய் பறக்க முயன்றால் வீணாகும். தங்கள் இயற்கை என்ன, ஆற்றல் என்ன, தாங்கள் செயல்பட வேண்டிய முறை என்ன என்பதை நன்றாக அறிந்து அந்த வழியிலேயே நாயும் பூனையும் பறவைகளும் செல்கின்றன. நாமும் அதைப் போல் நம்முடைய ஜீவாதாரமான கருத்துக்களையும், பலத்தையும், சக்தியையும் உள்ளபடி அறிந்து நமது சித்தாந்தங்களின் மீது செயலாற்ற வேண்டுமே யல்லாது, மக்கள் எல்லோரையும் நம் வசமாக்க வேண்டும் என்று துடித்தோமானால் பெருத்த ஏமாற்றங்களுக்கு ஆளாவோம். கட்சியை உருவாக்கியுள்ள அடிப்படைக் கருத்துக்களைக் குலைக்காமல் பெறும் வெற்றியே சாசுவதமாக நிலைக்கும். கட்சியின் முக்கியமான நோக்கங்களைக் கைவிட்டுவிட்டு வெற்றி பெறப் பார்க்கலாகாது. நம்முடைய கட்சியின் சித்தாந்தம் யாருக்குப் புரியக் கூடுமோ அவர்களுக்கெல்லாம் அதைப் புரிய வைக்க வேண்டியதே நம் கடமை. தேர்தலைக் குறியாகக் கொண்டு பாமர மக்களை நம்மிடம் இழுப்பதற்கான உபாயங்களைக் கையாண்டால் கிடைக்கும் வெற்றி சுதந்திரக் கட்சிக்குக் கிடைத்த வெற்றியாகாது.

சிந்தனைசக்தி படைத்து, நம் கொள்கைகளை ஆராய்ந்து பார்த்து ஏற்கக்கூடியவர்களுக்கெல்லாம் நம் பிரசாரம் எட்ட வேண்டும். அதோடு மற்ற மக்களையும் சிந்தித்துப் பார்க்குமாறு தூண்டுவோம். விடுதலை வாழ்வின் ஆன்மீகப் பயனையும், சர்க்கார் சர்வாதிபத்தியத்தின் தீமையையும் அவர்கள் புத்திபூர்வமாக உணர்ந்து நமக்கு ஆதரவளிக்க நாம் பாடுபட வேண்டுமே






யல்லாது, அவர்களுடைய உணர்ச்சிகளைக் கிளறி விட்டு வெற்றி தேட முயல்வது நமக்கு இழுக்காகும்.

சுதந்திரக் கட்சியின் இலட்சியம் எப்படியோ அதிகாரத்தைப் பெறுவதல்ல. எனவே காங்கிரஸையும், கம்யூனிஸ்டுக் கட்சியையும் போல் குறுக்கு வழியில் சென்றுவது மக்களைத் தூண்டிலில் சிக்க வைக்க வேண்டிய அவசியம் நமக்கில்லை. எதிர்க் கட்சிகளின் தந்திரோபாயங்களை நாமும் கடைப்பிடிப்பதால் பெறும் வெற்றி நம் தோல்வியேயாகும்.

'ஜனநாயகத்தில் மக்களின் ஆதரவு தானே முக்கியம்? தேர்தல் வெற்றிகளைப் பொறுத்துத்தானே கட்சி பலம் பெற்று வளர முடியும்?'' என்று சிலர் தயங்கலாம். ஆனால் ஜனநாயகம், சத்தியம் என்ற இரண்டு தத்துவங்களுக்குள் சத்தியமே பெரியது. ஜனநாயகம் என்ற அரசியல் அமைப்பில் வெற்றி காண்பதற்காகப் பகுத்தறிவையும், சத்தியத்தையும் விட்டுக் கொடுப்பது நியாயமாகாது என்று திடமாகக் கருதுகிறேன். நம்முடைய கொள்கை உண்மையான ஜனநாயகத்துக்கு — அதாவது மக்கள் விஷயங்களைப் புரிந்து கொண்டு வாஸ்தவமாகவே தங்களை ஆண்டு கொள்ளும் ஆட்சி முறைக்கு — உகந்தது என்பதில் நம்பிக்கை வைத்து ஒரு நல்ல எதிர்க் கட்சியை உருவாக்க வேண்டும்.

பலனில் கருத்தை வைக்காமல் தர்மத்திலும், கடமையிலும், சத்தியத்திலும் மனத்தைச் செலுத்திச் செயல் புரிவோம். **சத்யமேவ ஜயதே** — உண்மையே வெல்லும் — என்ற பாரத நாட்டின் துவஜ வாசகத்தில் ஆளும் கட்சியைவிட நாம் அதிக நம்பிக்கை வைப்போம். இன்றைக்கு மக்கள் வெற்று வாக்குறுதிகளுக்கு மயங்கினாலும் இறுதியில் சுதந்திர வாழ்க்கையையும் நேர்மையான நிர்வாகத்தையுமே வரவேற்பார்கள் என்று நம்புவோம்.

கட்சிக் கொள்கைகளை உறுதியாகக் கடைப்பிடிப்பது போலவே, கட்சி அபி

பிரபல சரித்திரக் கதாசிரியர்

# ஜெகசிற்பியன்



மானிகளின் நன்னடத்தையிலும் நாம் கண்டிப்பாக இருக்க வேண்டும். அதர்மத்தை அஸ்திவாரமாகக் கொண்டு நாம் கட்சியின் எதிர்காலத்தை எழுப்ப முயன்றால் சீக்கிரமே அது இடிந்து விழுந்து அதோகதியாவோம்.

அஹிம்சை, சத்தியம் இவற்றின் மீது நம்பிக்கை வைத்தே முன்பு சுதந்திரப் போர் புரிந்தோம். ஓரளவுக்கு இந்தத் தத்துவங்களை அப்போது கைவிட்டும் இருப்போம். எனினும் இறுதியில் தானாகவே வாய்ப்பான தருணம் ஏற்பட்டுச் சுதந்திரம் பெற்றோம். அதே போல இப்போதும் தர்ம யுத்தம் புரிய முற்படுவோம். இலட்சியத்தில் மிகவும் கவனமாக இருப்போம். அப்படியும் இந்த அறப்போரில் நாம் சிறு பிழைகள் செய்தாலும் ஆண்டவன் அருளுவான். இறுதியில் தர்மம் வெற்றி பெற்றே தீரும். காலக்கிரமத்தில் சர்க்கார் யதேச்சாதிகாரத்தின் கொடுமை தானாகவே மக்களின் கண்களைத் திறந்து விடும்; நம்முடைய வெற்றியை விரைவுபடுத்தும். மக்களின் பகுத்தறிவுக்கு அழைப்பு விடுத்து, நம் கொள்கைகளைக் கொண்டே பெறும் ஆதரவுதான் நமக்குப் பெருமை தரும்.

கட்சி அபிமானிகள் தளர்ச்சி அடையலாகாது என்பதற்காக இவ்வளவெல்லாம் சொன்னேன். இனி இந்தக் கட்சியை ஸ்தாபித்த என்னுடைய மனோநிலையையும் உங்களுக்குச் சொல்கிறேன். நானாகவேதான் முன்வந்து சுதந்திரக் கட்சியை நிறுவினேன். இப்படி ஒரு வேலையை வலுவில் இழுத்துப் போட்டுக் கொண்டதற்காக நான் இது பரியந்தம் சிறிதும் வருந்தவில்லை. ஒரு நல்ல காரியம் செய்தேன் என்றே நான் நம்புகிறேன். இந்த நாட்டுக்கு மிகவும் தேவைப்பட்ட ஒரு நல்ல எதிர்க் கட்சியை உருவாக்கினோம் என்று திருப்தியே கொள்கிறேன். சுதந்திரக் கட்சி நாட்டுக்கு மிகவும் அவசியமாகும். இந்திய தேசிய காங்கிரஸின் புனிதமான பெயரைத் தாங்கி, காந்தி அடிகளின் ஆணைகளுக்கு முற்றிலும் மாறுபட்டுச் செல்லும் ஒரு கூட்டம் இன்று நாட்டை ஆளுகிறது. அதை உண்மையாகவே எதிர்க்கும் சுதந்திரக் கட்சி தேசத்துக்கு ஒரு வரப்பிரசாதமாகும். ஆனால் அறிவற்ற உணர்ச்சிகளைத் தூண்டாமல் அறிவு வழியே செயல்படும் இந்த எதிர்ப்புப் பணி நிதானமாகத்தான் முன்னேற முடியும். காலம் என்னை எவ்வளவு வேகமாக விழுங்குகிறதோ அதே வேகத்தில் கட்சி வளர முடியாது. எனவே நான் இங்கு சொன்னதற்கெல்லாம் நம் இளம் சகாக்கள் தான் முக்கியமாகச் செவிசாய்க்க வேண்டும். ஆண்டவன் பெயராலும், சத்தியத்தின் பெயராலும் தாங்கள் ஆற்ற வேண்டிய திருப்பணியாகச் சுதந்திரக் கட்சியின் போராட்டத்தைக் கருதி அவர்கள் இந்தத் தர்ம யுத்தத்தை நடத்தித் தர வேண்டும்.

---







காங்கிரஸ் கம்யூனிஸ்ட் ஒத்துழைப்பு




உண்டாக்கிப் பாலூட்டி வளர்த்த தாயை உமையவள் என்று அறியீரோ?......
தாய்க்கு மேல் இங்கே ஓர் தெய்வமுண்டோ? — பாரதியார்

# 15. அன்னை அன்பு அழைத்தது!

ஸ்ரீவலி என்ற க்ஷேத்திரத்தில் ஆசாரியர் பக்தர்களுக்குத் தரிசனம் அளித்துக் கொண்டிருக்கிறார். கனிவின் குடியிருப்பாகப் பொலிந்து கொண்டு, அருள் சுரக்கும் தம் நோக்கால் பக்த ஜனங்களின் தாபங்களை யெல்லாம் சமனம் செய்து கொண்டிருக்கிறார்.

பக்தர்களில்தான் எத்தனை வகை? ஞானத்தையும், பக்தியையும் நாடி வருபவர்கள் சிலர். தங்கள் குறைகள் தீர வேண்டுமென்று பிரார்த்திப்பவர்கள் பலர். சித்த புருஷராயிற்றே, இவர் வரமளித்தால் தங்கள் இஷ்டம் கைகூடுமே என்ற நம்பிக்கையுடன் ஆயிரக் கணக்கானவர்கள் வந்து குருபரனிடம் முறையிடுகிறார்கள்.

அன்னத்தை உண்பதால் புஷ்டி அடைகிறோம். அதே அன்னத்தைப் பசையாகவும் உபயோகிக்கலாம். எனினும் அதன் முக்கியமான உபயோகம் உணவாவதே யல்லவா? இதைப் போல, மகான்கள் ஞானத்தைத் தரவே யிருக்கிறார்கள். எனினும் இகவுலக இன்னல்களையும் அவர்களால் தீர்க்க முடியும். அன்னம் பசைக்காக மட்டுமே ஏற்பட்டது என்று எண்ணி அதை உண்ண மறக்கும் பேதைமை போன்றதே, நம் கஷ்ட நஷ்டங்கள் தீரமட்டும் மகான்களை நாடி, அவர்கள் ஊட்டும் ஞானத்தைப் பெறாமலிருப்பதும்.

ஆசாரியரிடத்திலும் இப்படிப் பல பாமர பக்தர்கள் வந்திருப்பதாகத் தெரிகிறது. அவர்களுக்கும் நல்லறிவு வர வேண்டு மென்று மனத்தில் எண்ணி, அவர்கள் வெளியிடும் கஷ்டத்துக்குப் பரிகாரம் சொல்வார் ஜகத்குரு.

இப்படித்தான் ஓர் அந்தணன், சங்கரர் ஸ்ரீவலியில் தங்கியிருந்தபோது தன் ஊமைப் பிள்ளையைப் பேச வைக்க வேண்டுமென்று ஆசாரியரிடம் வேண்டினான்.

ஆசாரியருடைய இதயத்தில் இரக்கம் சுரந்தது. பாலனை "நீ யாரப்பா?" என்று கேட்டார் அருளுடன்.

எவ்வளவோ பிரசங்கம் புரியும் பண்டிதர்களெல்லாம் பகவத்பாதர் முன் வாயடைத்துப் போனதுண்டு. இப்போது வேறோர் அதிசயம் நிகழ்ந்தது. ஊமைச் சிறுவன் சர்வ சகஜமாக சங்கரருக்கு விடை சொன்னான். அதுவும் திக்கித் திணறி ஏதோ ஓரிரு வார்த்தைகளில் அல்ல. சாது மிரண்டால் காடு கொள்ளாது என்பார்களே, அதுபோல் சுலோகங்களாகவே அடுக்கிக் கொண்டு போனான். முன்பு எட்டு வயசு சங்கரர் நர்மதைக் கரையில் வந்து நின்றபோது குகையிலிருந்த கோவிந்தபாதர் யார் என்று கேட்ட போது அவர் விடை சொன்னாற் போலவே இந்தப் பிள்ளை சங்கரரிடம் பேசினான்:

"நான் மனிதனில்லை, தேவனில்லை, யட்சனுமில்லை; நான் வேதியனில்லை, வீரனில்லை, வர்த்தகனில்லை, வேளாளனுமில்லை; நான் பிரம்மசாரியில்லை, இல்லறத்தானில்லை, வானப் பிரஸ்தனில்லை, துறவியுமில்லை; நான் ஞானமே உருவான மெய்ப் பொருள்."

இப்படிப் பொழிந்தான் பையன்.

பிள்ளை என்ன பேசுகிறானென்பது தகப்பனுக்குப் புரியவில்லை; அதைப் பற்றி அவன் கவலைப்படவுமில்லை. புத்திரன் பேசுகிறானே என்பதிலேயே

ரா. கணபதி

அவனுக்குப் பெருமை. ஆசாரியரை வணங்கி விட்டுப் பேருவகையுடன் குழந்தையை அழைத்துக் கொண்டு வீடு திரும்பினன்.

பையன் பேசுகிருன் என்று ஊரையெல்லாம் கூட்டினன். பேசச் சொன்னன். அந்தப் பொல்லாத பிள்ளையாஞல் வாய் திறக்கிற வழியாக இல்லை. சாமியார்தான் போலியோ என்று தகப்பனுக்குச் சந்தேகம் வந்து விட்டது. மீண்டும் சங்கரரிடம் அழைத்து வந்தான். அந்தச் சந்நிதானத்தில் மட்டும் பேசுகிருன் பாலன் — புரியாத பெரிய விஷயங்களைச் சொல்கிருன் !

''பிள்ளையாண்டான் உனக்கில்லை; எனக்குத்தான் போலிருக்கிறது'' என்ருர் ஜகத்குரு.

''சரி, உங்கள் சீடனுகவே வைத்துக் கொள்ளுங்கள்!'' என்ருன் வேதியன். பேசாத போதெல்லாம் தன் உரிமையாக இருந்த குழந்தையைப் பேசக் கற்றவுடன் தனக்கில்லை என்று உலகுக்கு அளித்து அந்தத் தியாகத்திலேயே திருப்தி கண்டு வீடு திரும்பினன்.

சண்டாளன் உட்பட ஆத்ம ஞானியாகிய யாவரையும் தம் ஆசாரியனுக ஏற்றுக் கொண்ட பகவத் பாதருக்கு இந்தச் சிறுவனைச் சீடனுக மட்டும் கருத மனமில்லை. அதற்காக ஒரு காரியம் செய்தார். அந்தச் சிறுவன் தமக்கு விடையாகக் கூறிய சுலோகங்களுக்குத் தாமே உரை எழுதினர்.

சாதாரணமாகக் குரு ஸ்தானத்தில் உள்ளவர் செய்த கிரந்தத்துக்குத்தான் ஒருவர் உரை எழுதுவது வழக்கம். அகம்பாவம் என்பது லவலேசமும் அற்ற ஆசாரியரோ தமது சீடனுக இருந்தவர் செய்த நூலுக்கு பாஷ்யம் எழுதினர்.

அத்வைத அநுபவத்தை உள்ளங்கை நெல்லிக் கனி போல் சுயமாகவே பெற்றிருந்த அந்தச் சிறுவன்தான் * ஹஸ்தாமலகர் என்று திருநாமம் பெற்றது.

* பிரதிஷ்டானபுரியில் ஆசாரியர் வாதிட்டு வென்ற பிரபாகராசாரியரின் குமாரன்தான் ஹஸ்தாமலகராகிய ஊமைச் சிறுவன் என்றும் சொல்வதுண்டு.

அவர் சுலோக உருவில் ஆசாரியருக்குக் கூறிய விடை ஹஸ்தாமலக ஸ்தோத்திரம் எனப்படும். அந்தத் தோத்திரமும் அதற்கு ஆசாரியர் எழுதியுள்ள ஹஸ்தமலகிய பாஷ்யமும் அத்வைத நூல்களில் முக்கியமான இடம் பெற்றவையாகும்.

சாந்தி பூத்த துங்கபத்திரா நதி தடத்தில் சங்கரர் கண்ட அந்தக் காட்சி அவரது அன்பு இதயத்தை விம்மியெழச் செய்தது. என்ன ஆச்சரியம்! கர்ப்பிணித் தவளை ஒன்றை வெயில் வருத்தாதபடி ஒரு நச்சுப் பாம்பு படமெடுத்து அதற்குக் குடை பிடிக்கிறது! அன்பு மதமாகிய அத்வைதச் செல்வத்தை அனவரதமும் மக்களுக்கு வழங்கும் ஒரு கருவூலத்தை நிர்மாணிக்க இதைவிடத் தக்க இடம் உண்டா என எண்ணுகிருர் ஆசாரியர். அந்த இடத்தின் பெயரைக் கேட்கிருர். காமமும் குரோதமும் இன்னதென்றே அறியாத ரிஷ்யசிருங்கர் வசித்த சிருங்ககிரி அது என்று தெரிந்து கொள்கிருர். இரண்யாட்சன் கடலடியில் ஒளித்து வைத்த உலகினை, வராக உருக் கொண்டு தனது கொம்புகளில் பகவான் தூக்கி நிறுத்தியபோது அவனது இரு கொம்பு (சிருங்கம்) களும் பதிந்த புண்ணிய பூமி அது என்று அறிகிருர்.



வனதுர்க்கா மந்திரத்தால் முன்பு நாம் பந்தனம் செய்திருந்த சரஸவாணி பாகிய சாரதையின் சாந்நித்தியத்தை அந்தத் திருத் தலத்தில் உறைவிக்கிறார். சாரதாம்பிகையின் திரு உருவத்தைப் பிரதிஷ்டை செய்து சாரதா பீடம் என்ற ஞானத் தேக்கத்தையும் நிர்மாணிக்கிறார். நீண்ட காலம் அந்த எழில் வளம் மிகு பிரதேசத்திலேயே தங்கி தேவியை ஆராதித்து வருகிறார்.

ஈசுவராவதாரத்தில் கைங்கரியம் செய்ய வேணும் என்பதற்காக தேவ ராஜன் தனது ஓர் அம்சத்தால் கர்நாடக மன்னனாக சுதன்வா என்ற பெயரில் பிறந்திருந்தான். இப்போது விட்ட குறை வந்து அவனைத் தொட்டு ஆசாரியரிடம் சேர்த்தது. ஞான வேந்தருக்குப் புவி வேந்தன் சகல விதமான சௌகரியங்களும் செய்து தந்தான். பொருள் ஏதும் விரும்பாத துறவிக்கு ஏராளமாக அணிபணிகளையும், ராஜ லட்சண சாமக்கிரிகளையும், பரிவாரங்களையும் சமர்ப்பித்தான். விருப்பு போலவே வெறுப்பும் காட்டாமலிருக்க வேண்டியதே ஞானியின் கடமை அல்லவா? எனவே இந்த ராஜ மரியாதைகளையும் ஆசாரியர் தள்ளாது ஏற்றார்.

ஆசாரியருக்குத் தீங்கு செய்வதற்காகக் கர்நாடகத்திலிருந்த சிவபாஷண்டர்கள் துர்த் தேவதைகளை ஏவிய போது அவர்களை எதிர்க்கவும் ஆயத்தமானான் சுதன்வா. ஆனால் அரச பலத்தால் அத்வைதப் பிரசாரம் செய்ய விரும்பாத ஆசாரியர் அவனைத் தடுத்துத் தமது ஆன்ம பலத்தாலேயே ஏவலும், சூனியமும் தம்மை அணுகாதபடி செய்தார். விரோதம் பூண்டவர்களும் அவரிடம் நேயம்



கொண்டு அத்வைதத்தைத் தழுவினர். சீடர் குழாம் நாள்தோறும் பெருகி வந்தது. அவர்களுக்கு ஆசாரியர் தாமே பாஷ்ய பாடங்கள் போதித்து வந்தார்.

அன்றைக்கு பாஷ்ய பாடம் தொடங்காமல் மௌனமாகவே அமர்ந்திருந்தார் சங்கரர். அவர் பேசுவது ஓர் அழகு என்றால் பேசாதது பேரழகு. மௌனத்தால் பிரம்ம தத்துவத்தைப் பிரகடனம் செய்யும் தட்சிணாமூர்த்தியாகவே அப்போது அவர் தோன்றுவார். 'மோனம் என்பது ஞானவரம்பு' என்ற வாக்குக்கு இணங்க அப்போது ஞான வெள்ளம் தன்னால் பூரித்துப் பாயும். இன்றைக்கும் அந்த ஞான அழகைப் பெருக விட்டபடி பேசாது அமர்ந்திருந்தார் ஆசாரியர். கண்கள் எதைப் பார்க்கின்றன, அல்லது எதைப் பார்க்கவில்லை, என்றே புரியாதபடி அகத்தின் ஆனந்தத்தில் தோய்ந்து போய், லட்சுமி நரசிம்மன் தந்தருளிய தந்த விரல்களால் முகவாயை வருடியபடி கனிந்து கொண்டிருந்தார்.

நேரம் செல்லச் செல்லப் பத்மபாதருக்குத் தம் குருநாதன் பேசும் சௌந்தரியத்தைக் காண அவா உண்டாயிற்று. விநயத்துடன், "பாஷ்ய பாடம் கேட்கத்தான் ஆவலாக அமர்ந்திருக்கிறோம்" என்றார்.

"கிரியும் வரட்டுமே!" என்று மட்டும் கூறிவிட்டு மீண்டும் பேசாமை விரதம் பூண்டார் ஆசாரியர்.

பத்மபாதருக்கு விசித்திரமாக இருந்தது! 'கிரி தங்கமான பையன்தான். துணிமணி எல்லாம் நன்றாகத் துவைத்துப் போடுகிறான். அடி ஆள் வேலையெல்லாம் அடக்கத்துடன் செய்கிறான். வாஸ்தவம்! ஆனால் பாவம், பாஷ்ய பாடத்தில் அவனுக்கென்ன புரியப் போகிறது? ஆசாரியர் சூட்சுமமான தத்துவங்களை விண்டு கூறும் போது என்றைக்கேனும் அவன் மற்றச் சீடர்களைப் போல வியந்து மகிழ்ந்திருக்கிறானா? மற்றவர்கள் எல்லோரும் வேதாந்தத்தைப் பற்றித் தீவிரமாக வாக்குவாதம் நடத்தும் போது அவன் எப்போதேனும் அதில் கலந்து கொண்டிருக்கிறானா? ஆசாரியரின் பெருமையைத்தான் அவன் அறிந்திருப்பானா? அறிவு விஷயத்தில் இந்த சிருங்ககிரியும் சிஷ்யகிரியும் ஒன்றுதான். அவனுக்காகக் காலம் தாழ்த்தலாமோ?'

இவ்வித எண்ணங்களில் ஆழ்ந்து போன பத்மபாதரின் செவியில் கடல் மடையெனத் தேனிசை பாய்ந்தது. இசையின் இனிமையில் செவியையும், அதன் கவிதை அழகில் இதயத்தையும், பொருட் செறிவில் அறிவையும் நிரப்பிக் கொண்ட பத்மபாதரின் நயனங்களில் நிறைந்து நின்றது....

'யார்? கிரியா? ஆம், கிரிதான் பாடுகிறான்! ஆடுகிறான்! ஆடிக் கொண்டே அமுத மொழியில் பாடுகிறான்!'

"குருதேவ! தாங்களே எனக்கு அடைக்கலம்! சிவனும் சீவனும் ஒன்றே என்ற அநுபவத்தைத் தரும் தங்களால் அல்லவா மக்களெல்லாம் ஒருவருக்கொருவர் இதத்தை எண்ணி அன்பில் இணைகிறார்கள்?"

கிரியின் சுலோகத்தைக் கேட்ட பத்மபாதர் தமக்குள் நாணமுற்றார். கிரியோ இக உலக பிரக்ஞையே இன்றித் தொடர்ந்து பாடுகிறார்:

"சங்கர குருவே! தாங்கள் சாட்சாத் பரமேசுவரன்தான் என்று எனக்கு நிச்சயமாகி விட்டது. பரமேசுவரன் மட்டும் தானா? பேரொளியாகிய பரப்பிரம்மமே அல்லவா தாங்களாக உருப் போட்டுக் கொண்டு உலவுகிறது? சரணம் என்று வந்தவர்களுக்கெல்லாம் வாத்ஸல்யம் என்ற செல்வத்தை வழங்குகிறது? தங்கள் உடன்பிறப்பாகிய அந்த அருளை எனக்கும் அளியுங்கள்."

பெரிய வித்வான்களுக்குக் கூட எளிதில் புரிபடாத தோடக விருத்தத்தில், ஒன்றும் தெரியாத கிரி, தாமாகவே எட்டு சுலோகங்களைப் பொழிந்து விட்டு பகவத் பாதரின் பாதத்தில் பேச்சற்று விழுந்தார். பத்மபாதரைப் பாராதது போல் பார்த்துக் கொண்டு ஆசாரியர் சொன்னார்: "அசல் கிரியாக, மலையாகக் கிடக்கிறான் கிரி. அசையாமல் அசலமாகவே இருக்கிறான். ஆனால், அவன் ஜடமான சிருங்ககிரியில்லை. உள் முழுதும் ஆனந்தம் ததும்பியிருப்பதால் அசைய முடியாமல் நிலைபெற்றுப் போன ஆனந்த கிரி அவன். அவன் மட்டும் அந்தப் பிரம்மானந்தத்தை வெளியிடத் தொடங்கி விட்டால் அவனை விட ஆட்டம் ஆடுபவர் இருக்க முடியாது" என்று.

பத்மபாதர் வெட்கினார்.

தோடக விருத்தத்தில் அஷ்டகம் செய்த ஆனந்தகிரியே தோடகாசாரியர் என்று பெயர் பெற்றார்.

இன்னொரு நாளும் இப்படித்தான் ஆசாரியர் பாடத்தைத் தொடங்காமல் மௌனமாக அமர்ந்திருந்தார். ஆனால் இது ஆனந்த அமைதியில் பிறந்த மௌனமாகத் தோன்றவில்லை. மானஸ சரஸில் கல்லெறிந்தாற் போல, எண்ணமே எழாத அவரது பளிங்கு இதயத்திலும் தீவிரமான சிந்தனைகள் அலை

விசுவதாகத் தோன்றியது. சீடர்களை யெல்லாம் ஏதோ ஓர் இனம் தெரியாத சோகம் கவ்விப் பிடித்தது. குருவின் சிந்தனையைக் கலைக்கவிரும்பாமல் அவர்கள் ஒவ்வொருவரும் அங்கிருந்து மௌனமாக வெளியேறினர். இங்கே தம் முன் கூடியிருந்தவர்களை சங்கரர் காணாவிடினும் — அவர்களுடன் பேசாவிடினும் — வேறெங்கோ நடக்கும் ஒரு நிகழ்ச்சியைக் காணத்தான் செய்தார்; வேறு யாரோ ஒருவரிடம் உள்ளத்தால் பேசத்தான் செய்தார்.

அவர் கண்ட காட்சி, காலடியில் குழந்தையாக அவர் விளையாடிக் களித்த இல்லத்தில் நிகழ்ந்து கொண்டிருந்தது. அப்போதெல்லாம் அந்தக் களிப்பில் திளைத்து மகிழ்ந்த அவரது அன்னை இப்போது தாப ஜ்வரத்தில் நினைவு தடுமாறிக் கிடந்தாள்.

ஆஹா, எப்பேர்ப்பட்ட தடுமாற்றம் அது! நினைவு உலகத்துக்கும் நனவு உலகத்துக்குமாக மாறி மாறி நழுவிக் கொண்டிருந்தாள் அவள். வர வர நனவு உலகம் தேயத் தொடங்கியது. அவளுடைய கண் முன் கூடி நின்ற உறவினர்களை — எப்போது அவள் தலைசாயும், அவளது சொத்து சுதந்திரங்களைப் பெறலாம் என்று ஆலாப் பறந்து கொண்டிருக்கும் உறவினர்களை — மீறி, அவர்களது 'கச முச' பேச்சுக்களை மீறி எங்கெங்கோ அவளது மனசு சுற்றிச் சுழன்று வந்தது.

கண் முன்னே ஏதோ ஒளித்திவலைகள் பறக்கின்றனவே ஒழிய உறவினரா, சுற்றத்தாரா யார் அருகேயிருக்கிறார்கள் என்பதுகூட அவளுக்குத் தெரியவில்லை. யார் இருக்கிறார்கள் என்று தெரிந்து கொள்ளவும் அவளுக்கு அக்கறை இல்லை.

காதை அடைத்துக் கொள்கிறது. விட்டு விட்டு ஏதோ ஒரு சப்தம் — 'ஹோ' என்ற ஒலி—மட்டும் கேட்கிறதே ஒழியப் பக்கத்திலுள்ளவர்கள் இன்னது பேசுகிறார்கள் என்று புரியவில்லை. அதைப் புரிந்து கொள்ளவும் விரும்பவில்லை ஆரியாம்பிகை.

ஒளித் திவலைகள் எல்லாம் ஒன்று சேருகின்றன. பூரண சந்திரனைப் போன்ற திவ்ய காந்தி பெற்ற எட்டு வயசுச் சங்கரனுடைய முகம் அவள் முன் தெளிவாக நிற்கிறது. ஒலித் துணுக்குகள் ஒன்று சேர்ந்து அந்த மதி வதனத்தின் மலர் வாயிலிருந்து பனி நீராகச் சிதறுகிறது.

''இனி இந்தக் கோபாலன் தான் உன் பாலன்.... இவனை நீ பார்த்துக் கொண்டே யிருப்பாயானால் இவனும் உன்னைப் பார்த்துக் கொள்வான்.''

பொன் வட்டில் போன்ற சங்கரனின் சுந்தர வதனம் மறைகிறது. முன் போலவே கண்ணில் பூச்சி பறக்கிறது: காதை அடைத்துக் கொள்கிறது. எங்கோ சூனியப் பிரதேசத்துக்கு நழுவுகிறாள் ஆரியாம்பிகை. அதிலிருந்து மீள முடியாமல் அஞ்சி நடுங்குகிறாள்.

'கோபாலா, என் கண்மணி போனதிலிருந்து உன்னையே பார்க்க வேணும் என்றுதான் முயன்றேன். முடியவில்லை. தவங் கிடந்து பெற்று, உலகத்துக்குப் பிச்சை போட்டேனே, உலகப் பெண்களிடமெல்லாம் பிச்சை கேட்கும் அந்த ஆண்டிப் பிள்ளையை மறந்து உன்னை நினைக்க என்னால் முடியவில்லையடா! நான் உன்னைப் பாராததால்தான் நீயும் என்னிடம் பராமுகமாக இருக்கிறாயா? இதோ, மரணவஸ்தையில் துடிக்கிறேனே — இப்போதேனும் நீ உன் குளிர்ந்த கண்ணால் என்னைப் பார்த்து, தகிக்கும் என் உடலையும் உள்ளத்தையும் ஆற்ற மாட்டாயா?'

காலடியில் ஆரியாம்பிகையின் அகம் எழுப்பிய கதறல் சிருங்ககிரியிலிருந்த ஆசாரியரின் காதில் விழுந்தது. உடனே அவரது மனம் சிருங்ககிரியையும், காலடியையும் கடந்து — இந்தப் பிரபஞ்சத்தை எல்லாம் கடந்து — ஸ்ரீ வைகுண்டத்துக்குச் சென்றது. இன்னலுற்று இதயம் பிளந்தவர்களை யெல்லாம் பரிந்தெடுத்துப் பரிபாலிக்கும் பரந்தாமனிடம் அவரது உள்ளம் பேசிற்று. 'கதையும், சங்கமும், சக்கரமும், விமலமான வனமாலையும் தரித்த லோகேசா! கருணைக் கடலான தேவி தழுவும் பரமபத நாதா! உன்னிடம் பிறந்து, உன்னிடம் நிலை பெற்று, உன்னால் ரட்சிக்கப்பட்டு, உன்னிடமேதான் இந்த உலகமெல்லாம் லயமாகிறது. மனிதரும், முனிவரும், தேவரும் மோட்சமடைவது உன்னாலேயே. நீ என் அன்னைக்கும், உன் தரிசனத்தைத் தந்து மோட்சமளிப்பாய். தரிசனம் என்றால் சுதரிசனமும் பாஞ்சஜன்யமும், திருமகளும் கூடிய இந்தக் கோலத்தில் அல்ல. இதனை அவள் தாங்க மாட்டாள். எனது எட்டாவது வயசில் அவளை ஒப்புவித்தேனே அந்தப் பால கிருஷ்ண வடிவில், ஆயர் குழந்தையாக அவள் கண்முன் களிந்து நில்' என்று பிரார்த்தித்தார். *

ஆரியாம்பிகையின் முன் நிழலாட்டமிட்ட ஒளித் துண்டுகள் மீண்டும் கூடுகின்றன. ஆனால் சந்திரனை நிகர்த்த சங்கரனின் வதனமாக அல்ல; கொண்டல் வண்ணக் கருமுகமாக, திருமுகமாக அவை இறுகுகின்றன. மேகத்திலிருந்து

---

* ஸ்ரீ கிருஷ்ணாஷ்டகத்தின் கருத்து.

மழைத்துளி விழுவது போல் கனியாம சுந்தரனின் அதரத்திலிருந்து இனிய குழலிசை எழும்பி ஆரியையின் காதுகளை நிரப்புகிறது. அந்த இசையில் தன்னை மறக்கிறாள் ஆரியை.

மீண்டும் மெல்ல மெல்ல உணர்வு வருகிறது. அவளது கடந்த கால வாழ்க்கையெல்லாம் சாரமாக அடர்ந்து ஒவ்வொரு கணத்திலும் ஒவ்வொரு ஆண்டு ஓடுகிறது. பிள்ளைப் பேறில்லாமல் தவித்தது, பெருமானைப் பிரார்த்தித்தது, அவள் கனவினில் தோன்றியது, அவளது மணி வயிற்றில் ஓர் ஒளி குடி புகுந்தது, குழந்தை பிறந்தது, அந்தக் குழந்தையைக் கண்டு தானும் கணவரும் குதூகலித்தது எல்லாம் நினைவில் படிந்தது. மகாநுபாவராகிய அந்தக் கணவர் தன்னைக் கைவிட்டுப் போனதும் ஞாபகம் வந்தது.

இதென்ன விந்தை! மறைந்து போன அவர் இதோ மீண்டும் தோன்றுகிறாரே! ஏதோ சொல்கிறாரே!

''ஆரியா! என்னை மகாநுபாவன் என்று வாழ்த்தினாய், உண்மைதான். சங்கரன் யார் என்று புரிந்து கொண்டு அநுபவித்த மகாநுபாவன்தான் நான். ஆனால் அதை விடப் பெரிய அநுபவமாகிய தியாகத்தை நுகர்ந்தவளல்லவா நீ! சங்கரனுக்கு என்னநேர்ந்துவிடுமோ, அவன் பக்கத்தில் இருக்கும் போதே என் பிராணனை விட வேண்டுமே என்று நான் சுயநலமாகப் பிரார்த்தித்தேன்; உன் சௌமங்கலியத்தை அபகரித்தேன். நீயோ அந்தத் தெய்வக் குழந்தையை உயிருடனேயே மனமொப்பி உலகுக்காகத் துறந்தாய். உன் தியாக அநுபவத்துக்கு ஈடு இணை உண்டா...?'' என்றார்.

உடனே அந்தத் தியாக சம்பவமும் ஆரியாம்பிகையின் மன அரங்கில் மீண்டும் நிழலாடியது. சங்கரன் சந்நியாசம் பூணத் தான் அநுமதி அளித்ததும், அவன் தன்னைப் பற்றி ஒரு நாளும் எண்ண வேண்டாம் என்று கூறியதும், ''நீ போய்.... வராதே'' என்று கூறி அடியோடு அவனை விலக்கியதும் நினைவு அலைகளாகச் சுருண்டன.

''அம்மா! என்னை அப்படி ஒரேயடியாகப் புறக்கணித்து விடாதே. கணவன் இல்லாத அகதிப் பெண் ஒருத்தியைப் பொறுமையும் பொருள் ஆசையும் நிறைந்த பங்காளிகளிடம் காட்டிக் கொடுத்து விட்டு ஓடிய துரோகியாக என்னை ஆக்காதே. கடைசியாக நினைவிழக்கும் முன் நீ என்னை நினைத்துக் கொள். நான் இந்நாட்டின் எந்த மூலையில் இருந்தாலும் சரி, எந்த அகால நேரமாக இருந்தாலும் சரி, எவ்வளவு முக்கியமான அநுஷ்டானம் செய்து கொண்டிருந்தாலும் சரி அதையெல்லாம் பொருட்படுத்தாமல் உடனேயே உன்னிடம் ஓடி வந்து விடுகிறேன். உன் இறுதி விநாடிகளில் உன்னை என் மடியில் சாய்த்துக் கொண்டு ஆசுவாசப்படுத்தி உன்னை மேல் உலகம் அனுப்பி வைக்கிறேன். உனக்கு உத்தமமான உயர் கதி கிடைக்கச் செய்கிறேன். உனக்கு ஒரே பிள்ளையாகப் பிறந்ததற்காக நானே தகனமும் செய்கிறேன்.''

சங்கரன் அன்று அலறியது இன்று ஆரியாம்பிகையின் காதில் ஸ்பஷ்டமாகத் தொனித்தது; உடல் புல்லரித்தது.

'அப்படியானால் தனக்கு உடல் உணர்வு மீண்டும் உண்டாகிக் கொண்டு வருகிறதா என்ன? கஷ்டமே! ஒரேயடியாக நினைவு தப்பி மாளாமல் மீண்டுமா ஞாபகம் வரவேணும்? ஆம். சிறிது சிறிதாகப் பிரக்ஞை வலுப் பெற்றுக்கொண்டே வருகிறது. பல ஆண்டுகளுக்குமுன் ஒருமுறை ஆலவாய்புழையில் மயக்கமாகிக் கிடந்தபின் தெளிவு பெற்றோமே அதைப் போலவே புலன்கள் மீண்டும் செயலுக்கு வருகின்றன.

'அப்போது..... கண்ணை விழித்துப் பார்த்த போது தன் முகத்துக்கு நேர் எதிரே சங்கரனின் கவலை தோய்ந்த கோமள முகத்தைக் கண்டோம். அவன் தன்னை மடியில் கிடத்திக் கொண்டிருக்கிறான் என்றறிந்து விச்ராந்தி பெற்றோம். இப்போது......?'

ஆரியை பெரும் பிரயத்தனம் செய்து கண்களைத் திறந்தாள்! என்ன ஆச்சரியம்? அவள் கண்களுக்கு நேர் எதிரே கவலை தோய்ந்து காணும் அந்த முகம் சங்கரனுடையதுதானே?

ஆரியாம்பிகையின் உடல் குலுங்கியது. அப்போது அவளுடைய கூடல் சங்கரனுடைய மடியில் உரசியதிலிருந்து அவன் தன்னை அன்று போலவே மடி மீது சாய்த்துக் கொண்டிருக்கிறான் என்றும் ஊகித்தாள் அவள்!

'ஆகா! கடைசியில் தான் இவ்வளவு காலம் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்தது வீண் போகவில்லை! தனக்கு தேகப் பிரக்ஞை ஏற்பட்டதும் வியர்த்தமாகவில்லை! கண்களால் சங்கரனைக் கண்டாயிற்று. உடலால் அவனை ஸ்பரிசித்தாயிற்று. அதற்கும் மேல், இதோ செவிகளால் அவனுடைய இன்மொழியையும் கேட்கிறோம்!'

''அம்மா, அம்மா, என்னைத் தெரியவில்லை? நான்தான் அம்மா, உன் சங்கரன் வந்திருக்கிறேன்'' என்றார் ஆசாரியர் அன்பும், துயரமும் அலைமோதும் குரலில்.

(தொடரும்)

# லிஸ்டரின் ஆன்ட்டிஸெப்ட்டிக் அனுதினம் உங்களைக் காக்கும்

நம் வாயிலுள்ள கதகதப்பான ஈரமே, கிருமிகள் தோன்றிப் பெருகுவதற்கு வெகு வாய்ப்பானது. பல்லிடுக்குகளில் தங்கிவிடும் உணவுத் துணுக்குகளோ கிருமிகளை எதிர்கொண்டழைப்பவை. கிருமிகள் பெருகுவதைத் தடுத்து நிறுத்துவது ஆன்ட்டிஸெப்ட்டிக் (நச்சுமுறி மருந்து). வாய்கொப்பளிப்பதற்கான ஆன்டிஸெப்ட்டிக்காகிய லிஸ்டரின் உடனடியாக செயல்படுகிறது: பட்ட மாத்திரத்தில் கிருமிகளைக் கொல்வதிலே குறிதவறாத, இதகுணமுள்ள பாதுகாப்பு மருந்து. இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.





உணவருந்திமுடிந்த ஒவ்வொரு முறையும் லிஸ்டரின் கொண்டு வாய்கொப்பளித்தீர்களானால் உங்கள் மூச்சில் இனிமையும் புதுமையும் நிலவும். வெற்றிலை புகையிலை தரிப்போர் லிஸ்டரின் கொண்டு பலமாக ஒருமுறை வாய்கொப்பளித்தால் அறவே சுத்தமடையும். இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.

லிஸ்டரின் உபயோகிப்போருக்கு சளி, இருமல், தொண்டைப் புண் ஆகியவற்றினின்று அதிக பாதுகாப்புண்டு எனப் பரிசோதனைகள் நிரூபித்துள்ளன. ஏதும் கலவாமல் லிஸ்டரினை அப்படியே உபயோகித்து தினம் இரு முறையாவது வாய்கொப்பளித்தீர்களானால், கூடுதலான பாதுகாப்பும் பெறுவீர்கள். இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.



அனுதினம் லிஸ்டரின் பழக்கம்: கிருமிகளிடமிருந்து வலிய முறையில் பாதுகாப்புக்கு வழி. பலதிறப்பட்ட பயனுள்ள, பத்திரமான நச்சுமுறி மருந்தாகிய லிஸ்டரின் இருக்கையிலே, பிணிவாராமல் காப்பதே சிகிச்சையினும் பன்மடங்கு மேல்.

உங்கள் குடும்பத்திற்கு லிஸ்டரின் பாதுகாப்பை அளியுங்கள்.

லிஸ்டரின் ஆன்ட்டிஸெப்ட்டிக்: 3, 7 மற்றும் 14 அவுன்ஸ் சீசாக்களிலே.

லிஸ்டரின் உமது அன்றாடப் பழக்கமாகட்டும்...

வார்னர் லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

WL 1368 TAM

# பொய்ம்மை முரண்

வியார்ஜி

"டே, கடன்காரா! வேண்டாம், வந்து விடுடா....!"

'அந்தக் கடன்காரன்' அவன் சொல்வதைக் கேட்பதாக இல்லை. நீலா தன் அருமைத் தம்பியைத்தான் 'அர்ச்சனை' செய்தவாறு துரத்திக் கொண்டு வந்தாள்.

"வா, வா நீ என் கையில் அகப்படாமலா போகப் போகிறாய். உழக்கு ரத்தம் வருகிற மாதிரி' நறுக்கு'னு குட்டி விடுகிறேன், பார்."

பாலு வெளியிலிருந்த படியே கௌரவத்தை இழக்காமலேயே சமநிலைச் சமாதான உடன்படிக்கைக்கு முயன்று பார்த்தான்.

"என் கையெழுத்து ஒன்றும் உன்னுடையதுக்குக் குறைஞ்சு போயிடலை! இன்னும் கேட்டால் என்னுதுதான் நல்லா யிருக்கு!"

"அதெல்லாம் உன்னை யாருடா கேட்டா? உன்னை யார் என் புத்தகத்தைத் தொடச் சொன்னது? அதுக்குப் பதில் சொல்லு!"

நீலாவின் கல்லூரிப் புத்தகங்கள் இரண்டு மூன்றை எடுத்து முதல் பக்கத்தில் "கே. என். நீலா; பி. எஸ்ஸி. முதல் வகுப்பு" என்று கொட்டை எழுத்தில் பெயர், வகுப்பு, கல்லூரி எல்லாவற்றையும் எழுதி விட்டிருந்தான் பாலு. ஏற்கனவே முதல் பக்கத்தில் மேலே வலது ஓரத்தில் நீலா எழுதியிருந்தாள். இப்பொழுது அவற்றையே நட்ட நடுவில் கொட்டை எழுத்தில் அவன் மறுபடியும் எழுதியிருப்பதைப் பார்த்தபோது அவளுக்கு எப்படி யிருக்கும்?

நீலா உள்ளே திரும்பிப் போக ஆரம்பித்தாள். பாலு மெதுவாக





முன்னேறினான். திடீரென்று நீலா திரும்பவே முன்னை விட வேகமாக வெளியே ஓடினான் பாலு.

அப்பொழுதுதான் அது நடந்தது.

பாலு வெளியே ஓடிய வேகத்தில் அங்கே ஓரமாகச் சைக்கிளில் வந்து கொண்டிருந்த சுந்தரத்தின் மீது மோதி விட்டான். எதிர்பாராது நேர்ந்த மோதலினால் சமநிலை குலைந்த சுந்தரம் அப்படியே சாய்ந்துவிட்டான். காலிலே நல்ல சிராய்ப்பு. முழங்கையில் தோலே கழன்று ரத்தக் காயமாகி விட்டது.

'யார் இப்படிக் காட்டுத்தனமாக மோதிக் கீழே தள்ளியது?'' என்று சுந்தரம் எழுந்து பார்ப்பதற்குள் பாலு ஓடிச் சென்று தன் அக்காளிடம் தஞ்சம் புகுந்துவிட்டான்.

நிமிர்ந்து பார்த்த சுந்தரத்தின் எதிரில் குற்றம் செய்து விட்ட மிரட்சியோடு நிற்கும் பாலுவும் அவன் அருகில் அந்த மிரட்சிக்குக் கடுகளவும் குறையாத மருட்சியில் கைவிரலைக் கடித்துக் கொண்டு நிற்கும் நீலாவும் பட்டார்கள்.

''டே, மாமாவிடம் 'சாரி' சொல்லுடா. மோதித் தள்ளி விட்டதுமல்லாமல் குறவன் மாதிரி விழித்துக் கொண்டு நிற்கிறான்'' என்று பாலுவைப் பார்த்துச் சொன்னாள் நீலா.

''பரவாயில்லை. சின்னப் பையன்தானே. ஏதோ விளையாட்டுப் போக்கிலே வந்திருப்பான். நான் இன்னும் கொஞ்சம் ஜாக்கிரதையா வந்திருக்கணும். அவனை ஒன்றும் செய்யாதீர்கள்'' என்றான் சுந்தரம் அசட்டுச் சிரிப்புடன்.

பாலுவுக்கு இப்பொழுது கொஞ்சம் தைரியம் வந்தது. ''சார்! உண்மையில் 'சாரி' சொல்ல வேண்டியது எங்க அக்காதான் சார். என்னைத் துரத்திப் பிடிக்க வந்தாள். இல்லாவிட்டால் நான் இப்படிக் கண் மண் தெரியாமல் ஓடி வந்தே இருக்க மாட்டேன்.''

''சரிதான். சும்மா இருடா. மோதித் தள்ளிவிட்டதுமில்லாமல் பேசிக் கொண்டு நிற்கிறான். பார், அவர் கையிலே சிராய்த்து விட்டிருக்கிறது. சார்! நீங்க வெளியிலே நிற்கிறீர்களே! உள்ளே வாருங்கள். மருந்து போட்டுக் கொண்டு போகலாம்'' என்று சுந்தரத்தைக் கனிவுடன் கூப்பிட்டாள்.

''அடடே! அதெல்லாம் எதற்கு? காயம் ஒன்றும் பிரமாதம் இல்லை! நான் வருகிறேன். ரொம்ப நன்றி!'' என்று கிளம்ப ஆரம்பித்தான் சுந்தரம்.

நீலா வீட்டினுள் ஓடிப் போய் டிஞ்சர், பஞ்சு, ஓர் அகலமான பாத்திரம். ஒரு செம்பில் தண்ணீர். ஒரு 'டெட்டால்' பாட்டில்! இவற்றுடன் திரும்பினாள். ஏது இந்தப் பெண், டாக்டருக்குப் படிக்கும் பெண்ணோ?

தனது சந்தேகத்தை அவளிடமே கேட்டு விட்டான் ''நீங்கள் மெடிகல் ஸ்டூடண்டா?''

நீலா பதில் சொல்வதற்கு முன்னால் பாலு முந்திக் கொண்டான் ''பி. எஸ்சி. முதல் வருஷம்.''

அவள் ஒவ்வொரு கட்டத்திலும் சொல்லிக் கொடுக்க, சுந்தரம் காயத்தைத் துடைத்து, டிஞ்சரையும் பஞ்சில் நனைத்துப் போட்டுக் கொண்டான். 'ஜில்' என்று காயம் எரிந்தது.

''ஆகா, இப்பொழுது எவ்வளவோ பரவாயில்லை'' என்றான் அவன் சம்பிரதாயமாக.

''இப்பொழுதுதானே முன்னைவிட நன்றாக எரியும். நீங்களானால் பரவாயில்லை என்கிறீர்களே?'' என்று கூறிச் சிரித்தாள் நீலா.

அப்பொழுதுதான் தனது பதிலில் இருந்த அசட்டுத்தனம் புலப்பட்டது அவனுக்கு. என்ன சொல்லி அதைச் சமாளிப்பது என்று அவன் யோசிப்பதற்குள் அதற்கு இடமே அளிக்காமல் உள்ளே வந்தார் நீலாவின் தாத்தா சிவசாம்பன். நீலா சுந்தரத்தை எந்தச் சங்கடத்துக்கும் உள்ளாக்காமல் மிகுந்த சகஜ பாவத்துடன் தனது தாத்தாவை அவனுக்கு அறிமுகப்படுத்தியது சற்று வியப்பாகத்தான் இருந்தது.

''இவர்....'' என்று அவனைப் பார்த்தபடியே அவள் இழுத்த போது அவன், ''பெயர் சுந்தரம். ஏ. ஜி. ஆபீசில் உத்தியோகம்'' என்று முடித்து வைத்தான்.

பாலு, எங்கே தான் மோதித் தள்ளியதைப் பெரிய குற்றமாகத் தன் மீது நீலா சாட்டப் போகிறாளோ என்று பயந்து அதற்கு இடம் கொடுக்காமல், நீலா துரத்திக் கொண்டு வந்ததையும், திரும்புவது போல் போக்குக் காட்டித் துரத்தியதையும் சற்று அளவுக்கு அதிகமாகவே விவரித்துவிட்டு, தான் மோதிய இடத்தைச் சட்டென்று சொல்லி நிறுத்தி விட்டான்.

ஆனால் சிவசாம்பன் அவன் சொன்னதையெல்லாம் கேட்டு விட்டு அதன் பிறகும் தமது கையில் இருந்த வாக்கிங் ஸ்டிக்கால் 'பொட்'டென்று அவனை அடித்து, ''எலே! என்னடா அப்படிக் கண்மண் தெரியாத ஓட்டம்? வா, சொல்கிறேன். உனக்கு இருக்கு, வட்டியும் முதலுமா அப்புறம்'' என்று உறுமிய போது, பாலுவுக்குப் பெரியவர்கள் இரக்கும் தன்மையிலும் நடு நிலையிலுமே நம்பிக்கை போய் விருந்த சோர்வு ஏற்பட்டு விட்டது!

''உங்கள் பேத்தி ரொம்ப உதவியாக இருந்தாள் சார். முதல் உதவி சிகிச்சை யெல்லாம் ரொம்பவும் கச்சிதமாகச் செய்தாள்....''

''தெரியுமே! அதெல்லாம் எங்கள் நீலாவுக்குச் சொல்லிக் கொடுக்கவே வேண்டாம்ளு. ரொம்ப நல்ல பெண்! குடிகையான பெண்! பாட்டும் அதே மாதிரித்தான். இன்னிக்கு முழுதும் கேட்டுக் கொண்டிருக்கலாம்'' என்று அவர் வேறு தம் பங்குக்கு முடிவில்லாமல் புகழ ஆரம்பித்த போது நீலா குறுக்கிட்டு அவரை நிறுத்த வேண்டியிருந்தது.

சுந்தரம் சிரித்துக் கொண்டே விடைபெற்றுக் கொண்டு சென்ற பிறகும் சிறிது நேரம் அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்த கிழவர், ''பார்த்தால் ரொம்ப நல்ல பையன் மாதிரிதான் இருக்கிறான்'' என்று சொல்லிக் கொண்டார்.

நீலா ஒன்றும் பதில் பேசாமல் செம்பு, டெட்டால் பாட்டில் எல்லாவற்றையும் வீட்டினுள் எடுத்துக் கொண்டு போனாள்.

அதன்பிறகு சுந்தரம் அந்தப் பக்கம் போகும் போதும் வரும் போதும் அடிக்கடி அவர்கள் வீட்டுக்கு வந்து பேசிக் கொண்டிருந்தான்.

சிவசாம்பனே பல தரம் அவனை இழுத்து வைத்துப் பேசிக் கொண்டிருப்பார். காப்பி உபசாரமெல்லாம் பலமாகத்தான் செய்வார். பல சந்தர்ப்பங்களில் நீலாவும் அவர்கள் பேச்சில் கலந்து கொள்வது உண்டு. என்றாலும் நீலா இல்லாமலேயே அவர்கள் ஊர் உலக விஷயங்களை அலசிக் கொண்டிருப்பதும் உண்டு.

ஆரம்பத்தில் எல்லாம் விடை பெற்றுக் கொண்டு போகும் போது அவள் இல்லாவிட்டாலும் அவளைக் கூப்பிட்டுப் போய் விட்டு வருவதாகச் சொல்லிக் கொண்டு போகிறவன் அதையும் இப்பொழுது செய்வதில்லை. இரண்டு மூன்று முறைகள் அப்படி நடந்துவிட்ட பிறகு அவளுக்கு ஒரே எரிச்சலாகிவிட்டது.

அன்றும் அப்படித்தான். நீலா மாடியில் தனது அறையில் இருந்தாள். சுந்தரம் சைக்கிளை எடுத்துக் கொண்டு கிளம்பும் தருணம். நீலா சாளரத்தின் அருகில்தான் நின்று கொண்டிருந்தாள். கீழே இருந்தவண்ணமே மேலே அண்ணாந்து பார்த்துக் கையையாவது ஆட்டுவான் என்று நீலாவுக்கு இலேசான சபலம்.

ஆனால் என்ன ஏமாற்றம்! சுந்தரம் பேசாமல் ஒரு பரபரப்பும் இல்லாமல் சைக்கிளில் ஏறிப் புறப்பட்டு விட்டான். ஒரு முறை கூடத் திரும்பிப் பார்க்கவில்லை.

நீலா உதட்டைக் கடித்துக் கொண்டாள். அவளுக்கு ஏனோ அழுகை கூட வந்து விடும் போலிருந்தது. புத்தகங்களை எடுத்து மாற்றி மாற்றி மேஜை மீது 'தொப்' 'தொப்' என்று போட்டாள். மேஜை டிராயரைக் காரணமில்லாமல் இரண்டு மூன்று முறை இழுத்துப் 'பட் பட்' என்று மூடினாள்.

''இந்த மனிதர் எதற்கு இங்கே அடிக்கடி வரணும்?'' என்று தனக்குள்ளேயே ஆத்திரத்துடன் முணுமுணுத்துக் கொண்டாள். சிறிது நேரம் யோசித்து விட்டுப் பேனாவைத் திறந்து நோட்டுப் புத்தகத்தையும் பிரித்து வைத்துக் கொண்டாள். மறுபடியும் கொஞ்ச நேரம் பேசாமலிருந்தாள். பிறகு 'மட மட' என்று என்னவோ எழுதினாள். அதைக் கவரினுள் போட்டு ஒட்டினாள். பேனாவைத் திறந்து கவரின் மேல், ''ஸ்ரீ சுந்தரம்'' என்று எழுதிக் கீழே கோடு போட்டாள். அதை எப்படிச் சுந்தரத்திடம் சேர்ப்பிப்பது? சட்டென்று ஒரு யோசனை தோன்றியது. ''பாலு! நம்ம வீட்டுக்கு வருகிறாரே, சுந்தரம் மாமா அவரை நீ வேறு எங்கேயாவது பார்த்ததுண்டா?'' என்று பாலுவைக் கூப்பிட்டுக் கேட்டாள்.

''ஓ! அடிக்கடி கடைத் தெருவில் பார்ப்பேனே. ஏன், என்ன வேணும்?''

நீலாவுக்கு என்ன சொல்லி அந்தக் கடிதத்தைக் கொடுத்தனுப்புவது என்று ஒரு கணம் தயக்கமாக இருந்தது. 'தாத்தாவுக்குத் தெரிய வேண்டாம்' என்று சொன்னாலும் வந்தது ஆபத்து! முதலில் அதைத் தெரிவித்து விட்டுத் தான் மறு காரியம் பார்ப்பான் பாலு. அதற்காக வேறு யுக்தியைக் கையாண்டாள் அவள்.

''ஒன்றுமில்லே. சில புத்தகங்களின் பட்டியல் எழுதி வைத்திருக்கிறேன். அவர் எங்கிருந்தாவது வாங்கிக் கொடுக்க முடியுமா என்று கேட்பதற்காகத்தான்.''

''ஓ! எங்கிட்டே கொடேன். நான் அவரிடம் கொடுக்கிறேன்.''

நீலா கவரை எடுத்துக் கொடுத்தாள்.

''இந்தா பத்திரம்! வெறும் காகிதமாக இருந்தால் நீ எங்கேயாவது தொலைத்து விடுவாய் என்று நினைத்துக் கவருக்குள் போட்டே வைத்திருக்கிறேன். பத்திரம்!'' என்று சாதாரணமாகச் சொல்வது போல் சொல்லிக் கொடுத்தாள்.

பாலுவும் ''சரி, சரி'' என்று தலையை ஆட்டி அதை வாங்கிக் கொண்டான்.

''சரி, இப்ப எங்கே கொண்டு போகிறாய் அதை?''

''நான் என் புத்தகத்துக்குள் பத்திரமாக வைத்திருந்து அப்புறமாக் கொடுக்கிறேன்.''

''சரி, பத்திரம்! ஜாக்கிரதை!'' என்று எச்சரித்தாள் நீலா.

தாத்தா வீட்டில் இருந்துகொண்டே படித்துக் கொண்டிருந்தார்கள் நீலாவும் பாலுவும்.

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்

உபயோகித்து நாள் முழுவதும் குளுமையையும்
நறுமணத்தையும் அனுபவியுங்கள்

பட்டுப்போன்ற மென்மை, அன்றலர்ந்த மலரின்
குளுமை, துல்லிய நறுமணம்—இவற்றின் சேர்க்கைதான்
பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்!
அசௌகரியமான வியர்வையை விரைவில் உறிஞ்சு
கிறது...நாள் முழுவதும் நறுமணத்தோடு இதமாக
இருக்க உதவுகிறது. அதை வருடம் பூராவும்
உபயோகித்துப் பரவசமடையுங்கள்!




சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

JWT-P 3274

நீலாவைத் தொடர்ந்து படிக்க வைப்பதாக எண்ணம் இல்லை, அவர்கள் குடும்பத்தினருக்கு. இடையிலே நல்ல வரனாகக் கிடைத்தால் கலியாணத்தை முடித்து விடலாம் என்பதுதான் எண்ணம்.

அதற்கேற்றமாதிரி சுந்தரத்தைப் பார்த்த பிறகு சிவசாம்பனுக்கு அவன் மீது ஒரு கண் விழுந்து விட்டதென்று தான் சொல்ல வேண்டும். பல முறை அவனோடு நெருங்கிப் பழகியதில் அவனைப் பற்றி அவருக்கு மிகுந்த நல்ல அபிப்பிராயமே விழுந்திருந்தது. நீலாவின் பெற்றோர்களுக்கும், இம்மாதிரி ஒரு வரன் இருப்பதாகவும் தாம் விசாரித்தவரை நீலாவுக்குத் தகுந்த இடம் என்றே தோன்றுவதாகவும் எழுதியிருந்தார். அவர்களும் அவருக்குச் சரி என்று பட்டால் மேற்கொண்டு ஏற்பாடுகளைச் செய்யலாம் என்று சம்மதம் தெரிவித்திருந்தார்கள்.

சிவசாம்பன் அதைப் பார்த்த போது சற்றுத் திடுக்கிட்டு விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். எதேச்சையாகப் பாலுவின் புத்தகங்களைப் புரட்டிய போதுதான் அந்தக் கவர் அவர் கண்களில் பட்டது. கடிதத்தைப் பார்த்துக் கொண்டே வரும் போது அவருக்கு ஒரே ஏமாற்றம், திகைப்பு, அதிர்ச்சி எல்லாம் ஏற்பட்டு விட்டன!

சுந்தரம் அடிக்கடி அவர்கள் வீட்டுக்கு வந்து செல்வதை அவள் விரும்பவில்லை என்றும், அவன் வருவது அவளைச் சாக்கிட்டுத்தான் என்றால் முதலிலேயே அது பற்றி அவளுடைய கருத்தை அவனுக்குச் சொல்லி விடுவது அவள் கடமை என்றும், கதைகளில் வருவது மாதிரி அவளைக் கண்டதும் அவனுக்குக் காதல் ஏற்பட்டிருக்கும் என்ற எண்ணத்தை அவன் வளர்த்துக் கொண்டிருந்தால் அது முற்றிலும் தவறு என்றும் அம்மாதிரி எண்ணமே அவளுக்குக் கிடையாது என்றும் எழுதியிருந்தாள். அவள் எழுதியிருந்த கண்டிப்பான தோரணை அவரைச் சற்றுத் திகைக்கத்தான் வைத்தது !

நீலா எந்த மன நிலையில் அதை எழுதினாள்; அதை எழுதுவதற்கு என்ன காரணம் என்று அவரால் ஊகிக்க முடியவில்லை. வரிகளை அடித்து அடித்து எழுதியிருப்பதைப் பார்த்தால் ஏதோ வேகத்தில் எழுதியிருக்கிறாள் என்று மட்டும் அறிந்து கொண்டார்.

'சரி. இருக்கட்டும், பார்த்துக் கொள்ளலாம்' என்று சொல்லியபடி அக்கடிதத்தையும் கவரையும் எடுத்து வைத்துக் கொண்டார்.

சுந்தரம் வெளியூருக்குக் காரியாலயத் தணிக்கை சம்பந்தமாக முகாம் போகப் போகிறான் என்பதும் திரும்பி வருவதற்கு ஒரு மாதத்துக்கு மேலாகும் என்பதும் சிவசாம்பனுக்கு மட்டுமே தெரியும். போவதற்கு முன்பு அன்று பகலில் வந்து சொல்லி விட்டுப் போனான். அப்பொழுது நீலா கல்லூரியிலிருந்து வரவில்லை. அவன் போகும் விஷயத்தை எல்லாரிடமும்—எல்லாரிடமும் என்பது நீலாவுக்காகத்தான் என்று அவருக்கா தெரியாது?—சொல்லி விடும்படி அவனே அவரிடம் கேட்டுக் கொண்டிருந்தான். ஆனால் அவர் தாம், நீலாவிடம் அதை இது வரை சொல்லாதது நல்லதாகத்தான் போயிற்று என்று நினைத்துக் கொண்டார்.

நிரம்ப அனுபவம் வாய்ந்த சிவசாம்பன் ஒரு காரணமாகத்தான் அப்படி நடந்து கொண்டார். பல முறை யோசித்துப் பார்த்த பிறகு நீலாவின் நடத்தைக்கு மனத்தத்துவ ரீதியில் ஒரு விளக்கம் கண்டுபிடித்து வைத்திருந்தார். அது சரியா தவறு என்று சோதித்துப் பார்க்க இந்த இடைக்காலத்தைப் பூரணமாகப் பயன்படுத்திக் கொள்ள விரும்பினார்.

கடிதம் எழுதிய மறுநாள் நீலா சுந்தரம் வழக்கமாக வரும் நேரத்தில் மாடியில் தனது அறைச் சாளரத்தின் வழியாகத் தெருவைப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தாள். நேரம் ஆக ஆக அவளுக்கு அலுப்புத் தட்டியது! சுந்தரம் வந்தபாடில்லை! மறு நாளும் வந்தது. ஆனால் சுந்தரம்தான் வரவில்லை! அவளுக்குக் கணத்துக்குக் கணம் தவிப்பு அதிகமாகியது. அது ஏதோ ஒருவிதமான தவிப்புத்தான் என்று அவள் தனக்கு இஷ்டமில்லாமலேயே ஒப்புக் கொண்டாள். இப்பொழுது அவளுக்குத் தன்னுடைய மனத்தின் மீதுதான் கோபம் கோபமாக வந்தது. அவளுடைய மனம்தான் அவளை வஞ்சித்து ஏமாற்றி விட்டிருக்கிறது!

வாஸ்தவத்தில் சுந்தரத்தின் மீது கொண்ட தனது அதீதமான அன்புதான் — அதைச் சமன்படுத்தப் போதுமான உணர்ச்சி எதிர்த் தரப்பிலிருந்து கிடைக்காத சூழலில் — தனது மனத்தில் வேண்டுமென்றே அதற்கு நேர் எதிரிடையான ஒரு நிலையைக் கற்பித்திருக்கிறது என்று அவளுக்கு இப்போது தெரிந்து விட்டது. அந்த முரண்பாடு மெய்யானதே அன்று! அந்தப் பொய்ம்மை முரணுக்கு எவ்வளவு எளிதாக அவள் இரையாகி விட்டாள் என்று நினைத்த போது அவளுக்குத் தான் பலம் என்று நினைத்த தனது பலவீனத்தின் பொருட்டு ஒரு கழிவிரக்கமே ஏற்பட்டது. அந்தக் கடிதத்தைத் தான் எழுதியது ஒரு மகத்தான முட்டாள்தனம் என்று அவள் தனக்குள் ஒப்புக் கொண்டாள்.

மறு நாள் பாலுவைக் கூப்பிட்டு விசாரித்தாள். ''ஏண்டா! அந்தக் கவரைச் சுந்தரம் மாமாவிடம் கொடுத்த போது அவர் ஏதாவது சொன்னாரா?''

அப்பொழுதுதான் பாலுவுக்கு அதன் ஞாபகமே வந்தது. இன்னும் கொடுக்கவில்லை என்று சொன்னால் அவள் திட்டுவாள் என்று நினைத்து, ''ஒன்றும் சொல்லவில்லையே. வாங்கிப் பையில் போட்டுக் கொண்டார். அவ்வளவுதான்'' என்று துணிந்து ஒரு பொய்யைச் சொன்னான்.

பின்னும் தனது புஸ்தகங்களை எடுத்துப் பார்த்த போது கடிதத்தையே காணாதது அவனுக்குத் 'திக்'கென்றது. அந்தச் சமயத்துக்குப் பொய் சொல்லித் தப்பித்துக் கொண்ட பிறகு சுந்தரத்திடம் அதைச் சேர்ப்பித்து விடத்தான் அவன் நினைத்திருந்தான். ஆனால் கடிதமே காணாமல் போன பிறகு பேசாமலிருப்பதுதான் புத்திசாலித்தனம் என்று நினைத்துச் சும்மா யிருந்தான்.

சிவசாம்பன் நீலாவின் நடவடிக்கைகளைக் கவனித்துக் கொண்டே வந்தார். சாதாரணமாக இருந்திருந்தால் நீலாவிடம் ஏற்பட்டிருக்கும் மாறுதல் சட்டென்று விளங்கியிருக்

காது. ஆனால் அவர்தான் அதைக் கவனிப்பதற்கென்று காத்துக் கொண்டிருக்கிறாரே?

நீலா தானே தாத்தாவிடம் சுந்தரம் வராதது பற்றி விசாரிக்கலாமா என்று இரண்டு மூன்று முறை எண்ணி ஏனோ கேட்காமல் விட்டு விட்டாள்.

ஆனால் சிவசாம்பன் முந்திக் கொண்டு விட்டார். தமக்கு ஒன்றும் தெரியாதமாதிரி இருப்பதுதான் பேத்தியின் மன உணர்வுகளை நுணுக்கமாக ஆராய்வதற்கு வசதியாக இருக்கும் என்று எண்ணினார் அவர். "ஏம்மா! இந்தச் சுந்தரத்தைக் காணோமே இரண்டு நாளாக?" என்று அவரே மெதுவாக நீலாவிடம் கேட்டார்.

"அதுதானே எனக்கும் தெரியவில்லை!" என்றாள் நீலா. பிறகு உதட்டைக் கடித்துக் கொண்டாள். தான் சொன்ன விதத்திலிருந்து தானும் அதே விஷயத்தைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிற மாதிரி அல்லவா தாத்தா எண்ணிக் கொள்வார்!

சிவசாம்பன் அவளைக் கூர்ந்து பார்த்தார். முதல் முறையாகத் தாத்தாவின் பார்வையையே சந்திக்க முடியாதபடி அவளது குற்றமுள்ள நெஞ்சு தடுத்தது.

ஏதாவது சொல்ல வேண்டும் என்பதற்காகவே "ஏதாவது அவருக்கு வேலை இருக்கும். அதுதான் வரவில்லை போலிருக்கிறது" என்று சொன்னாள்.

"அப்படித் தெரியவில்லையே! அப்படியே இருந்தாலும் இரண்டு நாளா அவன் வராமல் இருக்க மாட்டானே" என்றார் சிவசாம்பன் வேண்டுமென்றே.

நீலா, எது அவள் வாயிலிருந்து வரக்கூடாது என்று வேண்டிக் கொண்டிருந்தாளோ அதையே அவர் சொன்னபோது மிகவும் ஆயாசமடைந்து விட்டாள். நீலாவின் முகம் விழுந்து விட்டதைப் பார்த்த போது சிவசாம்பனுக்குப் பாவமாக இருந்தது. 'ஐயோ! பெண்ணே!' என்று நினைத்துக் கொண்டார்.

அதற்குப் பிறகு சிவசாம்பனோ பாட்டியோ என்றாவது சுந்தரத்தைப் பற்றிய பேச்சை எடுக்க வேண்டுமே! ஊஹூம்! எல்லாரும் சதித் திட்டமிட்டு மௌனம் சாதித்ததுபோல் இருந்தது அவளுக்கு.

அன்று வேண்டுமென்றே நீலாவின் கல்யாணப் பேச்சை அவள் இருக்கும் போதே தமது மனைவியைக் கொண்டு ஆரம்பிக்கச் சொன்னார். நீலா அங்குதான் ஏதோ செய்து கொண்டிருந்தாள்.

அந்தப் பேச்சு அவள் காதில் பட்டதுமே, சிவசாம்பன் எதிர்பார்த்த மாதிரி நீலா எரிந்து விழுந்தாள். தனக்கு இப்பொழுது கல்யாணமே வேண்டாம் என்று மறுத்தாள்.

"என்ன. இந்தப் பெண் இப்படிச் சொல்கிறதே?" என்று ஆரம்பித்தாள் பாட்டி.

"உம். எந்தப் பெண்தான் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தவுடன் இப்படிச் சொல்லாமலிருக்கிறது?" என்றார் சிவசாம்பன்.

"இல்லை தாத்தா. நான் சீரியஸ்ஸாகத்தான் சொல்கிறேன்" என்றாள் நீலா. அவளுக்கு முகம் சிவந்து உடல் படபடத்தது.

"ஏண்டியம்மா! இப்ப நம்ம சுந்தரமே இருக்கான். அவனை மாதிரி ஒருத்தனை—இல்லை அவனையேன்னுதான் நினைச்சுக்கோயேன்—பண்ணிக் கொள்ள உனக்குக் கசக்கிறதோ? உன் இஷ்டத்தைச் சொன்னால், சுந்தரம் வரட்டும், நான் அவனை நேருக்கே கேட்டு விடுகிறேன்" என்றாள் பாட்டி.

சிவசாம்பன் நீலாவையே கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்தார்.

"ஏன் பாட்டி! நீ வீணுக்கு என்னவெல்லாமோ ஆசைப்படறே! அவர்களெல்லாம் பெரிய மனுஷர்கள். நம்ம குடும்பத்திலெல்லாம் சம்பந்தம் வைத்துக் கொள்வார்களா? அது எதற்கு? நான்தான் இப்பொழுது கல்யாணமே வேண்டாம் என்கிறேனே!" என்று நிஷ்டூரமாகப் பேசினாள்.

சிவசாம்பனுக்கு அது போதும். நீலாவின் பதிலில் இழையோடிய ஏக்கம் அவருக்கு நிதரிசனமாகத் தெரிந்தது.

நீலாவுக்கு அதை நம்பவே முடியவில்லை.

அன்றைக்குப் பெண் பார்ப்பதற்காகச் சுந்தரம் வீட்டிலிருந்து வருகிறார்கள் என்ற செய்திதான் அது. சுந்தரம் இன்னும் 'காம்பி'லிருந்து திரும்பாததால் அவனுடையதாயார், தமக்கை மற்றவர்கள் வருகிறார்களாம். சுந்தரம், தான் முன்னமே நீலாவைப் பார்த்திருப்பதால் அவர்கள் போய்ச் சம்பிரதாயத்துக்குப் பார்த்து விட்டு வந்தால் போதும் என்று எழுதியிருந்தானாம்.

எல்லாம் தாத்தாவின் ஏற்பாடுதான் என்று அறிந்தபோது நீலாவுக்குத் தாத்தாவின் மீது மிகுந்த நன்றிப் பெருக்கே ஏற்பட்டுவிட்டது.

சுந்தரம் தனது கடிதத்தைப் படித்த பிறகும் எப்படி இவ்வளவு நம்பிக்கையோடு இதற்கு உடன்பட்டார் என்பது அவளுக்குப் பெரும் புதிராக இருந்தது.

பெண் பார்க்க வருபவர்களுக்காக அலங்காரத்தில் ஈடுபட்டிருந்தாள் நீலா. அவளுக்குப் பின்னால் பானு வந்து நின்றது முன்னே நிலைக் கண்ணாடியில் தெரிந்தது.

நீலா திரும்பினாள்.

பானுவின் முகத்தில் குறும்புத்தனம் எழுதி ஒட்டியிருந்தது. தான் அவளுடைய கடிதத்தைத் தொலைத்து விட்டதைச் சொல்ல இதுவே தகுந்த சந்தர்ப்பம் என்று எண்ணினான் பானு.

"அக்கா! நீ அன்றைக்குக் கொடுத்தாயே ஒரு கடிதம், சுந்தரம் மாமாவிடம் கொடுக்கச் சொல்லி. அந்தக் கடிதம் தொலைந்து போய் விட்டது அக்கா. அன்றைக்கு டிரில் கிளாஸ். விளையாட்டு மைதானத்திலேதான் தொலைந்து போயிருக்கணும். இரண்டு நாள் பொறுத்து நீ கேட்டபோதுதான் எனக்கு ஞாபகமே வந்தது. உங்கிட்டே பொய்தான் சொன்னேன், கொடுத்தேன் என்று!" என்று முடித்தான் பானு.

நீலா 'குபீர்' என்று நாற்காலியைத் தள்ளிக் கொண்டு எழுந்தாள். பானுகூட ஒருகணம் பின்வாங்கினான்.

அப்படியே பானுவைக் குண்டுக்கட்டாகத் தூக்கிக் கொண்டு, "என்னது? அந்தக் கடிதம் தொலைந்து போய் விட்டதா? அப்படியானால் நீ அவரிடம் கொடுக்கவே யில்லையா? நிஜமாகவா?" என்று கேட்டவண்ணம் அவனோடு ஆனந்தத்துடன் தட்டாமாலை சுற்றிய போது பானுவுக்கு ஒன்றுமே புரியவில்லை!

# நந்தவனம்

## 33. குறவஞ்சி வந்தாள்!

செண்பகநாயகிபுரத்திலிருந்து குமுதவல்லி என்ற ஓர் அற்புத நடன நங்கை தஞ்சாவூருக்கு வந்திருக்கிறாள் என்றும், ஒப்புயர்வற்ற அவளுடைய நடனக் கலையானது குறவஞ்சி நாடகத்திலே அதிசயமான ஆற்றலோடு ஒளி விசப் போகிறது என்றும் தஞ்சை மாவட்டமெங்கும் பேசிக் கொண்டார்கள்! ஏற்கனவே குமுதவல்லியின் சதுர்க் கச்சேரியைப் பார்த்து ரசித்துள்ள இசையன்பர்கள் இந்த நாடகத்தில் அவளே குறத்தி வேடத்திலே தோன்றி, தனது இசையினுலும் நடனத்தினுலும் நடிப்பினுலும் ஒரு பழைய யுகத்தையே தோற்றுவிக்கப் போகிறாள் என்று பெருமையோடு சொன்னார்கள்!

தஞ்சையில் அரசாண்டு வந்த பெரிய மகாராஷ்டிர மன்னர்களிலே, அருங்கலை விநோதராகத் திகழ்ந்த சரபோஜி மகாராஜாவின் மீது பாடப்பட்ட பிரபந்தமே, இந்தக் குறவஞ்சி நாடகம். சரபோஜி காலத்தில் வாழ்ந்த சிவக்கொழுந்து தேசிகர் என்ற புலவரால் இயற்றப்பட்ட இந்த இசை நாடகம், நடன நிகழ்ச்சியாக நடிப்பதற்கு ஏற்ற முறையிலேயே அமைந்திருந்ததால், ஏற்கனவே பல உன்னதக் கலைஞர்களால் நடிக்கப்பட்டுப் புகழ் பெற்றிருந்தது! தஞ்சைப் பிரகதீசுவரர் கோயிலில் 'அஷ்டக் கொடி விழா'வின் போது இந்த நாடகம் ஆடப்பட்டு வந்த காரணத்தால், இருநூறு ஆண்டுகளாக இந் நடன நாடகத்தை ''அஷ்டக் கொடிக் குறவஞ்சி'' என்றே மிகுந்த பக்தியோடு தஞ்சை மக்கள் போற்றிப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள். இப்படிப் பட்ட புகழ் வாய்ந்த பழைய நடன நாடகத்தைப் பழைய இசை முறைப்படி, ஆனால், புதிய நடிகர்களைக் கொண்டு, இப்பொழுது சின்னமுத்துக்குமரன் அரங்கேற்றுகிறார் என்ற செய்தி கலையுலகிலே ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது! குமுதவல்லி இந்த நாடகத்தில் குறத்தியாகத் தோன்றுகிறாள் என்று முடிவானதும், அந்த அரங்கேற்றத்துக்கே ஒரு புதிய சிறப்பும் மக்களிடையே ஒரு புதிய பெருமையும் உண்டாகி விட்டது!

இந்த நாடகத்துக்கு என்று நூதனமான முறையிலே பல ஓவியத் திரைகளைச் செய்வித்தார் சின்ன முத்துக்குமரன்! இதில் ஒரு ரசமான நிகழ்ச்சி என்னவென்றால் இந்தத் திரை ஓவியங்களை வரைகிற பணியிலே, தஞ்சாவூர் ஓவியர்களோடு சேர்ந்து பால் வண்ணனும் ஈடுபட்டான்!

ஆம்; பொதுவாகவே கவின் கலைகளில் மட்டற்ற ஆர்வம் கொண்டிருந்த பால்வண்ணனுக்குத் தஞ்சாவூர் வந்து சேர்ந்ததும் ஒரு புதிய வாய்ப்பு ஏற்பட்டது. முத்துக்குமரனுடைய நாடகக் குழுவைச் சேர்ந்த ஓவியர் ஒருவர், ஒரு நாள் பால்வண்ணனுக்குத் தஞ்சாவூர்க் கோயிலிலே உள்ள பழைய சுவர் ஓவியங்களையெல்லாம் விளக்கம் செய்தார். ஆரம்பத்தில் விநோத உணர்ச்சியோடு அந்தச் சித்திரங்களைப் பார்த்த பால் வண்ணன், பிறகு அவற்றின் வர்ணக் கலவையிலும் கலை நுட்பத்திலும் மனத்தைப் பறி கொடுத்தான்! அவனுடைய அந்த ஈடுபாட்டைக் கண்ட ஓவியக் கலைஞர், பால்வண்ணனுக்கு அந்தக் கலையின் தத்துவங்களைக் கற்பிக்க ஆரம்பித்தார்! படிப்படியாகப் பால்வண்ணனுக்குச் சித்திரக் கலையிலே பயிற்சி உண்டாகத் தொடங்கியது! குறவஞ்சி நாடகத்துக்குரிய புதிய ஓவியங்களின் சித்திரப் பணியிலே மற்றக் கலைஞரோடு சேர்ந்து, பால் வண்ணனும் வர்ணம் வரைய ஆரம்பித்து விட்டான்!

அண்ணனும் தங்கையும் நாளெல்லாம் இப்படிக் கலையிலே மூழ்கியிருந்தார்கள். ஆனால் சிவசங்கரன் மட்டும் தானும் தனிமையுமாக இருந்து மௌனமான சிந்தனையிலே நாட்களைக் கழித்தான்.

'அஷ்டக் கொடி விழா' என்ற அந்த மங்கலத் திருநாள் வந்தது. ஆயிரக்கணக்கான மக்கள் கூடியிருந்த மாபெரும் அரங்கம் அது! ஓவியத் திரைகளும் ஒளி விளக்குகளுமாக ஒரு மாய உலகை நிர்மாணித்து நின்றன! மதியை மயக்கும் அந்தச் சுந்தர அரங்கிலே, சரபேந்திர பூபாலக் குறவஞ்சி என்ற இங்கிதக் கதையானது நடன நாடக

# சோழ

மாக விறுவிறு என்று சுழலத் தொடங்கியது. குரல் வளம் உள்ள இசைவாணன் ஒருவன் கட்டியங்காரனாக அரங்கிலே வந்து நின்று, கதைத் தொடர்புகளை இசைப் பாடலாக வழங்குகிறான். காட்சிகள் மக்களின் கண்முன் ஒவ்வொன்றாக எழுந்து நடனமாடின!

கணபதி வந்தார். பிறகு சரபேந்திரராகிய சரபோஜி மன்னரின் அரச பவனி வந்தது. அந்த நேர்த்தியான பவனியைக் கண்டு மதனவல்லி என்ற கதாநாயகி மையல் கொண்டாள்! அரசனிடம் மனத்தைப் பறி கொடுத்த மதனவல்லி, காதல் நோயிலே சிக்கித் தவித்தாள்! மன்மதனைப் பழித்தாள்! மலர் அம்பினால் இதயத்தைப் புண் படுத்துகிறாயே என்று சினந்தாள்! சந்திரனைத் தூற்றினாள்! நிலவு என்று சொல்லி நெருப்பைக் கொட்டுகிறாயே என்று கோபித்தாள்! தென்றலைப் பார்த்து வெகுண்டு பேசினாள்! குயிலையும் மாலைப் பொழுதையும் நோக்கிப் புலம்பினாள் மதனவல்லி! பாங்கியர்கள் வந்தார்கள். தலைவியின் நிலையைக் கண்டு பதறினார்கள். மதனவல்லி தோழியைத் தூது அனுப்பினாள்.



**"இடமில்லை! இடமில்லை!"**

**கட்டுரைப் போட்டி முடிவும் கட்டுரைகளும் அடுத்த இதழில் வெளியாகும்.**

அனுப்பி விட்டு, ஒரே கவலையோடு உட்கார்ந்திருந்தாள். அப்போது,

**குறவஞ்சி வந்தாள்—மோகனக்**
**குறவஞ்சி வந்தாள்!**

அந்தக் குறவஞ்சி எப்படிப்பட்டவள் என்றும், அவளுடைய பெருமை எத்தகையது என்றும் இதோ கட்டியங்காரன் பாடுகிறான்:

**இறமும் திருவும் நெறியும் உறை தஞ்சைச்**
**செழுநகர்ச்சரபோஜி மகராஜன் அருள்பெற்ற**
**குறவஞ்சி வந்தாள்—மோகனக்**
**குறவஞ்சி வந்தாள்!**

நடன நாடகத்தைப் பார்த்துக் கொண்டிருந்த ஆயிரக்கணக்கான மக்களும் இமை கொட்டாமல் ஒரே ஆவலோடு, ஒரே ஆர்வத்தோடு அரங்கையே பார்க்கிறார்கள் — குறவஞ்சியின் வரவை நோக்கி!

**'கூடை கட்டலையோ', 'முறம் கட்டலையோ' என்னக்**
**குயில்கூவு தல்போலக் கூவிக்கொண்டு அன்னப்**
**பேடுஎன்ன நடந்து, எழில் மயிலென மின்னப்**
**பெருமையுடன் மகிழ்ந்து ஆடவர் துன்னக்**
**குறவஞ்சி வந்தாள்—மோகனக்**
**குறவஞ்சி வந்தாள்!**

கட்டியங்காரனுகத் தோன்றிய இசைவாணன் இவ்வாறு கௌளி பந்து ராகத்திலே குறத்தியின் வருகையைப் பாடி முடித்தானே இல்லையோ, ஆயிரம் ஆயிரம் கைகள் ஏககாலத்தில் 'மடமட' என்று எழுந்து ஒலி செய்தன! ஆயிரம் ஆயிரம் மக்களின் ஒருமித்த ஆரவாரம் எதிரொலித்து எழுந்தது! குமுதவல்லி குறத்தி வேடத்திலே நடன அரங்கில் தோன்றிக் கைகூப்பினுள், சபையோரை நோக்கி! 'மடமட' என்று மறுபடியும் ஆயிரம் ஆயிரம் கைகள் ஒலி செய்தன!

கைகளிலே சங்கு வளையல்கள் 'கலீர் கலீர்' என்று ஒலிக்கவும், இரண்டு காதுகளிலும் குழைகள் ஆடவும், பங் கொண்டை போட்டுச் செருகிய கூந்தலிலே பாசியும், பவளமும், நறுமலர்களும் கொத்துக் கொத்தாக அணி செய்யவும், இடுப்பிலே கூடையும், கையிலே பிடித்த மந்திரக் கோலுமாக வந்து தோன்றினுள் ஒய்யார வல்லியான குமுதவல்லி குறவஞ்சி வேடத்திலே! அன்னத்தைப் போல் மென்னடை நடந்தாள். மயிலைப் போல ஒல்கினுள். மானைப் போலத் துள்ளித் துள்ளி ஆடிக் கொண்டே அரங்கிலே வட்டம் சுற்றினுள் அந்த நடன அரசி! எழில் மிகுந்த அந்தக் காட்சியிலே மெய்ம்மறந்தார்கள் அத்தனை ஆயிரம் மக்களும்!

நாடகத்தின் கதாநாயகியான மதனவல்லியிடம் குறத்தி நாட்டு வளத்தையும் வளமைகளையும் பாட்டாகவே வர்ணனை செய்கிறாள். கேதார கௌள ராகத்திலே,

**சோழ நாட்டின் வளமை உனக்கு நான்**
**சொல்லுவேன் கேளடி மானே**

என்று தொடங்குகிறாள் குறத்தி.

**வாழும் உயர்மதில் தஞ்சை சரபோஜி**
**மகராஜன் மனுநூல் சொல்முறையே உளமகிழ்ந்து**
**சோழ நாட்டின் வளமை உனக்கு நான்**
**சொல்லுவேன் கேளடி மானே!**

என்று பாடிக் கொண்டே குமுதவல்லி அபிநயம் பிடித்த போது, அந்தச் சோழ நாட்டு மக்கள் அத்தனை பேரும் குதூகலத்திலே துள்ளித் துள்ளி எழுந்து ஆரவாரம் செய்தார்கள்!

இதன் பிறகு மதனவல்லி தனது உள்ளங் கையை நீட்டிக் குறி பார்க்கும் படி சொல்லுகிறாள் குறத்தியை! குறவஞ்சியான அந்த அபாரஞ்சியானவள், மதனவல்லியின் கையிலே உள்ள ரேகைகளைப் பார்த்தவாறு குறி சொல்ல ஆரம்பிக்கிறாள். வெறும் வசனத்திலா குறி சொல்லுகிறாள்? இல்லை. பௌளி ராகத்தில், திச்ர தாளத்திலே!

**சது வச்சிர ரேகை – முன் இதை**
**இந்திராணி கையில் கண்டேன்**
**இன்னதால் உன்மணாளன்—இந்திரன்**
**எய்துபோகம் உளன் அம்மே!**

அரசப் பெருமிதத்தோடு இப்படிக் குறத்தி குறி சொல்லும்போது அதைக் கேட்கும் மதனவல்லிக்கு எத்தனை ஆனந்தம் உண்டாகும்? அத்தனை ஆனந்தம் அந்தச் சபையினருக்கும், அந்த நாடகத்தை அமைத்து வழங்கிய முத்துக் குமரனுக்கும் ஏற்பட்டது! குமுதவல்லியின் தமையனான பால்வண்ணனுக்கோ கால் நிலத்திலே பாவ வில்லை! அத்தனை பெருமையும் பேரானந்தமும்! ஆனால் சிவசங்கரனோ?

அற்புதமான ஒரு கலை விருந்தையையே எதிர்பார்த்து அந்த அரங்கில்

அந்த
'அசௌகரியமான
நாட்களில்'...










ஸாரிடான் வலிகளிலிருந்தும், நோவுகளி லிருந்தும் துரிதமாக, நிச்சயமாக, கெடுதல் எதுவுமின்றி, நிவாரணம் அளிக் கிறது. தலைவலி, உடல்வலி, பல்வலி, ஜுரம் வரும்போலிருப்பது, சாதாரண உடல் கோளாறுகள், இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள்.

# ஸாரிடான்

'ரோஷ்'

வலியைப் போக்குகிறது,
ஆசுவாசப்படுத்துகிறது,
புத்துணர்ச்சி யூட்டுகிறது

'ரோஷ்' தயாரிப்பு

ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள் :-
வால்டாஸ் லிமிடெட்




ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 ந. பைசா

JWT/VT.3527

ஆயிரம் ஆயிரமாகக் கூடி இருந்தார்கள் மக்கள். இது வரை நடைபெறாத மகோன்னதமான கலைச் சாதனையாக அமையும் இந்த நாடகம் என்று எதிர்பார்த்தே இந்த ஏற்பாட்டைச் செய்தார் சின்னமுத்துக்குமரன்! தன்னுடைய தங்கையின் புகழ் வாழ்விலேயே இதுவரை எட்டியிராத இமயத்தின் கொடுமுடியைத் தொட்டு விடும் என்று எதிர்பார்த்தே தஞ்சைக்கு வந்தான் பால்வண்ணன்! இவர்கள் அனைவரும் எதிர்பார்த்தது சற்றும் வீணாகவில்லை. சொல்லப் போனால் இவர்கள் யாரும் எதிர்பாராத அளவுக்கு, எதிர்பார்த்ததைவிடப் பன்மடங்கு அதிகமான சிறப்போடு மிளிர்ந்தது சரபேந்திர பூபாலக் குறவஞ்சி! ''அஷ்டக் கொடித் திருவிழா''விலே அற்புதமான வெற்றிக் கொடியை நாட்டி விட்டது இந்த நாடகம் என்று, குறவஞ்சிப் பெண்ணாள் வந்து தோன்றிய முதலாவது காட்சியிலேயே தீர்ப்பு வழங்கி விட்டார்கள் பொதுமக்கள்! நாடகம் இன்னும் மேலே மேலே ஆரோகணமாகச் சென்றுகொண்டிருந்தது! ஆனால் சிவசங்கரனோ?

காட்சிக்கு ஓர் உடை. பேச்சுக்குப் பேச்சு ஓர் அபிநயம். பாட்டுக்குப் பாட்டு ஒரு புதுமை. ஒரு புதிய கற்பனை. வார்த்தையில் துடுக்கு. நடிப்பிலே மிடுக்கு. தோற்றத்தில் எடுப்பு. கலையரசி என்றது அவளை இசையுலகம்! ஆனால் சிவசங்கரனோ? குமுதவல்லியின் கணவன், அந்த நடன ராணியைக் கரம் பற்றிய நாயகன். தானும் தனிமையும் தனது ஏக்கமுமாக ஒரு விசித்திரமான பிரமையிலே நடமாடி வந்த அந்த மனிதன், சிவசங்கரன் இப்பொழுது எங்கே?

இத்தனை பெருமைகளும், இத்தனை சிறப்புகளும், இத்தனை புகழ் மாலைகளும் குவிந்து கொண்டிருந்தபோது சிவசங்கரன் என்ன ஆனான்? கலையுலகத்தின் இசை மகுடம் தனது மனைவிக்குச் சூட்டப்படுகிற அந்தத் தருணத்திலே, இத்தனை இன்பத்திலும் பங்கு கொள்ள வேண்டிய சிவசங்கரன் அங்கே இல்லை!

நாடக அரங்கேற்றத்தின் கோலாகலத்திலும், நடன நாடகத்தின் பேரானந்தத்திலும் ஆயிரக்கணக்கான மக்கள் மெய்ம்மறந்து ஈடுபட்டு, இந்த உலகின் நினைவே யில்லாமல் மதிமயங்கி இருந்த போது, சிவசங்கரன் மட்டும் தன்னந் தனியனாகத் தஞ்சாவூரிலிருந்து ரயிலேறி வடக்கே போய்க் கொண்டிருந்தான்! எங்கே செல்லுகிறோம், என்ன செய்கிறோம், இனிமேல் என்ன செய்யப்போகிறோம் என்ற சிந்தனைகள் ஏதும் இல்லாதவன் போலத் தோளிலே தொங்கிய ஒரு சிறிய மேல் துண்டும்



'என்னப்பா, இது! இந்த கிரிக்கெட் மைதானத்தில் புல்லே இல்லையே?''

அட! நீ என்ன இங்கு மேயவா வந்தே? சரிதான் விளையாடுடா!''

தானுமாக, ஓடும் ரயில் வண்டியிலே உட்கார்ந்து கொண்டிருந்தான் சிவசங்கரன்! தஞ்சாவூரையும், அங்கே நடைபெற்றுக் கொண்டிருந்த குதூகலமான நாடகத்தையும், அந்த நாடகத்திலே ஆயிரம் ஆயிரம் மக்களின் புகழ்க் கிரீடத்தைத் தலையிலே சூடிக் கொண்டு நின்ற தனது மனைவி குமுதவல்லியையும் மறந்து, யாரிடமும் எதுவும் சொல்லிக் கொள்ளாமல் நள்ளிரவிலே இரகசியமாக மறைந்தான் சிவசங்கரன்!

ஆம்; ஈடு இணையற்ற விதத்தில் குமுதவல்லியின் வெற்றி அந்த நடன அரங்கிலே நிலைநாட்டப் பெற்ற இன்பமான நல்லிரவு, அத்தகைய ஒரு பெரிய சோக முடிவிலே போய் நிற்கும் என்று யார்தான் எதிர்பார்த்திருக்க முடியும்!

நாடகம் முடிவடைந்து மக்கள் கூட்டம் வியப்பையும் பாராட்டையும் அள்ளிச் சொரிந்தவாறு அங்கிருந்து கலைந்து கொண்டிருந்தது! ஆனால் நாடக அரங்கின் திரை மறைவிலே, மனித இதயத்தின் எல்லையற்ற சோக நாடகம் தொடங்கியது!

''மைத்துனரைக் காணோமே!'' என்று துடிதுடித்துக் கொண்டே திரையின் பின்னால் உடல் பதறி நின்றான் பால்வண்ணன்!

''குழந்தைகளை வைத்துக் கொண்டு இங்கேதான் நின்றார்!'' என்று ஒரே திகைப்போடு கூறினார் சின்னமுத்துக்குமரன்.

''கூட்டத்துக்குள் குழந்தை அழ ஆரம்பித்தது என்று அவர் வெளியே சென்றதைப் பார்த்தேன்!'' என்றான் நடிகர்களிலே ஒருவன்.

'தெரு வீதியிலே காற்றாட நடந்து கொண்டிருந்தார், குழந்தைகளை வைத்துக் கொண்டு!'' என்றார் இன்னொருவர்.

''இல்லை, குழந்தைகள் இரண்டும் இங்கேதான் இருக்கின்றன!'' என்றார் மற்றொருவர்.

நாடகத்தில் பங்குகொண்ட நடிகர்கள் எல்லாரும் முகத்திலே பூசியிருந்த அரிதாரத்தைக் கலைவதற்கு முன்னால், அவர்கள் எல்லாருடைய முகத்திலும் துயரம் படர்ந்தது! 'சிவசங்கரனைக் காணோம்!' என்ற செய்தி அவர்கள் அனைவரையும் திடுக்கிட வைத்தது!

பால்வண்ணனுடைய சோகத்துக்குச் சொல் இல்லை! தன்னிடம் வெளியிட்டுக் கூறாமல், ஏதோ ஒரு பெரிய வேதனையை, உள்ளத்துக்குள்ளேயே, மறைத்து வைத்து மறுகிக் கொண்டிருந்தான் அல்லவா சிவசங்கரன்! அந்த வேதனையை இனிமேலும் நீடிக்க விடக் கூடாது என்றும், இன்றிரவு நாடகம் முடிந்ததும் சிவசங்கரனைத் தனியாக அழைத்துப் போய் அந்த இரகசியம் என்ன என்று கேட்டுவிட வேண்டும் என்றும், இனி ஒரு விநாடி கூடத் தாமதிக்கக் கூடாது என்றும் எண்ணினானே பால்வண்ணன்! ஐயோ! அந்த இரகசியத்தைத் தன்னிடம் சொல்லாமலேயே மறைந்து விட்டானா, அருமை மைத்துனன்?

''இங்கேதான் எங்காவது காற்றாட உலவிக் கொண்டிருப்பார். எப்படியும் இன்னும் கொஞ்ச நேரத்தில் ஜாகைக்குத் திரும்பி விடுவார். கவலைப்படாதீர்கள்!'' என்று சொல்லிப் பால்வண்ணனைச் சமாதானப்படுத்த முயன்றார் சின்னமுத்துக்குமரன்.

''இல்லை! என்னுடைய இதயம் விபரீதமாகப் படபடக்கிறது. இரண்டு குழந்தைகளையும் வேலைக்காரியிடம் விட்டு விட்டு இவர் மட்டும் தன்னந்தனியாக அல்லவா போயிருக்கிறார்! குழந்தைகளை இப்படி விடமாட்டாரே அவர்! இதில் ஏதோ வில்லங்கம் இருக்கிறது!''

இவ்வாறு படபடத்தான் பால்வண்ணன். யார் எத்தனை ஆறுதல் சொல்லியும் அவனுக்கு மன அமைதி ஏற்படவில்லை. நெருப்பிலே நிற்பது போல் துடித்துக் கொண்டு நின்றான் பால்வண்ணன்!''

வட்டப்பாறையிலே உட்கார்ந்து, வில்வநாதனுக்குக் குமுதவல்லியின் வரலாற்றைச் சொல்லிக் கொண்டே வந்த வேணுலிங்கம், இந்த இடத்தில் கதையை நிறுத்தினான்! நிறுத்திவிட்டு வில்வநாதனுடைய முகத்தையே பார்த்தான், மௌனமாக! (தொடரும்)




அத்தியாயம் 37

## இரு நிபந்தனைகள்

விலங்குகள் கரங்களை இறுக்க, விடுதலை வேட்கை நெஞ்சில் நிறைந்து நெருக்க, போலீஸ் இன்ஸ்பெக்டருடன் போகத் துணிந்துவிட்டாள் தாரா. ஆனால் அவளை நடக்கவொட்டாமல் ஏதோ தடை செய்தது. குனிந்தாள் அவள். கால்களை மோகனின் கைகள் சுற்றி வளைத்திருப்பதைக் கண்டாள்.

''கண்ணே! கணப் பொழுதில் உரு வான ஆவேசத்தில் உன்னைக்கூட மறந்து விட்டேனடா நான். அப்படியிருக்கத் தேசப்பற்று மிகுந்து என்னை மறக்கத் துணிந்ததற்காக உன் அப்பா மீது கோபப்பட்டேனே!''

பொலபொலவென்று இப்போது கண்ணீர் உகுத்தாள் தாரா. குழந்தையைக் கட்டி அணைக்க விலங்குகள் அனுமதிக்க வில்லை. அவன் கன்னங்களைத் தடவிக் கொடுத்து விட்டு, அவள் வடிவேலு நின்ற பக்கமாய்த் திரும்பினாள். ''மோகனை ஜாக்கிரதையாகக் கவனித்துக் கொள்ளுங்கள். அவனை அவன் தாத்தா பாட்டியிடம் சீக்கிரமே கொண்டு போய்ச் சேர்ப்பித்து விடுங்கள்'' என்றாள்.

''ஆகட்டும்'' என்றான் வடிவேலு. ''நீங்கள் தைரியமாக இருக்க வேண்டும். பெரிதாக ஏதும் உங்களுக்கு நேர்ந்து விடாது என்று எனக்குத் தோன்று கிறது!'' என்றும் கூறினான்.

கான்பூருக்கு அவன் கிளம்புவதாயிருந்ததால் முன்னேற்பாடாகக் கட்டி வைக்கப்பட்டிருந்த பெட்டி படுக்கைகளை வண்டி அமர்த்தி எடுத்துக் கொண்டு வருமாறு போலீஸ் ஜவானிடம் கூறினார் இன்ஸ்பெக்டர். ''நாங்க முன்னால் போகிறோம், டி. எஸ். பி. காத்துக்கிட்டிருப்பார்!''

தாரா ஸைட் — காரில் ஏறிக் கொண்டதும் மோட்டார் சைக்கிளின் இயந்திரத்தை இயக்கி விட்டு அமர்ந்தார் இன்ஸ்பெக்டர். அவருக்குப் பின்னால் ஹெட் கான்ஸ்டபிளும் உட்கார்ந்ததும் வண்டியைச் செலுத்த ஆரம்பித்தார்.

கி. ராஜேந்திரன்

'படபட'வென்று ஒலி எழுப்பியும் புழுதியை வாரி அடித்துக் கொண்டும் விரைந்தது மோட்டார் சைக்கிள்.

தேனூர்வாசிகள் திகைப்பிலிருந்து மீளவில்லை. ஆனால் வடிவேலு மட்டிலும் தனக்குள் மெல்லச் சிரித்துக் கொண்டான்.

* * *

மாயவரத்தில் சர்க்கிள் இன்ஸ்பெக்டர் துரைசாமியின் வீட்டுக்கு வடிவேலு மோகனையும் பின்னோடு அழைத்துக் கொண்டு போனபோது ''வீட்டுக்காரி இன்னைக்கு ஏ—ஒன் மோர்க்குழம்பு வடை பண்ணியிருக்கா'' என்று ஆசை காட்டினார் 'மப்டி'யிலிருந்த இன்ஸ்பெக்டர்.

''பிறகு வைத்துக் கொள்ளலாம். தாரா எங்கே? அதைச் சொல்லு.''

''பத்திரமாகத்தான் இருக்கிறாள். 'மொட்டை மாடியில் காற்றாட உட்கார்ந்திருக்கிறேன்' என்றாள். சரின்னேன்...''

''ஐயய்யோ!'' என்று அலறினான் வடிவேலு. ''அங்கேயிருந்து எட்டிப் பார்க்க யார் கண்ணிலேயாவது அவள் பட்டுவிட்டால்?''

''ஒதுக்குப்புறமாய் உட்கார்ந்த இடத்தை விட்டு எழுந்திருக்கக் கூடாதுன்னு உத்தரவு போட்டிருக்கேன்;— பயப்படாதே. என்னோட தேனூருக்கு வந்த கான்ஸ்டபிள்கள் கூட அவளை டி.எஸ்.பி.தம் பின்னோடு டில்லிக்குக் கூட்டிண்டு போயிட்டதாகத்தான் நெனைச்சிண்டிருக்கான்கள்! இங்கே அவள் இருப்பது யாருக்குமே தெரியாது!''

''துரைசாமி! உனக்கு என்ன கைம்மாறு செய்யப் போகிறேன் நான்?''

''செய்ய வேண்டிய பிரதியுபகாரம் ஒண்ணுமில்லே. செய்யக் கூடாத விஷயங்கள் இரண்டு இருக்கின்றன.''

''என்ன துரைசாமி?''

''முதலாவது இந்தச் சம்பவத்தை அடியோடு மறந்துடணும். தப்பித் தவறி கூட யார்கிட்டேயாவது நீ உளறி வைச்சால் என் சரிகைத் தலைப்பாகைக்கு ஆபத்து வந்துடும். உன் ஒருத்தனைத் தவிர வேறு யாருக்காகவும் நான் இந்தக் காரியத்தைச் செய்திருக்க மாட்டேன். தாராவையும் இது சம்பந்தமாய் ஜாக்கிரதையாக இருக்கச் சொல்லு. இரண்டாவது....''

''இரண்டாவது என்ன?''

''உன்னிடமிருந்து எல்லா விவரங்களையும் கேட்டுத் தெரிஞ்சுகண்டேன்.. அவள் நல்ல பேரைக் காப்பாற்றத் துணிஞ்சேன். அதுக்கு என் பதவியைப் பயன்படுத்திண்டால் பரவாயில்லே.. ஆனால் அதனாலே அனர்த்தம் விளையக் கூடாது. ஒரு பெண்ணோட மானம் கப்பலேறாமல் இருக்க நான் ஊரார் கண்களிலே மண்ணைத் தூவினால் அதை மன்னிக்கலாம்; ஆனால் யாருக்காக நான் அந்த வேலையைச் செய்கிறேனோ, அவர்கள் உண்மையிலேயே அதற்குத் தகுதியுடையவர்களாக இருக்க வேண்டுமல்லவா!''

''துரைசாமி! உனக்குச் சந்தேகமே வேண்டாம் தாராவைப் பற்றி. அவள் பரிசுத்தமான இதயம் படைத்தவள்.''

''அவளைப் பற்றி நான் கவலைப்படவில்லை. உன்னிடம்தான் எனக்குச் கலபத்தில் நம்பிக்கை பிறக்க மாட்டேன் என்கிறது. நான் சொல்கிறேனென்று கோபித்துக் கொள்ளக் கூடாது நீ! ஏற்கனவே இருக்கும் கெட்ட பெயர் போதும் உனக்கு; புதிதாக எதையாவது தேடிக் கொள்ளாதே! என்ன, நான் சொல்வது புரிகிறதா?''

''புரிகிறது இன்ஸ்பெக்டர் ஸார்! பேஷாய்ப் புரிகிறது. உனக்கு ஏமாற்றம் அளிக்க நேரிடாது என்றுதான் நானும் நினைக்கிறேன்.''

''அதென்னப்பா அது? நினைக்கிறேன் என்று ஒரு மாதிரியாய்ப் பேசுகிறாயே?''

''இன்னும் அரை மணி பொறுத்திரு: இரண்டிலொன்று தீர்மானமாகச் சொல்கிறேன்!'' என்றான் வடிவேலு. மோகனைத் தூக்கிக் கொண்டு மொட்டை மாடிக்குப் படிகளில் ஏறி விரைந்தான்.

மகனை மார்போடு இறுக அணைத்துத் தழுவிக் கொண்டு முத்தங்களைச் சொரிந்தாள் தாரா. குழந்தையைக் கொஞ்சியபடியே, ''இன்ஸ்பெக்டர் கதை கதையாகச் சொன்னார் உங்கள் சதித் திட்டத்தைப் பற்றி'' என்றாள் வடிவேலுவிடம். ''ஒருவிதத்தில் எனக்கு ஒரே சந்தோஷமாக இருந்தது. இன்னொரு பக்கம் வருத்தமாகவும் இருந்தது.''

''வருத்தமா? எதற்கு?''

''இதென்ன கேள்வி? ஜெயிலுக்குப் போகவில்லையே என்பதால்; தேனூர் வாசிகளையெல்லாம் இப்படி ஏமாற்றி விட்டோமே என்று.''

''பூ! இவ்வளவுதானே? இரண்டுக்குமே நீங்கள் துயரப்பட வேண்டிய அவசியமில்லை. தேனூர் வாசிகளை ஏமாற்றியதாக இருக்கவும் வேண்டாம். சிறைக்குப் போகாமலும் இருக்க வேண்டாம். மோகனை அவன் தாத்தா பாட்டியிடம் கொண்டுபோய்ச் சேர்ப்பித்து விடுங்கள். பிறகு சத்தியாக்கிரஹம் செய்து சிறைவாசம் புரிய எத்தனையோ சந்தர்ப்பங்கள் கிடைக்காமலா போகும் உங்களுக்கு? நாளைக்கே நாட்டை நம்மிடம் ஒப்படைத்துவிடப் போவதில்லையே வெள்ளைக்காரன்!''



"ஆமாம், அப்படிச் செய்வதாகத்தான் உத்தேசித்திருக்கிறேன்."

"ரொம்ப சரி, உங்கள் துக்கத்துக்கு முடிவு கட்டியாகி விட்டது. இனிமேல் சந்தோஷ சமாசாரத்துக்கு வருவோம். அடுத்த தடவை நீங்கள் தேனூருக்கு விஜயம் செய்யும்போது சாரட்டில் ஊர்வலம் வர வேண்டியிருக்கும். அத்தனை உற்சாகம் ஜனங்களுக்கு. திடுதிப்பென்று நீங்கள் பெரிய தியாகியாகி விட்டீர்களே?"

"விகல்பமான வதந்திகளுக்கு ஆளாகி அவமானப்பட்டு வெளியேற வேண்டியவள் நான். பெரும் புகழும் அடைந்து தேனூர்வாசிகள் என்றென்றைக்கும் மனத்தில் வைத்துப் போற்றும் வகையில் கிளம்பிவந்திருக்கிறேன்!"

"அதையேன் கேட்கிறீர்கள்? திமிலோகப்படுகிறது தேனூர் கிராமம். காந்தி பாடசாலையை உங்கள் நினைவாக, உங்கள் சார்பிலே தொடர்ந்து நடத்தப் பொன்னம்பலமும் என் அப்பாவும் ஒன்று கூடி முடிவ பண்ணியிருக்கி றார்கள். இரண்டு பேரும் அடித்துக் கொள்கிற பெரு மைக்குக்கணக்கு வழக்கே கிடை யாது! இன்ஸ்பெக்டர் வந்ததும் கொஞ்சம் கூட முகத்தைச் சுளு கிக் கொள்ளாமல் நீங்கள் விலங் கைப் பூட்டச் சொல்லிக் கைகளை நீட்டியதையும் பிறகு மோகனை கண்டதும் தான் கண் கலங்கி னீர்கள் என்பதையும் திரும்பத் திரும்பச் சொல்லி மாய்ந்து போகிறார் என் அப்பா! பொன் னம்பலத்தைப் பற்றியோ கேட் கவே வேண்டாம்! அவர் ஆரம் பத்திலேயே கண்டுபிடித்து விட் டாராம், நீங்கள் சுபாஷ் பாப ஷினால் அனுப்பப்பட்டு ஏதோ ஓர் உள்நோக்கத்தோடு தான் தேனூருக்கு வந்து சேர்ந்திருக் கிறீர்கள் என்று. உங்கள் கா யம் கைகூடுவதற்கு முன்னே போலீஸாருக்கு ஸி. ஐ. டி. மூல மாய்த் தகவல் தெரிந்து போகவே, கைது செய்து விட்டார் ளாம் உங்களை!

"கான்பூரில் உங்கள் பிள்ளையை பெரியவர்களிடம் விட்டு விட்டு, தாரா வும் உமாகாந்தும் சேர்ந்திருக்கி புகைப்படம் ஒன்று வாங்கி வ வேண்டும் என்று எனக்குக் கட்டளை பிறப்பித்திருக்கிறார்கள். அதை 'பிரேம் போட்டுப் பள்ளிக்கூடத்திலே சுவரில் மாட்டப்போகிறார்களாம். கீழே 'பள்ள யின் ஸ்தாபகரும் அவரது கணவரும் என்று எழுதி வைக்கவும் வேண்டும் என் பது பாருவுடைய தீர்மானம். ஆக கூடி நீங்கள் கான்பூர் போனதும் முத காரியமாக என் பெயருக்கு, இந்த விலா சத்துக்கு அத்தகையதொரு புகைப படத்தை அனுப்பி வைக்க வேண்டும் அல்லது நீங்கள் சம்மதித்தால் உங்கள் பின்னோடு நானும் வருகிறேன். பட த்தைப் பெற்றுக் கொண்டு திரும்புகிறேன் என்ன சொல்கிறீர்கள்?"

"எப்படி வேணுமானாலும் செய் லாம். எனக்கு ஆட்சேபணை இல்லை."

"வழவழ கொழ கொழவென் பேசுகிறீர்களே? கொஞ்சம் கூட உற்சா கத்தையே காணோமே? நிலைமை எவ்வளவு கெட்டிக்காரத்தனமாகச் சம வித்திருக்கிறோம் நாம்?"

''எல்லாவற்றிற்கும் உங்களுடைய சாமர்த்தியம்தான் காரணம்.''

''யோசனை என்னுடையது தான். ஆனால் துரைசாமியின் ஒத்துழைப்பு மட்டிலும் இல்லாதிருந்தால் என்னால் எதைச் சாதித்திருக்க முடியும்?''

''உண்மைதான். அவருக்கும் நான் மிகவும் கடமைப்பட்டிருக்கிறேன்.''

''சும்மா உபசாரமாக எதையாவது கூறித் தட்டிக் கழித்தால் போதாதாம் அவனுக்கு. அவன் போடுகிற இரண்டு நிபந்தனைகளுக்கு நாம் உட்பட வேண்டுமாம்...!''

''என்ன அவை?''

''ஒன்று அவன் உத்தியோகத்துக்கு நாம் உலை வைத்து விடக் கூடாது. இந்த நிகழ்ச்சி பற்றி யாரிடமும் மூச்சு விடக் கூடாது. நீங்கள் கைது செய்யப்பட்டு விசாரணைக்கு டில்லிக்கு அழைத்துப் போகப்பட்டதாகவே எல்லாரும் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்த எண்ணம் நிலைத்து நிற்க வேண்டும்.''

''சரி, அதில் ஒரு சிரமம் இருப்பதாய் எனக்குத் தோன்றவில்லை. இரண்டாவது...?''

''அதிலேதான் சிக்கல்!'' என்றான் வடிவேலு. அன்று வரையில் இல்லாத அசாதாரணமான துணிச்சலோடு அவளை நேருக்கு நேராக உற்று நோக்கினான். அந்தப் பார்வையைத் தாங்க முடியாமல் தாரா முதன் முறையாக அவனெதிரே சிரம் தாழ்த்தினாள்.

அத்தியாயம் 38

## காதலுக்குச் சோதனை

வட்டங்களும் சதுரங்களுமாய்த் தரையில் எழுதிய கால்கட்டை விரலை இம்மியளவு பிசகாமல் பின்பற்றிச் சென்றன தாராவின் கூர் விழிகள். அதற்கென்ன பொருள்? அவள் நாணி நிற்கிறாள் என்பதுதான்! வெட்கப்படுவது அதுவரையில் அவள் இயல்பாக இருந்ததில்லை. அதற்கு அவசியமும் ஏற்பட்டதில்லை. எல்லோராலும் உயர்வாக எண்ணப்படுகிறவள், அறிவும் அனுபவமும் மிக்கவள், வாழ்க்கையின் மேடு பள்ளங்களைக் கண்டவள். சரளமாக எல்லோருடனும் பழகித் தான் புரிந்து வந்த பல நற்பணிகளுக்கு ஒத்துழைப்பைக் கோரிப் பெறுவதுதான் அவள் சுபாவமேயன்றிக் கூச்சமடைவதென்பது புதிதாக இருக்கிறதே? தன் பொருட்டு ஏற்பட்ட மாறுதல் இது என்பது புலனானதும் புளகாங்கிதமுற்றான் வடிவேலு. அதோடு இன்னொர் அம்சத்தையும் அவன் கவனித்தான். வடிவேலு வந்ததும் வராததுமாக மொட்டை மாடியிலிருந்த ஒரே நாற்காலியை விட்டு எழுந்தவள்தான் தாரா. மீண்டும் அவள் அமரவேயில்லை.





## சீரான ஆகாரமில்லாததால் நீங்கள் மெலிந்திருக்கிறீர்களா?

# ஆல்போஸாங் சாப்பிடுங்கள்

**மிகச் சிறந்தது**
**சாதாரண உணவுடன் சேர்ந்து**
**சிக்கனமான, விஞ்ஞான முறையில்**
**ஊட்டமளிப்பது**

தேநீர், காப்பி, பால், கஞ்சி, பழரசம் முதலியவைகளுடன் சேர்த்து அருந்தினால் மிக ருசியாக இருக்கும். சிறு குழந்தைகளுக்கும், வளரும் பிராயத்திலும், பிரசவகாலத்தில் தாய்மார்களுக்கும், சிந்திக்கும் தொழிலாளிகளுக்கும், முதியவர்களுக்கும், பலவீனம் இரத்தமின்மை மற்றும் நோயிலிருந்து தேறி வரும் போதும் ஆல்போ-ஸாங் சிறந்த டானிக் உணவாகிறது.




பௌடர் மற்றும் மாத்திரைகளாகவும் கிடைக்கிறது.

**ஜே. & ஜே. டீஷேன்,**
ஹைதராபாத்—டெக்கான்

நேற்றுவரையில் தனக்கு அவள் காட்டாத உபசாரம் திடீரென்று இன்றைக்கு மட்டும் எதற்கு?

தாராவை அப்படியே விட்டு விட்டுக் கீழே இறங்கிச் சென்றான் வடிவேலு. திரும்பவும் மேலே ஏறி வருகையில் அவன் கரத்தில் ஒரு மூக்காலி இருந்தது.

''தாரா! உட்காருங்கள். நீண்ட நேரம் உங்களை நிற்க வைத்து விட்டேன். இன்னும் ஆற அமரப் பேச வேண்டியது நிறைய இருக்கிறது'' என்று கூறி விட்டு அவளுக்கு எதிர்த்தாற் போல் மிக அருகில் தானும் உட்கார்ந்து கொண்டான்.

சமர்த்துக் குழந்தை போலத் தன் சொற்படி கேட்ட தாராவிடம் வார்த்தைகளில் அன்பைக் கூட்டிக் குழைத்துக் கூறினான் வடிவேலு: ''தாரா! எதற்காக இன்னும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டிருக்கிறீர்கள்? எங்கே, தைரியமாக என்னை நிமிர்ந்து பாருங்கள்! இனி நம்மிடையே ஒளிவு மறைவு இருக்க முடியாது, தாரா! எனக்கு உங்கள் மனம் நன்றாகத் தெரிந்து போய் விட்டது!''

தாராவின் முகம் உயர்ந்தது. ''பிடித்தோ பிடிக்காமலோ நீங்கள் என்ன வேணுமானாலும் சொல்லுங்கள்; கேட்டுக் கொள்கிறேன்'' என்றாள். பின்னர் மென்று விழுங்கி விட்டு, ''என்னைப் பற்றி எவ்வளவு மட்டமாக மதிப்பிட்டிருப்பீர்களோ, எல்லாவற்றையும் இப்போதே கொட்டித் தீர்த்துவிடுங்கள். பின்னால் இன்னொரு வாய்ப்புக் கிடைக்கப் போவதில்லை உங்களுக்கு!'' என்று கூறி முகத்தைக் கரங்களில் புதைத்துக் கொண்டு விம்மினாள்.

''தாரா! குழந்தையைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு நீங்கள் இப்படி அழலாமா? தயவுசெய்து நிறுத்துங்கள்! தாரா! தவறு செய்து விட்டதாகத் தவறான ஒரு முடிவுக்கு வந்து உங்களை நீங்களே தண்டித்துக் கொள்ள முற்படுகிறீர்கள். இப்படி நெஞ்சு வெடித்து விடும் போலத் துடித்து என்னையும் சித்திரவதைக் குள்ளாக்குகிறீர்கள். ஆனால் தாரா! நீங்கள் அவ்வாறு எண்ணுவது நியாயமில்லை. எந்தவித மான தவறையும் நீங்கள் இழைத்து விட்டதாக நான் கருதவில்லை.''

என்னதான் சொல்லியும் தாரா மனம் குமுறுவது நிற்கவேயில்லை. அவளிடம் மன்றாடுவதால் பலன் ஒன்றுமில்லை என்று கண்டுகொண்டான் வடிவேலு. தேற்றுகிற எண்ணத்தைக் கைவிட்டான்.

''தாரா! நீங்கள் கதறினாலும் சரி, இன்று என் மனத்திலிருப்பதை நான் கூறத்தான் போகிறேன்; நீங்களும் கேட்டுத்தானாக வேண்டும்!''

வதனத்தை மறைத்திருந்த கரங்களை நகர்த்தாமலே இடுப்புக்கு மேலாக உடலையே அசைத்தாள் தாரா, அவனைப் பேச வேண்டாமென்று இறைஞ்சுகின்ற பாவனையில்.

அந்தக் கெஞ்சலை லட்சியம் செய்யாமல் தாக்கினான் வடிவேலு. ''தாரா! சிமாச்சு உங்கள் மீது அன்று பழி சுமத்தியது வாஸ்தவம். ஆனால் உடனடியாக அவர் வாயை அடக்கி விட்டார் பொன்னம்பலம். உங்களைப் பற்றித் தரக் குறைவாகப் பேசினால் தொலைத்து விடுவதாய் மிரட்டி யிருந்தார். அவர் சொல்லை மீறிச் சிமாச்சு ஏதும் செய்திருக்கப் போவதில்லை. ஆகவே உங்களுக்குக் கிராமத்திலிருந்த நற்பெயரும் குறைந்து விட்டிருக்கப் போவதில்லை. அப்படியிருந்தும் நீங்கள் தேனூரை விட்டுக் கிளம்பிப் போகவே தருணத்தை எதிர் பார்த்துத் தவித்துக் கொண்டிருந்தீர்கள்; ஏன்?'' என்று கேட்டு விட்டு நிறுத்தினான் வடிவேலு. கேள்விக்குத் தாராவிடமிருந்து விடை கிடைக்கவில்லை.

''நானே பதில் சொல்கிறேன்'' என்றான் வடிவேலு. ''உங்களுக்கு உங்களிடமே நம்பிக்கையில்லை! அதுதான் உண்மை! சிமாச்சு கூறியது பொய் யென்று பொன்னம்பலம் அப்போதைக்குத் திருப்தியடைந்து விட்டாலும் விரைவிலேயே அவர் தமது அபிப்பிராயத்தை மாற்றிக் கொள்ள நேரிடும் என்று பீதி அடைந்தீர்கள். சுற்றுப் புறத்தில் புகையைக் கண்டவர்கள், அதன் மையத்தில் நெருப்பு கொழுந்து விடுவதை உணர எத்தனை நேரமாகும் என்று உங்கள் இதயம் இடித்துக் காட்டியது இல்லையா?''

தாராவின் தேக நடுக்கம் அதிகரித்தது. அவள் நடந்து கொண்ட விதத்துக்கு மெய்யான அர்த்தத்தை வடிவேலு ஆராய்ந்தறிந்தான்; அதனை அவள் நேருக்கு நேராகச் சந்தித்துத் தானாக வேண்டுமென்று பிடிவாதமும் செய்தான். தன் ஆசாபாசங்களின் சுயரூபத்தைக் காணும்போது சூழ்கின்ற அச்சத்தைத் தவிர்க்க இயலாமல் திணறினாள் தாரா. மிரண்டு ஒதுங்கினாள்; கூனிக் குறுகினாள்.

வடிவேலு அவளிடம் கருணை காட்டவில்லை. தன் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு, மேலும் மேலும் கூரிய சொற்களால் அவளைத் துளைத்துத் துன்புறுத்தினான். ''கான்பூருக்கு நீங்கள் கூடிய சீக்கிரம் திரும்பி விட முடிவு செய்ததற்கு நான்தான் பொறுப்பாளியோ என்று அன்றைக்கு நான் பதறியபோது நீங்கள்





மாடல் 0724 : 6-வால்வ், ஆல்-வேவ், 8 பாண்ட்
முழு பாண்ட் ஸ்ப்ரெட், ஏஸி அல்லது ஏஸி/டிஸி
( இரு மாடல்கள் )
மற்றும் மாடல் 0737: (டிரா பாட்டி) 7-வால்வ்

# murphy radio



## Delights the home!



மாடல் 0374 :
6 வால்வ் 9 வகை டோன் திறனுடன்
ஆல்-வேவ், 4 பாண்ட்
பியானோ-கீ ஸ்விட்ச், ஏஸி அல்லது
ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)

# மர்பி ரேடியோ



மாடல் 0452
6 வால்வ், 9 வகை
செயல் திறனுடன்
ஆல்-வேவ், 3 பாண்ட்
பியானோ-கீ ஸ்விட்ச், ஏஸி



மாடல் 0504
4-வால்வ், ஆல்-வேவ்
2 பாண்ட், ஏஸி/டிஸி



மாடல் 0298
ஆல்-வேவ், 5-வால்வ்
3-பாண்ட், ஏஸி/டிஸி
மற்றும் மாடல் 0299
(டிரை பாட்டரி)
4-வால்வ்



மாடல் 0752
5-வால்வ், ஆல்-வேவ்
3-பாண்ட், ஏஸி அல்லது
ஏஸி/டிஸி (இரு மாடல்கள்)
மற்றும் மாடல் 0751
5-வால்வ்

MR. C. 165

# இல்லத்திற்கு இன்பமளிக்கிறது!

அதை ஆணித்தரமாக மறுத்துரைத்தீர்கள். அவசரப்பட்டுக் கிளம்பினால் சிமாச்சலின் குற்றச்சாட்டுக்குப் பயந்து தப்பி ஓடியதாக ஆகும். அவர் கை வலுக்கும். கொட்டம் அதிகரிக்கும். கெட்ட பெயர் உங்களைச் சூழும் என்று எச்சரித்தேன். நீங்கள் அதையும் பொருட்படுத்தவில்லை. போய்விடவே ஆசைப்பட்டீர்கள். ஏன் என்று எனக்கு இப்போது நன்றாகப் புரிகிறது, தாரா! நீங்கள் சிமாச்சலிடமிருந்தோ எங்களிடமிருந்தோ அல்லது தேனூர் வாசிகளிடமிருந்தோ தப்பி ஓட யத்தனிக்கவில்லை; உங்களிடமிருந்தே நீங்கள் தப்பி ஓடப் பார்க்கிறீர்கள்!

''எதற்காகத் தாரா? ஏன் அப்படி அலறிப் புடைத்துக் கொண்டு ஓடவேண்டும்? சாத்தியமில்லாத ஒரு செயலில் ஈடுபட்டு ஏமாற்றமடைவானேன்? மனச்சாட்சியைமுறித்துவிட முயலுவானேன்? மனிதனை மரணம் ஆட்கொள்கிறவரையில் மனச்சாட்சிக்கும் சாவு கிடையாது! அதை ஒப்புக் கொள்ளுங்கள்! அப்போது நம் காதலையும் ஒப்புக் கொள்கின்ற நெஞ்சுறுதியைப் பெறுவீர்கள்!''

தாரா நீண்ட நேரம் மௌனமாக இருந்தாள். சிந்தனைக்கு நிறையச் சங்கதிகளை அளித்த பிறகு, மனத்துக்குள் அவற்றை அவள் நிதானமாக அசை போட அவகாசமுமளித்தான் வடிவேலு.

மெல்ல மெல்ல அவள் வதனம் மட்டிலும் ஏதோ ஒரு வரம் கோர முற்படுவது போல் இலேசாக உயர்ந்தது. சிவப்பேறி நீர் படர்ந்து நின்ற கண்கள் அவள் நெக்குருகி நலிவுற்றிருப்பதை நவின்றன.

''கணவனைத் துறந்த அபாக்கியவதியாகி விட்ட போதிலும் எவ்வளவு திடசித்தத்துடன் வருஷக் கணக்கில் நான் காலத்தை ஓட்டி வந்திருக்கிறேன்; கண்ணியமாக நடந்து கொண்டு வந்திருக்கிறேன் என்பதையெல்லாம் நீங்கள் சுலபமாகப் புறக்கணித்து விட்டீர்கள். தெம்பான மனம் இல்லாமலா இதய அந்தரங்கத்தில் என்னை வெறுத்து ஒதுக்கிய கணவருடன் கூடி வாழ்ந்தேன், நான்? எவ்வளவோ மன்றாடியும் அதற்கெல்லாம் செவிசாய்க்காத அவர் தடியடி பட்டுப் பிராணத் தியாகம் செய்து என்னை விதவையாக்கி விட்ட போதிலும் விண்டு போகாமல் இருக்கிறதே இந்தப் பாழும் இதயம், அதன் உறுதிக்கு என்ன குறைச்சல்? தேனூருக்கு வந்தபிறகு வெங்கிட்டு வாத்தியாருக்காக, நியாயத்துக்காகப் போராடவில்லையா? பெண்ணாக இருந்தும் பள்ளியொன்றைத் தொடங்கவில்லையா? அனைவரது மதிப்புக்கும் மரியாதைக்கும் ஆளாக வில்லையா ? வைராக்கியம் நிறைந்த உள்ளமில்லையானால் இவையெல்லாம் சாத்தியமாகியிருக்குமா?''

வடிவேலு ரகசியமாகச் சிரித்துக் கொண்டான். 'தனக்குத் தானே ஆறுதல் சொல்லிக் கொள்ளுகிறாளா இவள்? யார் கேட்டது இந்தச் சப்பைக்கட்டை?'

''என் காதலை ஏற்க மறுக்கும் உறுதியை உங்கள் உள்ளம் பெறவில்லை; பெறப் போவதில்லை. அதை ஒப்புக் கொள்ளுங்கள் தாரா! ஒப்புக் கொள்ளுங்கள் !''

''உங்கள் கட்சி தர்க்கத்துக்குத் தேவையில்லாததை நீங்கள் நினைத்துக் கூடப் பார்க்க மாட்டேனென்கிறீர்கள்! என் உள்ளம் கொஞ்சம் தடுமாற ஆரம்பித்திருப்பதாகவும் சிறிது சிறிதாகப் பலவீனமடைந்து வருவதாகவுமே [பரிகாசம் செய்கிறீர்கள். அப்படிக் கேலி செய்வது எனக்குச் சொல்லி முடியாத அளவுக்குத் துக்கத்தைத் தந்தபோதிலும் உங்களுக்கு ஆனந்தமாயிருந்தால் சரி.''

வடிவேலு குறுக்கே புகுந்து இதை மறுத்துரைக்க வாயெடுத்தான். அவனை அமைதியாக இருக்குமாறு சமிக்ஞை செய்தாள் தாரா. ''நான் பேசி முடித்து விடுகிறேன்'' என்று கூறிவிட்டுத் தொடர்ந்தாள். ''நெஞ்சுறுதியைப் பெறுவதற்கான வழியைச் சற்று முன் எனக்குக் கற்றுக் கொடுக்க முற்பட்டீர்கள். ஆனால் அத்தகைய திடமான உள்ளம் உங்களிடம் இருக்கிறதா என்பதை யோசித்தீர்களா?''

''தாராளமாக இருக்கிறது'' என்றான் வடிவேலு தன்னம்பிக்கையுடன்.

''அன்றைய இரவை இன்னும் தெளிவாக ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். நீங்கள் அன்று நம்முடைய சம்பாஷணை காதலைப் பற்றி என்பதாக எண்ணிக் கொண்டிருந்தீர்கள். நானோ போர் முனைக்கு நீங்கள் போகப் போவதைக் குறித்தே பேசிக் கொண்டு வந்தேன். ஓரிடத்தில் நான், 'சம்மதத்தைத் தான் அளிக்கப் போகிறேன்' என்றதும் என் காதலை வெளியிட்டு விட்டதாக நீங்கள் எடை போட்டுக் கொண்டீர்கள். அப்போது உடனடியாக உங்கள் மனம் பெற்றவர்களைப் பற்றியும் ஊராரைப் பற்றியும் கவலையோடு நினைக்கவில்லையா? அவர்கள் எவ்வாறு இதை ஏற்றுக் கொள்வார்களோ என்று எண்ணியபோது நீங்கள் திகைப்படையவில்லையா?''

''சில விநாடிகள் அப்படி நான் தடுமாற்றம் அடைந்தது வாஸ்தவம் தான்'' என்று தாமதமின்றி ஒப்புக் கொண்டான் வடிவேலு. ''அதனாலேயே நான் கோழை என்று தீர்

# காஷ்மீர் பொக்கே
# ால்க் உபயோகித்து
# மணிக்கணக்காக
# சுகந்தத்துடனும்
# புதுமையுடனும்
# இருங்கள்



னதமான காஷ்மீர் பொக்கே
தரம், ஒரு அழகுசாதன டால்க்...
குழந்தைக்கான பவுடர்
விரண்டையும் அளிக்கிறது.

ஷ்மீர் பொக்கே டால்க்கின்
மையான, பூவிதழ்போன்ற
ன்மையான ஸ்பரிசத்தை
கள் உணரும்பொழுது ஒரு
சண்டிற்குள் இருப்பது போலவே
ன்றும். உடல் முழுவதும் தடவிக்
ண்டு அதன் ஊற்றுப்பெருக்
ா எழும் புதிய நறுமணத்தில்
ாத்து மகிழுங்கள்



குழந்தையை இதமுடனும் சுகமுடனும் வைத்திருங்கள். காஷ்மீர் பொக்கே, எந்த ஒரு விசேஷ குழந்தைக்கான பவுடரைப் போலவே, மிருதுவும் பட்டுப்போன்றதுமானது. நீங்கள் இருவருமே உபயோகிக்கக்கூடிய அவ்வளவு சௌகரியமான ஒரே பவுடர்!




# காஷ்மீர் பொக்கே

டால்கம் பவுடர்—ஆடவர் விரும்பும் சுகந்தமுள்ளது!

CB-6-19-TAM.

உங்கள் சருமம்
மிருதுவாக, சுத்தமாக

புதுமலர்ச்சியோடு
விளங்க




டாடாவின்
ஓ டி கோலான்
சோப்

TEST-25

மானித்து விடாதீர்கள். அசைக்க முடியாத மனோபலம் எனக்கு உண்டு தாரா! அதோடு கட்டுமஸ்தான தேகமும் உலக்கை போன்ற இரு கரங்களும் இருக்கின்றன. உழைக்க என்னால் முடியும். தாரா! என்னுடன் புறப்பட்டு வாருங்கள். இந்தத் தேனூரும் வேண்டாம்; உங்கள் கான்பூரும் வேண்டாம். யாருக்குமே நம்மை இன்னாரென்று தெரியாத ஒரு பிரதேசத்துக்குப் போவோம். அங்கே நான் பாடுபட்டுப் பொருள் சேர்த்து உங்களையும் மோகனையும் காப்பாற்றுகிறேன். நிம்மதியாக வாழ்வோம். தாரா! 'சரி' என்று ஒரு வார்த்தை சொல்லுங்கள்!''

''நிஜமாகவே எனக்காக நீங்கள் இதைச் செய்வீர்களா? உற்றார் உறவினர் சொத்து சுகம் எல்லாவற்றையும் துறந்து விட்டு இந்த அபலைக்குப் புனர்வாழ்வு அளிக்கும் நோக்கத்தோடு கிளம்பி வந்து விடுவீர்களா? லட்சக்கணக்கான ரூபாய் பெறுமானமுள்ள நில புலன்களை லட்சியம் செய்யாமல் துடைத்தெறிந்து விட்டு வாரக் கூலியும் தினக் கூலியும் பெற்றுப் பரம ஏழையாக என்னுடன் குடும்பம் நடத்துவீர்களா?''

வடிவேலு ஒரு வேகத்தோடு எழுந்து நின்றான். ''சத்தியமாகச் செய்வேன், தாரா! உங்களுக்கு அதில் லவலேசம் கூடச் சந்தேகம் வேண்டாம்'' என்றான். அவனுடைய நாடித் துடிப்பு அதிகரித்தது. இருதயம் ஒவ்வொரு முறையும் அடித்துக் கொள்ளும் போதும் 'தாரா' வென்ற அந்த மகாமந்திரத்தை உச்சரித்தது. ''என்னைப் போன்ற பாக்கியசாலி வேறு யார்?'' என்று பரவசத்துடன் கேட்டாள் தாரா. ''எத்தனை அன்பு என் மீது நீங்கள் வைத்திருக்கிறீர்கள் என்பதை இன்றைக்கு நன்றாக உணர்ந்து கொண்டேன். அதைத் தெரிந்து கொண்ட குதூகலத்தோடு, மன நிறைவோடு எனக்குச் சென்று வர அனுமதி கொடுங்கள்!'' என்றாள்.

வடிவேலுவின் இதயம் நின்றுவிட்டதா? இல்லையானால் அவன் முகம் ஏன் இப்படி வெளிறி விட்டிருக்கிறது?

பாயாகச் சுருண்டு விழுந்தான் அவன், அவள் காலடிகளில். பஞ்சு போன்ற மிருதுவான அவள் மடியில் முகம் புதைத்து, ''இரும்பு!'' என்று குற்றம் சாட்டினான். ''தாரா! உங்கள் இருதயம் இரும்பு!'' என்று அலறினான்.

அவன் தலையைக் கோதி விட்டு ஆசுவாசப்படுத்தியபின் கேசத்தைப் பற்றி மெல்லத் தூக்கி அவன் முகத்தை உயர்த்தினாள் தாரா. அவன் கன்னங்களை இரு கரங்களிலும் ஏந்திக் கொண்டு ''இன்னும் ஒரே ஒரு சந்தர்ப்பம் கொடுக்க மாட்டீர்களா எனக்கு?'' என்று கம்மிய குரலில் கெஞ்சிக் கேட்டாள் அவள். ''தேச சேவையில் ஈடுபட்டு நாட்டின் விடுதலைக்காகப் போராடத் தீர்மானித்திருக்கிறேன் நான். போலீஸார் விளையாட்டாக என் கரங்களில் பூட்டிய விலங்கு எனக்கு அந்த ஆவேசத்தை ஊட்டியிருக்கிறது. உங்கள் அனுமதியோடு நான் அதில் முழுமூச்சுடன் இறங்க ஆசைப்படுகிறேன். தயவு செய்து மறுக்காதீர்கள்!'' என்றாள்.

''தாரா! சுலபமாகச் சொல்லி விட்டீர்களே! சுதந்திர இயக்கத்தில் பங்கு கொள்வதற்கென்று என்னை விட்டு விலகி வெகு தூரம் சென்று விட்டால் என்னையும் என் காதலையும் தட்டிக் கழித்து விடலாம் என்பதுதான் உங்கள் மனோரதமா?''

''தட்டிக் கழிக்கநினைக்கவில்லை; ஒத்திப்போட விரும்புகிறேன் என்று வேணுமானால் வைத்துக் கொள்ளுங்கள்.''

வடிவேலு சிந்தனை ரேகைகள் நெற்றியில் படர விழிக்கவே, ''விளக்கமாய்ச் சொல்கிறேன் கேளுங்கள்'' என்றாள் தாரா. ''இரண்டு மூன்று வருஷங்கள் நாம் பிரிந்திருப்போம்; நம்மிடையே தளிர் விட்டிருப்பதாய் நீங்கள் கூறுகின்ற அந்தக் காதலைச் சோதிப்போம். அந்தப் பரீட்சையில் அது தோல்வியடையவில்லை என்றால் பிறகு சமூகத்தை எதிர்த்து வெற்றி கொள்ளும் முயற்சியை மேற்கொள்வோம். அவசரப்பட்டு நாம் யாரையும் விரோதித்துக் கொள்ள வேண்டாம். பின்னால் வருத்தப்படுவதற்கு இடம் வைத்துக் கொள்வானேன்?''

''தாரா! ரொம்பவும் முன்னெச்சரிக்கையாக இருக்கிறீர்கள். தவறில்லை தான். உங்கள் சோதனைகளுக்கு உட்பட நானும் தயார். நீங்கள் வெள்ளையனை வெளியேற்றச் சாத்வீகப் போர் புரியுங்கள். நான் ஹிட்லரின் கொட்டத்தை அடக்கப் புறப்படுகிறேன். ஆனால் தாரா......''

''ஆனால், என்ன?''

''உங்கள் மனத்தைக் குறைவின்றிப் புரிந்து கொண்டு விட்டதாக நான்தான் இந்த வினாடி வரையில் வாய் கிழியப் பேசி வந்திருக்கிறேனே ஒழிய நீங்கள் ஒரு வார்த்தை கூட மனம் விட்டுச் சொல்லவில்லையே!'' என்றான் வடிவேலு ஏக்கத்தோடு.

தாராவின் பத்து விரல்களும் காதலனின் கரங்களைப் பற்றிக் கனியிதழ்களில் ஒற்றிக் கொண்டன. ஓராயிரம் முறை அந்த உதடுகள் துடித்து, ஒவ்வொரு துடிப்பின் போதும் ஓராயிரம் இனிய உண்மைகளை உணர்த்தின.

முதல் பாகம் முற்றிற்று












# ஜாகர்தாவை நோக்கி!

குண்டுமணி

மூன்பு ஈழம், புட்பகம், சாவகம் ஆகிய தீவுகளில் சென்றேறி ஜயக்கொடி நாட்டிப் புகழ் பெற்றான் தமிழன். இன்று இந்திய விளையாட்டு வீரர்கள் இந்தோனீசியாவின் தலைநகரான ஜாகர்தாவில் வெற்றிக் கொடி நாட்டச் சென்றிருக்கிறார்கள். ஜாகர்தாவில் நான்காவது ஆசிய விளையாட்டுப் போட்டி ஆகஸ்டு மாதம் இருபத்திநான்காந் தேதியிலிருந்து செப்டம்பர் மாதம் நாலாந் தேதி வரை நடைபெறுகிறது. இந்தோனீசிய சர்க்கார் இந்த விளையாட்டுப் போட்டியை யொட்டி அழகழகான தபால் தலைகள் வெளியிட்டிருக்கிறார்கள்.

ஜாகர்தாவில் நடைபெறும் இந்த நான்காவது ஆசிய விளையாட்டுப் போட்டியில் கலந்து கொள்வதற்காகச் செல்லும் இந்திய ஹாக்கி வீரர்கள் சென்னையில் தென்பிராந்திய ஹாக்கி வீரர்களோடு ஜூலை 28-ந் தேதி ஓர் எக்ஸிபிஷன் ஆட்டம் ஆடிவிட்டுச் சென்றார்கள். முதலில் இந்திய ஹாக்கி வீரர்களை விடத் தென்பிராந்திய கோஷ்டியினர் நன்றாக ஆடி ஒரு 'கோலை'ப் போட்டு விட்டனர். தென் பிராந்திய கோஷ்டியைச் சேர்ந்த ஜபார் அந்தக் 'கோலை'ப் போட்டு ரசிகர்களின் பாராட்டைத் தேடிக் கொண்டார். அட, பாவமே! ஆசியப் போட்டியில் ஆடப் போகிறவர்கள் தென்பிராந்தியக் கோஷ்டியிடம் குட்டுப் பெற்று விடுவார்களோ என்று பரிதாபப்பட்டார்கள் பலர். இந்திய ஹாக்கி வீரர்களும் தங்களால் இயன்ற அளவு 'கோல்' போடத்தான் முயன்றார்கள். ஆனால் அத்தனையையும் தென்பிராந்திய கோஷ்டி கோல் கீப்பர் கிறிஸ்டி தடுத்து அன்றைய 'ஹீரோ' வாக விளங்கினார். இவரும் ஜாகர்தாவுக்குச் சென்றிருக்க வேண்டியவர். அன்னிய நாணயப் பிரச்னை குறுக்கிட்டு இவரைத் தடுத்து நிறுத்தி விட்டது! தென் பிராந்திய கோஷ்டியில் பின்பக்க ஆட்டக்காரர்கள் திறமையோடு பந்தைத் தேக்கியதால் பல தடவை இந்திய கோஷ்டியினர் 'கோல்' அடிக்கும் சான்ஸை இழந்தனர். 'ஷார்ட் கார்னர்' பல தடவைகள் கிடைத்தும் பயனில்லாமல் போயிற்று. கடைசியில் தலை பிழைத்தது தம்பிரான் புண்ணியம் என்ற கதையாக இந்திய ஹாக்கி ஆட்டக்காரர்கள் ஒரு 'கோல்' போட்டு ஆட்டத்தை வெற்றி தோல்வியின்றி முடித்தனர். இதற்கே இவ்வளவு சிரமப்பட்டு விட்டால் பிறகு அன்னிய நாடுகளுடன் தாக்குப் பிடிக்க வேண்டுமே, என்ன செய்வார்களோ?

முன்பெல்லாம் ஒலிம்பிக் ஹாக்கி வீரர்கள் எதிர்த்த கோஷ்டி மீது சரமாரியாக இருபது முப்பது 'கோல்'கள் போட்டு இணையற்று விளங்கியதைப் பார்த்திருக்கிறோம். ஜாகர்தா செல்லும் வழியில் சிங்கப்பூரில் ஆடிய நம் இந்திய கோஷ்டியோ ஒரே ஒரு 'கோல்' போட்டுத்தான் வெற்றி பெற்றிருக்கிறது. உலகிலேயே இணையற்ற வீரர்கள் என்ற பட்டத்தை மறுபடியும் நம் இந்திய கோஷ்டியினர் சாதிக்க வேண்டும் என வாழ்த்துகிறோம்.

ஹாக்கி தவிர வாலிபால், கால் பந்து, மல் யுத்தம், பாக்ஸிங் முதலிய கலைகளில் தேர்ந்த இந்திய ஆட்டக்காரர்களும் ஜாகர்தாவுக்குச் செல்கிறார்கள். ஆசிய விளையாட்டுப் போட்டியில் இந்திய ஆட்டக்காரர்கள் தங்கப் பதக்கங்களும், வெள்ளிப் பதக்கங்களும் நிறையப் பெற்று இந்தியாவின் பெருமையை உயர்த்த வேண்டும் என்று ஆசி கூறி அனுப்புவோம்.











## புள்ளிமான்

உலகில் உள்ள எத்தனையோ மான் வகைகளுள் அற்புதமான அழகு வாய்ந்த மான் புள்ளிமான்.

சில மான் வகைகளுக்குக் கோடைக்காலத்தில் மட்டும் உடலில் இம்மாதிரியான புள்ளிகள் தோன்றும். பிறகு அவைகள் மறைந்துவிடும். ஆனால் பிறக்கும் போதே அழகுப் புள்ளிகளோடு பிறந்து வாழ்நாட்களெல்லாம் அந்தப் புள்ளி நகையோடு வாழும் மான், நம் பாரதத்திலும் இலங்கையிலுமே காணப்படுகின்றன. மான் இனத்தில் இது பெரியது அல்ல. நிமிர்ந்து நின்றால் - தோள் வரை - புள்ளி மானின் உயரம் மூன்றடிதான். சிவந்த காவி வர்ணத்தில் உடலெல்லாம் வெள்ளையான புள்ளிகளோடு இது அழகு சொட்ட நிற்கும். இதன் கொம்புகள் முப்பது அங்குலம் வரை கிளையாக வளரும். மூங்கில் காடுகளிலும், புதர் மண்டிய பிரதேசங்களிலும், அடர்ந்த புல்வெளிகளிலும் அனேகமாக ஓடைக் கரைகளின் ஓரமாகவும் இவை வசிக்கும். ஆனால் இயற்கைச் சூழலில் இதைக் கண்டு பிடிப்பது சிரமம். சிவந்த காவி வர்ணம் — காய்ந்த இலைகள் போலவும், புள்ளிகள் நர்த்தனமாடும் மர நிழல்களாகவும் வேட்டையாடுபவர்களுக்குத் தோன்றும்.

காலையில் வெய்யில் ஆரம்பிக்கு முன்னும் மாலையில் வெயில் தாழ்ந்த பிறகுமே இது இரை தேட வெளிக் கிளம்பும். பகல் வேளைகளில் நிழல் தாழ்ந்த பகுதிகளில் இளைப்பாறிக் கொண்டிருக்கும்.

## பொங்கிச் சொரியும் நீரூற்று




நந்தவனங்களில் தானாகப் பீரிட்டுச் சொரியும் ஊற்று நீர்க் குழாய்களைப் பார்த்திருப்பீர்களே? அதே போல் உங்கள் வீட்டில் நீங்களே கூடச் செய்து பார்த்து மகிழலாம். இதற்கு வேண்டியதெல்லாம் ஒரு பாட்டில், அதை மூடும் கார்க். கூல் டிரிங்க் சாப்பிடப் பயன்படும் 'ஸ்ட்ரா' ஒன்று. பாட்டிலில் பாதியளவுக்கு நீரை நிரப்பிக் கொள்ளுங்கள். கார்க்கின் மையத்தில் ஸ்ட்ரா நுழையும்படி துவாரமிட்டு அதில் அந்தக் குழலைச் செருகி பாட்டிலை அழுத்தி மூடுங்கள். கார்க்கில் செருகிய 'ஸ்ட்ரா' பாட்டில் நீரில் அடிவரை மூழ்கி இருக்க வேண்டும் (படம்). பாட்டிலுக்கு வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் ஸ்ட்ராவின் மூலம் உன்னால் முடிந்த மட்டும் காற்றை உள்ளே ஊதிச் செலுத்து. கொப்புளங்களாகக் காற்று குபுகுபுவென்று உள்ளே நிறையும். ஊதியானதும் சட்டென்று உன் முகத்தை அப்பால் இழுத்துக் கொள். ஏன் தெரியுமா? அந்த 'ஸ்ட்ரா'வின் வழியாக நீர் பீச்சி அடிக்கும். வெகு நேரம் வரை நீரூற்றைப் போலத் தண்ணீர் சொரிந்தபடி இருக்கும்.

இப்படி ஏன் ஏற்படுகிறது தெரியுமா? பாட்டிலில், நீருக்கு மேலேயுள்ள பாகத்தில் முன்பே காற்று இருக்கிறது. நீ மேலும் காற்றை ஊதி உள்ளே செலுத்துகிறாய். இதனால் அந்த இடத்தில் காற்றின் அழுத்தம் அதிகமாகிறது. நீ ஊதுவதை நிறுத்தியதும் பாட்டிலுக்குள் அடைபட்டிருக்கும் காற்று வெளியேற முயற்சி செய்கிறது. அப்போது அது நீரைக் கீழே அழுத்துகிறது. தண்ணீர் எப்படி வெளியேறும்? குழலின் அடியிலுள்ள துவாரத்தின் மூலம்தான். நீ எத்தனை பலமாக ஊதிக் காற்றை உள்ளே செலுத்தி இருக்கிறாயோ அத்தனை வேகமாகவும் உயரமாகவும் தண்ணீர் வெளியே பீச்சி அடிக்கும். காற்றின் அழுத்த சக்திக்கு இது ஓர் உதாரணம்.

## கோப்பையைத் தூக்கும் பலூன்

ஒரு பலூனைக் கொண்டு இரண்டு மக் கோப்பைகளைத் தூக்குவாயா? மக் கோப்பையின் கைப்பிடிகளைத் தொடவே கூடாது. முடியாது என்றுதானே சொல்லுவாய்? நான் முடியும் என்று சொல்லுகிறேன். பலூனைக் கொஞ்சமாக ஊது. இரண்டு கோப்பைகளையும் பலூனின் பக்கத்துக் கொன்றாக




வைத்து ஊதிய பலூனை அதற்குள் திணி. (படம் 1) அந்த நிலையிலேயே பலூனை நன்றாக ஊதிப் பெரிதாக்கு. பலூன் வாயைக் காற்றுப் போகாமல் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு தூக்கு. மக் கோப்பைகள் இரண்டும் பலூனின் பக்கங்களில் விழாமல் ஒட்டிக் கொண்டிருப்பதைக் காண்பாய். (படம் 2) மந்திரமா, மாயமா? இல்லவே இல்லை. காற்றின் அழுத்தும் சக்திதான் இந்த வித்தைக்குக் காரணம். எப்படி என்று நீயே யோசித்துப் பார்.

இந்த அற்புதமான கோயிலே கி.மு. 353-ல் கிரீஸ் தேசத்தின் தென்மேற்கே ராணி ஆர்டிமிஷியா தனது கணவன் மாசோலஸின் நினைவாகக் கட்டினுள். பின்னால் மகா அலெக்ஸாந்தரால் இந்த மாபெரும் கோயில் இடித்துப் பாழாக்கப்பட்டது. புதை பொருள் ஆராய்ச்சிகளின் மூலம் இந்தக் கோயில் ஐந்து பகுதிகளைக் கொண்டு விளங்கியதென்று தெரிகிறது. உயர்ந்த அடித்தளம், அதன் மீது கம்பீரமான தூண்கள் நிறைந்த மண்டபம்,



அதன் மீது பிரமிட்டின் தோற்றத்தில் படிகள் கொண்ட அமைப்பு. அதன் மீது ஒரு பீடம், அதன் உச்சியில் நான்கு குதிரைகள் பூட்டிய தேரை மாசோலஸ் ஓட்டி வருவது போன்ற அழகிய சிலை. இதுவே இந்தக் கோயிலின் அமைப்பு. அடித்தளம் பச்சைக் கற்களால் கட்டிச் சலவைக் கற்களால் மூடப்பட்டிருந்தது. தூண்கள் நிறைந்த மண்டபத்தில் கம்பீரமான சிலைகள் அழகு செய்தன. இதன் விதானத்திலே கிரேக்கப் போர்களைப்பற்றிய சிற்பங்கள் அணி செய்தன.

இந்த நூற்றுண்டின் மகத்தான அறிவாளி; ஆழ்ந்த சிந்தனையாளர், அணு யுகத்தின் அற்புத மனிதர் என்றெல்லாம் இவரை இன்று உலகம் புகழ்கிறது. ஆனால் சிறு வயதிலே இவர் மிகவும் மந்தமாக, சங்கோசியாக, எதிலும் பின் தங்கிய பையனாக இருந்தார். பேசக் கூடத் தெரியாத அப்பாவியாக, ஆசிரியர்களால் அலட்சியமாக 'உதவாக்கரை' என்ற சிறப்புப் பெயர் பெற்றார். பிறகு கணிதத்தில் தங்களையும் மிஞ்சிய அறிவாளி இவன் என்பதை அறிந்தபோது இவன் மீது பொறாமை கொண்டு வெறுத்தார்கள்.

பின்னால் கணிதப் பேராசிரியராக விளங்கிய இவர் ஒருசமயம் பெர்லின் நகரில் டிராம் காரில் போனார். கண்டக்டரிடம் சில்லறை சரியாகத் தரவில்லை என்று சண்டை பிடித்தார். கண்டக்டர் அவர் கையிலிருந்த சில்லறையை வாங்கி எண்ணிப் பார்த்துவிட்டுச் சரியாக இருக்கவே "கணக்கு வழக்குத் தெரியாத ஆளய்யா நீ" என்று ஏசினான்!

'கால இடம் பொதுத் தொடர்பு' என்ற தத்துவத்தைக் கண்டறிந்த விஞ்ஞானி இவர். அணுக்களின் தன்மையை விளக்குவதற்கு ஆதாரமான தத்துவம் இது. உலகத்திலேயே பத்துப்பன்னிரண்டு பேர்களுக்குத்தான் இவர் கண்டு பிடித்த தத்துவத்தின் உண்மைப் பொருள் தெரியும். ஆனால் இதை விளக்க முயலும் புத்தகங்கள் மட்டும் இதுவரை ஆயிரத்துக்கு மேலே எழுதப் பட்டுள்ளன.

இவர் கண்டுபிடித்துள்ள தத்துவத்தைப் போலவே இவரும் ஒரு விந்தையான மனிதர். மனிதர்கள் விரும்பும் புகழ், பொருள், சுகவாழ்க்கை ஆகியவற்றில் அதிக நாட்டம் செலுத்தாதவர். மனிதனின் சிந்தனையிலே ஓர் ஒழுங்கு வேண்டும் என்று கூறும் இவர் தம் வாழ்வில் அந்த ஒழுங்கைக் கடைப்பிடிக்காதவர். எளிய வாழ்க்கையே இவருக்கு இன்பமளிக்கும். கசங்கித் தொய்ந்துபோன பழைய ஆடைகளையே உடுத்துவார். தொப்பியே அணிய மாட்டார். குளியலறைக்குள் சீட்டி யடித்தும், பாடியும் மகிழும் 'சுபாவம் உண்டு இவருக்கு. குளிக்கும் தொட்டியிலிருந்தபடி, குளிக்கும் சோப்பை உபயோகித்தே க்ஷவரம் செய்து கொள்ளுவார். க்ஷவரத்துக்கு என்று தனியான சோப்பை உபயோகிக்க விரும்பாதவர் இவர். பிரபஞ்சத்தின் குழப்பமுண்டாக்கும் புதிர்களை யெல்லாம் விடுவிக்க வழி வகுத்துக் கொடுத்தவருக்கு, இரண்டுவித சோப்புக்கள் வைத்துக்கொள்ளுவதால் குழப்பம் ஏற்படுமாம்!



வாழ்க்கையில் நிம்மதியையும் சந்தோஷத்தையும் அனுபவிக்கும் அறிஞர் இவர். "என் சந்தோஷ வாழ்க்கையின் தத்துவம் யாரிடமிருந்தும் எதையும் நான் எதிர்பார்க்காதது தான்" என்கிறார் இவர். ஆராய்ச்சி, வயலின் வாசிப்பது, இவையே இவருக்கு மகிழ்ச்சி யளிக்கும் செயல்கள். 1921-ல் நோபல் பரிசு பெற்ற இவர் 1879-ம் ஆண்டு மார்ச் மாதம் 14-ந் தேதி ஜெர்மனியில் பிறந்தவர். இன்னுமா இவர் யார் என்று தெரியவில்லை. இவர் தான் **ஆல்பர்ட் ஐன்ஸ்டீன்!**

# தேயிலையின் கதை

களைப்பை நீக்கி உற்சாகத்தைக் கொடுக்கும் ஏழைகளின் பானமான தேயிலை இந்திய அரசாங்கத்துக்கு ஏராளமான பணத்தைக் கொடுக்கிறது. உலகச் சந்தையில் இந்தியத் தேயிலைக்கு நல்ல கிராக்கி உண்டு. பாரதத்தின் ஏற்றுமதிகளில் தேயிலை முக்கியமானது.

5000 வருடங்களாகச் சீனர்கள் தேயிலையைக் குடித்து வந்தாலும் அது இந்தியாவிலிருந்துதான் அங்கு சென்றிருக்க வேண்டும். தேயிலையின் உபயோகம் நம் நாட்டில் சரித்திர காலத்துக்கும் முற்பட்டது. புத்தர் ஜாதகக் கதைகளில் தேயிலையைப் பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. ஆங்கிலேயர்களின் தேசிய பானம் இது. ஒரு நபருக்கு ஒரு வருஷத்துக்கு பத்து பவுண்டு தேயிலை வீதம் — அதாவது ஒரு நாளைக்கு 250,000,000 கோப்பைகள் — அந்த நாட்டில் செலவாகிறது. (இது 1946-ம் வருடத்தியக் கணக்கு)

பாடம் செய்த தேயிலையை ரக வாரியாகப் பிரிக்கிறார்கள். எப்படித் தெரியுமா? பலதரப்பட்ட தேயிலையிலிருந்து பானம் தயாரிப்பார்கள். ஒவ்வொன்றும் தனித் தனியாகக் கோப்பைகளில் இருக்கும். தரம் பிரிக்கும் நிபுணர் அவைகளை ஒவ்வொரு வாய் உறிஞ்சிக் குடித்துச் சுவைத்து அதனதன் தன்மையை நிரூபித்துப் பிரிப்பார். எத்தனையோ இயந்திரங்கள் தோன்றியுள்ள இந்த நாகரிக யுகத்திலும் கூடத் தேயிலையின் தரத்தை மனிதன் ருசித்து அறிந்தே நிர்ணயிக்கிறான். டீ என்பதற்குச் சீன மொழியில் 'சா' என்று பெயர். அதுவே நம்மிடையே 'சாய்' என்று வழங்கலாயிற்று. இந்தியாவுக்கு வந்த ஐரோப்பியர் நம்மிடமிருந்து 'சா'வை ஏற்றுமதி செய்து கொண்டு போய் விட்டார்கள்.

தேயிலைச் செடியின் நுனிகள், அதாவது இரண்டு இலைகளோடு கூடிய கடைசிக் கொழுந்துதான் பானத்துக்குப் பயன்படுகிறது. தேயிலைக் கொழுந்தை மட்டும் கிள்ளுவதில் திறமை வேண்டும். இத்தகைய திறமைசாலியால் ஒரு நாளைக்கு 30,000 கொழுந்து முடிகளைக் கிள்ளிச் சேகரிக்க முடியும்.

தேயிலையிலும் காப்பியைப் போலவே சுருசுருப்பளிக்கும் 'காபின்' என்ற பொருள் கலந்துள்ளது. ஒரு நிலையில் இது விஷமும் கூட. அண்ணல் காந்தியின் அறிவுரைகளில் ஒன்று காப்பி தேயிலைப் பானங்களை அருந்தாதே என்பது. சமீபத்திய ஆராய்ச்சிகள் தேயிலையில் மிக முக்கியமான விடமினை 'ரிபோபினேவின்' கலந்திருப்பதாகத் தெரிவிக்கின்றன. இது விடமின் பி(2) கூட்டத்தைச் சேர்ந்த ஒன்று.

இந்தோசீனா, ஜாவா, சுமத்திரா, பார்மோஸா, ஜப்பான், ஆப்பிரிக்காவின் சில பகுதிகள் இங்கெல்லாம் தேயிலை பயிரிடப்பட்டாலும் இந்தியத் தேயிலைக்கே உலக மார்க்கெட்டில் மதிப்பு அதிகம்.

நல்ல தேயிலை, அது பயிரிடப்படும் பூமியைப் பொருத்திருக்கிறது. சைனாவில் தேயிலைச் செடிகளினிடையே மல்லிகைச் செடிகளையும் சேர்த்துப் பயிரிடுகிறார்கள். ஆகவே சீனத்துத் தேயிலையில் மல்லிகை மணம் வீசுமாம். தேயிலைச் செடி பயிரிட்டு மூன்றாவது வருடத்தில்தான் அதன் கொழுந்தைக் கிள்ளுவார்கள்.

தேயிலைப் பானத்தை உலகில் பல்வேறு விதமாகத் தயாரித்து அருந்துகிறார்கள். தேயிலைக் கஷாயத்தை மட்டும் ருசிக்குச் சர்க்கரை சேர்த்து அருந்துவோர் உண்டு. பாலைக்கலந்து குடிக்கும் பழக்கம்தான் நமக்குத் தெரியுமே! உலகத்தின் கூரையான திபேத் நாட்டில் தேயிலைப் பானத்தில் கட்டி வெண்ணெயைக் கலந்து குடிப்பார்களாம். அஸ்ஸாம் நாட்டில் எண்ணெயையும் வெள்ளைப் பூண்டையும் தேயிலைப் பானத்துடன் கலந்து பருகுவார்களாம். ரஷ்யாவின் சில பகுதிகளில் மதுவகையை 'ஜாம்' எனப்படும் பழக்கூழுடன் கலந்து குடிப்பார்களாம். ஆங்கிலேயர்கள் ஒரு காலத்தில் 'ஜின்' என்ற மதுவில் தேயிலைத் தூளைத் தூவிக் குடித்தார்கள்.

உலகிலேயே தேயிலைப் பானத்தை அருந்துவதை ஒரு கலையாக, அதை ஒரு சடங்கு போலச் செய்கிறார்கள் ஜப்பானியர்கள். விருந்தாளிகளை அழைத்து நன்கு அலங்கரிக்கப்பட்ட அறையின் நடுவே மரியாதையும் அன்பும் கலந்த உபசரிப்போடு சின்னஞ்சிறிய தேயிலைக் கோப்பைகளில் விசேஷமாகத் தயாரித்த பானத்தை ஊற்றிக் கொடுத்து அவர்கள் எதிரே தாங்களும் மண்டியிட்டு அமர்ந்தவண்ணம் 'டீ' அருந்தும் அந்த அழகு இருக்கிறதே; அதை நாம் ஒரு முறை ஜப்பான் நாட்டுக்குச் சென்று அனுபவித்தால் தான் உணரமுடியும்.

உலகத் தேயிலையின் தேவையைச் சமாளிக்கப் புதிய பிரதேசங்களிலெல்லாம் இந்தச் செடியைப் பயிரிட ஆராய்ச்சிகள் நடத்தி வருகிறார்கள். க்வீன்ஸ்லாந்தின் தென் பகுதி, ஆஸ்திரேலியா இங்கெல்லாம் இந்தியத் தேயிலை ரகங்கள் விளைவிப்பதற்கு ஏற்றதாக இருக்கிறதாம். டாஸ்மேனியாவில் சீனத் தேயிலை ரகம் பயிராகலாமாம். தங்கனிகாவில் 9000 ஏக்கரா நிலப் பரப்பில் தேயிலை பயிரிடப்பட்டுள்ளது.

ஆங்கிலேயர்கள் எத்தனையோ முயற்சிகள் செய்தும் இந்தியத் தேயிலையின் தரத்தைக் குறைக்க முடியவில்லை. அது நமக்குப் பெருமைதானே? அதைக் காப்பாற்றி வர வேண்டும். சரி 'டீ' சாப்பிடப் போகலாம், வாருங்கள். "கரம் சாய்...கரம் சாய்!"

# 'என்குரு'

அ. சீனிவாசராகவன்.



[ஆதி சங்கரர் அருளிய 'மநீஷா பஞ்சகம் ஏகபதன் தமிழ் வடிவம்]

விழிப்பினில் கனவில் துயிலினில் நாளும்
விளங்கிடும் ஞானமும் எதுவோ,
வேதனே முதலாய்ச் சிற்றெறும் பீறாய்
விளைந்துள உடல்களில் எல்லாம்
நுழைந்தவை உருவி அவற்றின் ஆதார
நுட்பமாய் நிற்பதும் எதுவோ,
நுகர்ந்திடாது உலகப் பொருளினை முற்றும்
நோக்கியே பற்றிலா நிலையில்
தழைத்தொரு சாட்சி மாத்திர மாகத்
தரையெலாம் காண்பதும் எதுவோ,
சத்தியம் அதுவே; ஞானமாம் அந்தத்
தத்துவம் நான்என உணர்வோன்
பழிப்பிலா மறைகள் ஓதுவோன் எனினும்
பறையனே என்னினும் ஒன்றே;
பதைப்பிலா அறிவுத் திண்மையன் அவனைப்
பணிகுவன் குருவென உறுதி.









'பிரமமாய் உள்ள ஒருபொருள் நானே;
பிரமம் ஒன்றன்றி யற்றில்லை.

பெரியதாம் உலகு முழுவதும் அறிவின்
பெற்றியால் பெருகிய தோற்றம்.

விரவிய மூன்று குணங்களால் ஆகி
விங்கு அறி யாமையின் விளைவாய்

விரிந்த இத் தோற்றம் அனைத்தையும்மயக்க
வெறுமையில் கற்பனை செய்வோன்

கருதிடில் நானே' என்பதை உணர்ந்து
கருத்தினில் திடத்துடன் என்றும்

கலக்கமில் பரமானந்தமாம் மேன்மைக்
கதிஉறும் தூயவன் எவனோ,

புரிஅணி மறையோன் ஆயினும், அன்றி,
புலையனே ஆயினும் ஒன்றே,

புத்தியில் திண்மை உள அவன் தனையே
போற்றுவேன் குருவென உறுதி.




இப்பிர பஞ்சம் எங்கணும் இயங்கி
இறந்திடும் பொருளெலாம் நானே
என்னும்ஓர் உண்மை தனிற் குரு முகமாய்
இசைந்து உளம் அமைதியில் இசைய,
எப்பொழுதும்தான் பிரமமே என்ற
எல்லையில் இடையறாது ஊன்றி
என்றுமே அதுவாய் விளங்குவோன் எவனோ,
ஏதமில் ஞானமாம் நெருப்பால்
அப்பழ வினையும் இனிவரு வினையும்
அற்றிடச் சுட்டு, இங்கு, பயனை
அளிக்க முற் பட்ட வினையினில் உடலை
அர்ப்பணம் ஆக்குவோன் எவனோ
ஒப்பிலா மறைகள் ஓதுவோன் எனினும்
ஓதிடாப் புலையனே எனினும்
உளத்தினில் உறுதி உடையவன் அவனே
உண்மையாய் என்குரு உறுதி.



தான்எனும் பிடிப்பாய் மனிதரும் விலங்கும்
தேவரும் கொள்ளுவ தெதுவோ,
தன்தனித் திறத்தால் புலன்களை, உடலை,
புந்தியை நிறைந்திடப் புரிந்தே
ஆனபல் விடயம் அறியவே விளக்கம்
அளித்திடும் உள்ளொளி எதுவோ,
அவன் அடைவாலே அமைந்த ஓர் மேகம்
அவனையே மறைக்கவும் அதனைத்
தான் அருள் ஒளியால் தயங்கவைத் திலங்கும்
தனிக் கதிர் இரவியைப் போல,
தன்னிலே முளைத்துத் தன்னையே மறைக்கும்
தரணியை விளக்குவ தெதுவோ,
தான்எனும் அதனைச் சந்ததம் துய்த்துத்
தன்மனம் பிரமமாய்த் தழைக்கும்
சத்திய யோகி யாவனே எனினும்
சரி அவன் என்குரு. உறுதி.

எந்த ஓர் களிப்புப் பெருங்கடல் தனில் ஓர்
சிறுதுளி பெறுவதால் என்றும்
இந்திரன் முதலாம் அமரர்கள் தத்தம்
இச்சையில் நிறைவு காண்பாரோ,
எந்தஓர் பொருளைப் பூரணமாகப்
பொருந்திட அடைவதால் முனிவர்
எல்லையில் லாத அமைதி தம் அறிவில்
இசைவுற நிறைவுணர் வாரோ,
அந்த ஆனந்தக் கடலிலே அறிவை
அர்ப்பணித் தொரு தனிப் பிரமம்
அதனையே நாளும் அறிவதோ டன்றி
அதுவென ஆகிடும் மனிதர்
இந்தமண் ணுலகில் எதிர்ப்படல் அருமை;
இவர்கள்தம் இணையடி மலர்கள்
இந்திரனாலும் எத்துதற் குரிய;
இம் முடிபு எனதுபேர் உறுதி.

# ஓட்டப்பந்தயம் (3)

கதை: ஏ.எஸ்.சுந்தரராஜன் — சித்திரம்: செல்லம்
























மறுநாள் காலை ஆலக்குடி ஸ்டேஷனில் வண்டி வந்து நின்றதும்...







ஆறுமுகத்தின் குறுக்கு மூளையில் சுருக்கென்று ஒரு திட்டம் உதித்தது.


















அதே சமயத்தில் பங்களாவே அதிரும்படி ஒரு குரல் கேட்கிறது.

ஆறுமுகம், பசுபதி இன்னும் உயிரோடு இருக்கிறாரா?
இருக்கிறார். அவ்வளவு சீக்கிரமா செத்துவிடுவார்? இப்போது தானே முதல் டோஸ் மருந்து கொடுத்திருக்கி-றாய்.







(தொட

மாணிக்கம் பிள்ளை கல்லாப் பெட்டியில் உட்கார்ந்து பொக்கை வாயைச் சும்மா மென்று கொண்டிருந்தார். நெஞ்சுக்குள்ளே என்ன நினைத்துக் கொண்டிருந்தாரோ, தெரியாது. இடுக்குமுடுக்கான இடத்தில் இருந்தாலும் அவருடைய கடை இந்தப் பக்கமும் அந்தப் பக்கமுமாகக் கடைத் தெருவில் பாதி வரையில் மணத்துக் கொண்டிருந்தது. பாதிரிப் பழம், பீத்தர் பழம், கோவா—நீலம் என்று எத்தனையோ ஜாதி மாம்பழங்களும் வால்பேரி, அன்னாசி, கிரேப்ஸ் என்று இன்னும் சில பழங்களும் ரஸ்தாளி பூவன் என்று உள்ளூர் வெளியூர் வாழைப்பழங்களும் தட்டுத் தட்டாகவும் குலை குலையாகவும் அவருடைய கடைகளை அடைத்துக் கொண்டிருந்தன. இருந்தாலும் மாணிக்கம் பிள்ளை வெறும் வாயைத்தான் மென்று கொண்டிருந்தார்.

மொட்டைத் தலையும் கட்டை மூக்குமாய்ப் புழுதி விபூதியை நெற்றி யெல்லாம் பூசிக் கொண்டு, பூனைத் தவக் கோலத்தில் உட்கார்ந்து கொண்டிருந்தார் அவர். அத்தனை பழங்களிலும் அழுகலான பழங்களின் நெடியை மட்டும் சுவாசிப்பவரைப் போல் முகத்தைச் சுளித்து விட்டுக் கொண்டிருந்தார். இடுப்பிலே, ஒரு முழத் துண்டைக் கட்டிக் கொண்டு கறுத்துப் போய் ரசம் கசியும் வாழைப் பழங்களின் மேல் மொய்த்த ஈக்கள் கூட்டத்தை, கர்மயோகி மாதிரி கவனித்துக் கொண்டிருந்தார். ஈயைப் போய் விரட்டுவானேன்? கை அசந்து போவானேன்?

"என்ன மாணிக்கம்பிள்ளை! பழம் எப்படி?" என்று சிப்போடு இருந்த பழத்தை இரண்டு தடித்த விரல்களால் அழுத்திப் பார்த்துக் கொண்டே கேட்டான் திருமலை. கடைத் தெரு முனையில் ஆற்றங் கரையை ஒட்டினாற் போல் குடிகொண்டிருந்த தேவராஜப் பெருமான் இரண்டு இரண்டரை வருடங்களாக அவனுடைய கைங்கரியத்தில்தான் நினைத்துக் கொண்டிருந்தார்.

பூனை கண்ணை மூடித் திறப்பது போல் மாணிக்கம்பிள்ளை ஈக்களைப் பார்ப்பதைவிட்டு அவன் மீது கண்ணைத் திருப்பினார். நகக் கணுவெல்லாம் கறுப்பாக அழுக்கேறியிருந்த அவனுடைய தடி விரல்களையும் அந்த விரல்களில் நசுங்கிய பழத்தையும் மாறி மாறிப் பார்த்தார்.

காலை வேளையில் கடை திறந்து இன்னும் போணி ஆகவில்லை. அதற்குள் வம்பு தும்பு,



எதுவும் வைத்துக் கொள்ள வேண்டாம் என்று நினைத்தாரோ, என்னவோ! வாயை அவசரம் அவசரமாகக் குதப்பிக் கொண்டு, ''அம்பிகே, பெரிய நாயகி!'' என்றதோடு நிறுத்திக் கொண்டார்.

''என்னய்யா, மாணிக்கம்பிள்ளே! எப்படி டசன்? ரொம்பக் [காவெட்டா இருக்காப் பலே இருக்கே!''

திருமலேயும் வாயை அசை போட்டுக் கொண்டு தான் கேட்டான். ஆனுல் வெறும் வாயில்லே; வாய் நிறையப் பச்சைக் கொத்துக் கடலே. பாதி அரைபட்டும் படாமலும் பருத்திக் கொட்டை தினி மாதிரி நாக்கிலே புரண்டு கொண்டிருந்தது அந்தக் கவளம்.

மாணிக்கம்பிள்ளே பார்வையாலேயே எரிச்சலேக் கொட்டிஞர். ஆனுல் சவுக்குச் சவுக்கென்று சத்தம் போட்டுக் குதப்பிக் கொண்டிருந்த திருமலே அந்தப் பார்வையை யெல்லாம் ஒரு பொருட்டாக மதிக்கவில்லே. அவன் கண்கள் அத்தனே சீப்புப் பழங்களேயும் ஒரு நோட்டம் விட்டன.

''இது கொஞ்சம் அஞ்சுதா இருக்காப்பலே இருக்கு. இது எப்படி?'' என்று இன்னெரு சீப்பை அழுத்திப் பார்த்துக் கொண்டு கேட்டான் திருமலே. நாக்குப் புரளாமல் பேச்சுக் கொஞ்சம் குழறியது.

''அம்பிகே! அஞ்சணுத்தான்; எடும், காசை!''



# மயக்கம்



''அஞ்சணுவா? எந்த ஊரிலேப்பா அஞ்சணு?''

''எல்லாம் இந்த ஊரிலேதான்....''

''என்னய்யா, கருமாயமா வெலே சொல்றீம் பழம் கெடந்து சிரிப்பாச் சிரிக்கிறே நாள்ளே! ஆனே வெலே, குதிரை வெலேயா யிருக்கே?''

''சரி, எடும் காசை!''

''இது என்னய்யா, அழுகிப் போனதா?'' என்று இருப்பதில் கொஞ்சம் மஞ்சளாகத் தெரிந்த பழமாக எடுத்து, எடுத்த சுருக்கோடு உரித்துக் கொண்டே கேட்டான் திருமலே.

''அழுகலா அது?.... அஞ்சுது. அரையணு ஒண்ணு.''

## ஆர்வி

''இதுவா அஞ்சுது? வெறும் அழுகல்..'' என்று காட்டுவது போல் காட்டிவிட்டு, டபக்கென்று அதை வாயில் முழுசாகப் போட்டுக் கொண்டான் திருமலே. நகக் கணுக்களேப் போலவே பல்லிடுக்குகளிலும் பச்சை பாய்ந்திருந்தது. அவனுடைய பெரிய பற்களேப் பார்த்து விட்டு, பொக்கை வாய் மாணிக்கம்பிள்ளே எரிச்சல் பொறுக்காமல் ஈறுகளே இறுகக் கடித்துக் கொண்டார்.

''அப்புறம் இந்தச் சீப்பைச் சொல்லும்!''

''அம்பிகே—அஞ்சணுத்தான்! வளந்தாமெ காசை எடும்!''

''அம்பிகையைக் கூப்பிட்டுட்டே அநியாய வெலே சொல்றீ மேங்காணும்... காசு கொடுக்காமெ ஓடிப் போயிடுவேனே — என்னவோ அடிச்சிக்கிறீமே! இந்தாரும்பிய்யா காசு! எடுத்துக்கும்பய்யா, பொல்லாத காசை!'' என்று கொத்துக் கடலே வைத்திருந்த கையாலேயே, எக்கிலிருந்து சில்லறையை எடுத்தான். ஒரு கையால் பத்தொன்பது காசை எண்ணிக் கொடுக்கும்போதே இன்னெரு கை அந்தச் சீப்பை உருவி எடுத்து விட்டது.

சில்லறையை வாங்கி எண்ணிப் பார்த்து விட்டு, ''சரி, சொச்சத்தை எடும்!'' என்ருர் மாணிக்கம்பிள்ளே.

''ஏது சொச்சம்? எல்லாம் இதுக்கு இவ்வளவு போதும். வெச்சிக்கும் சொல்றேன்!''




**நறுமணமுள்ள நயமான தயாரிப்பு "ஹேஸலின்" டால்க்**

**மழமழப்பான வெல்வெட்போன்ற பவுடர்!**

இலேசான, இன்பநறுமணமுள்ள, மிருதுவான 'ஹேஸலின்' டால்கம் பவுடர் ஈரத்தன்மையை இலேசாக நீக்கி, சருமத்தை நாள் பூராவும் புதுமணம் கமழச்செய்கிறது. நீலம், வெள்ளை மற்றும் பொன்னிறமான, எடுப்பான டப்பாவில் எங்கும் கிடைக்கிறது 'ஹேஸலின்' டால்கம் பவுடர்.

'ஹேஸலின்' டால்கம் பவுடர் – ஒரு பர்ரோஸ் வெல்கம் தயாரிப்பு.

''சீப்பைத் தொடாதேய்யா, அந்தக் கைவினாலே. அப்படியே வெச்சிரும் இருந்த வாக்கிலே'' என்று சில்லறையை மொத்தமாகத் தூக்கி அவனுக்கு முன்னால் தட்டிலே போட்டார்.

''சரிதாங்கணும், வெச்சிக்கும்; சொல்றேன். எல்லாம் போரும்.''

திருமலை சில்லறையை எடுத்துக் கொள்ளாமல் கடையை விட்டு இரண்டடி நகர்ந்தான். இருந்த இடத்திலிருந்து குபீரென்று எழுந்தார் மாணிக்கம்பிள்ளை.

''இந்தாய்யா, பெருமாளே!''

''என்ன?'' பச்சைப் பல்லைக் காட்டினான் திருமலை.

''அதானே வேணுங்கறது! உம்ம புத்தியைக் காட்டுறீரே!'' — மாணிக்கம்பிள்ளை ஒரே பாய்ச்சலாகப் பாய்ந்து விடுவார் போல் இருந்தது. திருமலை கொஞ்சம் பயந்து விட்டான்.

''என்னாய்யா என் புத்தி? என் புத்திக்கு என்னாய்யா வந்திட்டுது?'' என்று அசட்டு மழுப்பலாகச் சிரித்தான் அவன்.

''மொத மொத போணி பண்ண வந்திராக்கும், மூணு சீட்டுப் போடற கையோடே! பழத்தை வெச்சிப்பிட்டுப் போயிரும்!''

இன்ற வரையில் லாபம் என்று சீப்பை வைத்துவிட வந்தான் திருமலை. இருந்தாலும் வார்த்தைக்கு வார்த்தை சொல்லாவிட்டால் தலை வெடித்து விடும்போல் இருந்தது.

''மாணிக்கம்பிள்ளே! அதிகம் பேச்சு வேணும். பேச்சை ஒட்டினா அப்புறம் எனக்கும் தெரியும். புடிச்ச காட்டிலே கொண்டு போய் விட்டுடுவேன்; தெரிஞ்சிக்கும்.''

''சரிதானய்யா, சொச்சக் காசு பன்னெண்டை எடுமிய்யா கெடக்கு!''

''அப்படிக் கேப்பியா, இஷ்டமானால் கொடுக்கிறேன். இல்லாட்டி வெச்சிட்டுப் போறேன்..அதை விட்டுட்டுப் புத்தி கித்தின்னு பேசினா.இளிச்சவாயன்னு நெனப்பா? இல்லே, கேக்கறேன்!'' என்று கேட்டுக் கொண்டே இன்னொரு பக்கத்து எக்கில் பத்து மடிப்பாகச் செருகியிருந்த ஐந்து ரூபாய் நோட்டு ஒன்றை அலட்சியமாய் அவர் முகத்தில் வீசுவது போல் போட்டான்.

''மீதிச் சில்லறையைக் கொடுய்யா!''

''அம்பிகே!'' என்று அதைக் குனிந்துஎடுத்து நோட்டைப் பிரித்தார் மாணிக்கம்பிள்ளை.

''ஏய்யா, பெருமாளே! பெரிசா ரோசப் படுறீரே, ஏதுய்யா இந்த நோட்டு?''

''ஓ ஹ் ஹோ!.... கெட்டுதுடா கதை! அது சர்க்காரிலே அடிச்ச நோட்டுய்யா, நல்லாப் பாரு! நான் போட்டதில்லே, நீ போட்டதுமில்லே!''

''ஏது, மரியாதை குறைஞ்சிக்கிட்டே வராப்பலே இருக்கு?''

''வராப்பலே என்ன? குறைஞ்சிக்கிட்டுத் தான் வரும். மரியாதை கொடுத்துத்தானே மரியாதை வாங்கணும்? ஏது நோட்டுன்னு என்னய்யா கேள்வி?''

''ஏன் கேக்கப்படாதோ?''

''அதெப்படிய்யா கேக்கறது? என்னா அர்த்தத்திலே கேக்கறதுன்னேன்?''

''சம்முகம் பயகிட்டே இருந்த இந்த நோட்டு, உம்மகிட்டே எப்படி வந்திச்சுன்னு தெரிஞ்சிக்கப்படாதோ?''

''இந்த ஊரிலேயே அஞ்சு ரூவா நோட்டு இதொண்ணுதானா? வேறெ நோட்டே இல்லியா? இருக்கப்படாதோ?''

''இருக்கலாமிய்யா. நெறைய இருக்கலாம். இருந்திட்டா எல்லாத்திலேயுமா மஞ்சக்கறையும் மசிக்கறையும் பட்டிருக்கும்?''

''பட்டிருந்தா?''

''கல்லாப் பெட்டியிலே உட்கார்றப்பலே வந்து உக்கார்றது. இருக்கிற நோட்டிலே ஒண்ணை உருவி எடுத்துக்கறது. அப்புறம் முன்னியாத்தங்கரை மூலையாப் போயி, மசானக் கரை மண்டபத்துலே நடக்கற மூணு சீட்டுலே விட்டுப்புட்டு வந்துடறதுன்னா, அந்தத் தத்தாரிப் பய வேலை தெரியாமப் போயிருமா? ஏய்யா பெருமாளே! உங்களுக்கெல்லாம் என்னிக்குய்யா நல்ல புத்தியைக் கொடுக்கப் போறாரு, அந்தப் பெருமாளு?''

திருமலை அசந்து போய் விட்டான். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, ''இதா பாரும் மாணிக்கம்புள்ளே! பெருமாள் எங்களுக்குக் கொடுத்திருக்கிற புத்தி போதும். உங்க மகன் வரைக்கும் பேசிக்கும்; சொல்லிப்புட்டேன். அதிகமா நீட்ட வேணும். அந்த மஞ்சக் கறை நோட்டு ஆருது. தெரியுமா? புளிக் காய்ச்சல் பட்ட எண்ணெய்க் கறையோட வாங்கிப்புட்டேன் அதை. சங்கதி தெரியாமப் பேசிப்புடாதேயும். முந்தாநாள் இது எங் கையை விட்டுப் போச்சு; நேத்திக்கு எங்கிட்டேயே திரும்ப வந்துட்டுது. திருடிப் புடலேங்காணும். ஏமாத்தி எடுத்துக்கலேங்காணும். போனதுதான் வந்திருக்கு. அதைத் தெரிஞ்சுக்கும். பெருமாள் கொடுத்த புத்தி போறல்லேன்னா உங்க அம்பிகை கிட்டேயிருந்து கொஞ்சம் வாங்கிக்கிடும்........'' என்று பேசி விட்டு, கைப்பிடியிலே மீதியிருந்த கொத்துக்கடலையை அப்படியே நெருடி வாயில் போட்டுக் கொண்டான் அவன்.

மாணிக்கம்பிள்ளைக்கு எரிச்சலும் கோபமும் கரை புரண்டு வந்தன. ''நேத்தா? நேத்து வந்து ஆட வந்தானா அவன்?'' என்ற கேள்வி நெஞ்சாங்குழி வரையில் வந்து விட்டது. ஆனால் வாயைத் திறக்காமல் குத்துக்கல்லைப் போல் உட்கார்ந்து விட்டார். அதற்குள் அந்தச் சண்முகமே கடைக்கு வந்து கொண்டிருப்பதை அவர் கவனித்தார். உடனே அந்த நோட்டை எடுத்துப் பெட்டிக்குள் போட்டு விட்டு, மீதிச் சில்லறையையும் நோட்டையும் எண்ணி அவனிடம் கொடுத்தார் அவர்.

''என்னாய்யா, மூணு காசு குறையுது?''

''ஒண்ணைத் தனியா எடுத்துத் தின்னதுக்கு?''

''அதுக்கு மூணு பைசாவா?''

''ஒண்ணு எடுத்தா மூணு பைசா தான்.''

''அழுகலுக்கும் அதுதான் வெலையா?''

''அவிஞ்சதுய்யா அது. அழுகலுன்னு எப்படிய்யா உரிச்சு முழுங்கினீரு?''

''ஒட்டுமாய்யா, இந்தக் காசு? ஏ, சம்முகம்! உங்க அப்பாவைப் பாத்தியா? அழுகலுக்கும் சேத்து வாங்கறாரு காசை!''

''அவங்கிட்டே ஏய்யா போறீரு? இந்தக் கடைக்கு யாருய்யா அவன்? அவனுக்கு என்னாய்யா வேலை இஞ்சே? ஏய், இந்தாலே இறங்குடா, கீழே, கடையை வுட்டு! இறங்



'' அம்மா பிச்சை போடுங்க.''

'' எல்லோரும் சாப்பிட்டாச்சு, போயிட்டு வா !''

'' அது சரி! நான் இன்னும் சாப்பிட வில்லையே !''

---

குன்னு இறங்கிப்புடு. அம்பிகே மேலே ஆணை வெச்சிப்புட்டு ஆடப் போன பயலுக்கு இஞ்சே என்ன வேலே? எறங்கு கிழே! உங்கப்பன் மேலே ஆணை, இறங்கிப்புடு கிழே. வுட்டேன், வுட்டேன்!''

மாணிக்கம்பிள்ளைக்கு மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்கியது. கண், மூக்கெல்லாம் சிவந்து போய் விட்டது. கடை வாய் இரண்டிலும் எச்சில் வழிந்து வந்தது.

சண்முகம் திகைத்துப் போய் நின்றான். அவரையும் திருமலையையும் இனம் புரியாமல் மாறி மாறிப் பார்த்தான். திருமலைக்குக் கொஞ்சம் சங்கடமாகப் போய் விட்டது. ரொம்பப் பெரியதனமாக, ''என்னய்யா, இது, மாணிக்கம்புள்ளே! இதா பாரும். வந்ததும் வராததுமா அவனைப் போயி...'' என்று ஏதோ சொல்ல வாயெடுத்தான்.

''அட சே, மூடுய்யா, உன் ஊத்த வாயை! சொச்சச் சில்லறையை வாங்கிக்கிட்டமருல்லே? போய்ச் சேருவீரா, ஒம் வேலையைப் பார்த்துக்கிட்டு. ஒசிக் கடலையைக் கொதப்பிக்கிட்டு ஒய்யாரம் பேச வந்திராக்கும்... எப்படியாக் கொத்த மனுசனுக்கு வந்து வாய்ச்சிரே, கோடாலிக் காம்பாட்டம். உருப்பட்டாப் பிலேதான். போய்ச் சேரும். பரிஞ்சிக்கிட்டுல்லே வர்ரூரு. பரிஞ்சிக்கிட்டு!''

''நான் ஏய்யா பரிஞ்சிக்கிட்டு வர்றேன்? எனக்கேன் ஐயா அந்த வம்பு? நான் போறேன் இதோ!'' என்று சொல்லிக் கொண்டே, பெருநடையாகப் போட்டான் திருமலை.

மாணிக்கம்பிள்ளைக்குக் கண் சிவப்பு மாற வில்லை. சண்முகம் கடையின் குறட்டிலேயே சிறிது நேரம் நின்றான். என்ன செய்வது என்று தெரியவில்லை. திருமலை திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. இருந்தாலும் ரோசம் வந்த வனைப் போல் முகத்தை விறைப்பாக வைத்துக் கொண்டு குறட்டை விட்டு இறங்கி, வேக மாக நடந்தான்.

மாணிக்கம்பிள்ளை அவன் முகத்தைப் பார்க்கவுமில்லை; தடுக்கவுமில்லை. இனி அந்தப் பயல் முகத்தில் விழிக்கக் கூடாது என்று அவருக்கு ஒரே வேகமாக இருந்தது. ஆனால் அம்பிகை அவரை அந்த நிலையில் வைக்கவில்லையே! மூன்று பிள்ளைகளைப் பறி கொடுத்த பிறகு, பெரியநாயகி புண்ணியத் தால் தங்கின பிள்ளையல்லவா அவன்? அவ னைப் பார்க்காமல், அவன் முகத்தில் விழிக் காமல் எப்படி இருக்க முடியும்?

அந்தக் காலமெல்லாம் மாறிப் போய் விட்டது. முன்பு என்றால் அவரால் இருக்க முடியாதுதான். ஆனால் இப்போது எதுவும் அவரால் முடியும். அவ்வளவு தூரத்துக்கு அவருக்கு எல்லாம் வெறுத்துப் போய்விட் டது. பிள்ளையாவது, குட்டியாவது? வேத னைப்படுவதற்கென்றே ஒரு பிள்ளையா? இந்தப் பிள்ளையால் அவருக்கு எந்த நாளுமே ஒரு நிம்மதி கிடையாது. சொன்னால் வீட்டுக்காரி சண்டைக்கு வருவாள். இந்தப் பிள்ளைக் காகவா அவர் படாதபாடு பட்டு, பாகாய் உருகிப் போனார்?

வெள்ளிக்கிழமை என்றால் அவரைப் பெரிய நாயகியின் சந்நிதியிலே பார்க்கலாம். அவ ரைப் பார்த்த பிறகுதான் பலருக்கு வெள்ளிக் கிழமை நினைவே வரும். அரையிலே ஈரத் துண்டும் கையிலே ரோஜா மாலையும் தேங் காய்ப் பழத் தட்டுமாக வந்து நிற்பார். என்ன மழையானாலும் இடியானாலும் குளிரானாலும் அவர் திருக் குளத்தில் போய் முழுகி விட்டு வரத் தவறுவதில்லை. அந்த அம்பிகையைத் தான் அவர் ஒரே தெய்வமாக நினைத்திருந் தார். இரவு—பகல் எந்த நேரத்திலும் நெஞ் சிலே அம்பிகையின் நினைப்புத்தான்.

''என்ன மாணிக்கம்புள்ளே! இன்னிக்குத் தேவராசப் பெருமாளுக்குக் குதிரை வாகனம். நம்ப கடைத்தெரு மண்டகப்படி. தெரியு மில்லே? இந்தாரும், நோட்டுப் புத்தகம். கையெழுத்துப் போடும்!''

மாணிக்கம்பிள்ளைக்கு அப்பொழுது வாயில் இரண்டொரு பற்கள் இருந்தன. அந்தப் பற்கள் வெளித் தெரியச் சிரிப்பார் அவர்.

''இதா பாருங்க! இந்தாங்க அரை ரூபாய். இதுக்குக் கையெழுத்தும் வேணும்; காலெழுத் தும் வேணும். ஆளை வுடுங்க!''

''நெசந்தானா? அரை ரூவாயை எடுத்து நீட்டுறாரு மனுசன். ஏய்யா, எங்களுக்கா கொடுக்கறீரு? பெருமாளுக்கு ஐயா!''

''ஆருக்கு ஆனா என்னங்க? புடிங்க சொல் றேன்!''

''அம்பாளுக்குன்னா அரை ரூவாயை நீட்டு வீரா...?''

''அது அவுங்க அவுங்க பிரியத்தை, சௌகரியத்தைப் பொறுத்ததுங்க. இப்படி வற்புறுத்தலாமா ?''

''அம்பாளுக்குன்னா அஞ்சு ரூவாயாவது போடுவீருல்லே?''

''அஞ்சு என்ன, அம்பதுகூடப் போடு வேன். இதென்னாங்க கேள்வி?''

''அப்ப இவ்வளவுதான் போடுவீங்க, பெருமாளுக்கு?''

''இது பெருமாளுக்காக இல்லீங்க. நீங்க நாலு பேரா வந்திருக்கீங்கள்ளே, அதுக்காக!''

''அப்ப இதை நீரே வெச்சிக்கும். நாங்க வர்றோம்.''

''சரி, செய்யிங்க! கும்பிடறேன்!''

மாணிக்கம்பிள்ளை இந்த விஷயத்தில் யாருக்கும் மசிந்து விடுகிறவர் அல்ல. அம்பிகையைத் தவிர வேறு தெய்வத்தை மனத்திலும் நினைப்பதில்லை. அத்தனை வைராக்கியம்.

மூன்று பிள்ளைகளைப் பெற்று ஒவ்வொன்றாக வாரிக் கொடுத்த பிறகு ஒரு நாள் அவர் பெரியநாயகியின் சந்நிதியில் வந்து நின்று கண்களை மூடிக் கொண்டவர்தான். அர்த்த சாமப் பூஜையெல்லாம் முடிந்து, கதவைப் பூட்டப் போகிற நேரமாகி விட்டதைக் கூட அவர் உணரவில்லை. பூக்காரச் சபாபதிப் பண்டாரம் வந்து தோளைக் குலுக்கி அசைக்கும் வரையில் அவர் அந்தத் தேவியோடு போராடிக் கொண்டுதான் இருந்தார்.

''தாயே! எதுக்காக என்னை இப்படிச் சோதிக்கிறே? நான் என்ன குத்தம் செஞ்சேன் உனக்கு? அதைச் சொல்லு; இல்லாட்டி எனக்கு இப்பவே ஒரு வழியைச் சொல்லு! அதுவரையிலே அசைய மாட்டேன் இதை விட்டு...!''

ஏழு ஏழரை மணிக்கு அர்ச்சனைத் தட்டும் ரோஜா மாலையுமாக வந்து நின்ற அவர், மணி பத்தாகியும் அசையவில்லை. குருக்களாக வந்து மாலையை வாங்கிக் கொண்டு அர்ச்சனையும் செய்த போதுகூட அவர் மூடிய கண்ணைத் திறக்கவில்லை. கோயிலுக்கு யார் யாரோ வந்தார்கள். கும்பிட்டுவிட்டுப் போனார்கள்; ஒன்றுமே அவருக்குத் தெரியாது. அடுத்த கால அபிஷேகம், தீபாராதனை என்று என்னவெல்லாமோ நடந்தன. அவரோ இந்த உலகத்திலேயே இல்லை. அவருடைய வாய் மட்டும் முணுமுணுத்துக் கொண்டிருந்தது.

''எனக்கு இப்ப நீ என்ன வழி செய்யப் போறே, சொல்லு!''

பெரியநாயகியின் திருவுருவம் வெறும் கல்லால் ஆன சிலையாக அவருக்குத் தோன்றவில்லை. இருள் சூழ்ந்த கர்ப்பக்கிருகத்திலே, இருளோடு இருளாக, எண்ணெய்ப் பிசுக்கு ஆடையும் கண்ணாடிக் கல் ஆபரணமும் அணிந்தவளாகச் சொத சொதக்கும் ஈர நகநகப்பிலே நின்று குற்றமும் குறையுமாக மந்திரங்களைக் கர்ணகடூரமாக ஓதும் குருக்களைச் சிறிதும் மதியாதவளாக நின்றிருந்த அம்பிகையை, உமையை, ஆனந்த நடனமிடும் திருக்கூத்தனின் நாயகியை நிணமும் சதையும் ஊனும் உடலும் கொண்ட உயிர்ச் சொரூபமாகவே எண்ணிக் கசிந்துருகி உரையாடினார்.

''ஐயா! மாணிக்கம்புள்ளே! அம்பாள் பிரசாதம் இந்தாங்கய்யா!'' என்றான் சபாபதிப் பண்டாரம்.

''அ...... அ......''

அந்தப் பிரசாதத்தைக் கொடுத்தது சபாபதிப் பண்டாரமாகவே அவருக்குப் படவில்லை. செக்கச் சிவந்த ஆடையும் சென்னியில் அணிந்த மாலையுமாக அம்பிகையே அல்லவா எதிரே வந்து கொடுக்கிறாள்! அவருடைய மெய்யெல்லாம் சிலிர்த்தது; கையெல்லாம் நடுங்கியது.

''உறங்கிட்டீங்களா, மாணிக்கம் பிள்ளை?''

மாணிக்கம் பிள்ளை திடுக்கிட்டுக் கண் விழித்தார். மந்தஹாஸத்துடன் எதிரே வந்து நின்ற மகாமாயை மறைந்து போய், சபாபதிப் பண்டாரம் வந்து நிற்பதைக் கண்டார். கர்ப்பக் கிருகத்தை நோக்கித் திரும்பியது அவர் பார்வை.

''சின்னக் குருக்களையா, சித்தே பொறுங்க! திரை போடறதுக்கு முந்தித் தரிசனம் செய்துக்கறேன்...!''

அப்படித் தவமிருந்து பிறந்த மகன் சண்முகம். வேறு எதை வேண்டுமானாலும் செய்துவிட்டுப் போகட்டும். அம்பாளுடைய ஆணையை அவர் மீறுவதா? அப்படி மீறத் துணிந்தவன் முகத்திலே அப்புறம் அவர் விழிக்கலாமா?

அந்த அம்பிகையின் அருள் இல்லாமல் அவன் எங்கிருந்து வந்தான்? அவளுடைய பெருங் கருணையில்லாமல் அவன் எப்படித் தக்கினான்?

ஆனால் அம்பிகையின் பிரசாதமாக வந்து பிறந்த அவனுக்கு இத்தனை கெட்ட புத்தி ஏன் வந்தது? எதனால் வந்தது? மாணிக்கம் பிள்ளைக்கு இது பெரிய புதிராக இருந்தது. குலத்தில் இல்லாத கோணல் புத்தியெல்லாம் இவனுக்கு எங்கிருந்து வந்து வாய்த்தது?

''என்னைப் பெத்த தாயே எதுக்காக என்னை இப்படிச் சோதிக்கிறே? என் நெஞ்சிலே என்ன வஞ்சனையைக் கண்டே? என்னிக்கு எம் மகனுக்கு நல்ல புத்தியைக் கொடுக்கப் போறே?''

மாணிக்கம் பிள்ளை பொறுத்துப் பொறுத்துப் பார்த்து விட்டார். எட்டாவது வயதிலேயே சண்முகம் பொய் சொல்லத் தொடங்கி விட்டான். பதினாலு பதினைந்து வயதான போது பள்ளிக்கூடத்துக்கு மட்டம் போட்டு விட்டு, அசந்து மறந்தால் அவன் தாயின் சிறுவாட்டுப் பணத்தையே திருடிக்கொண்டு போகிற புத்தி வந்து விட்டது. அப்புறம் இரண்டு மூன்று வருஷங்களில் சேரக் கூடாத சேர்க்கை யெல்லாம் சேர்ந்து, போகக்



கூடாத இடத்துக்கெல்லாம் அவன் போய்க் கொண்டிருந்தான்.

மாணிக்கம் பிள்ளை நயமாகவும் பயமாகவும் கண்டித்துப் பார்த்து விட்டார். சண்முகத்துக்கு அவன் தாயின் பக்க பலம் இருந்தது.

''ஒண்ணொண்ணுக்கும் நீ பரிஞ்சிக்கிட்டு வந்தா, புள்ளை உருப்பட்டாப்பலேதான்!''

மாணிக்கம் பிள்ளையோட மனைவி வாயைத் திறக்க மாட்டாள். அவன் கண்ணைக் கசக்கினால், அவளுடைய நெஞ்சம் கலங்கும். அவன் பட்டினி கிடந்தால் அவளும் காயக் காயக் கிடப்பாள்.

''உலகத்திலே இல்லாத புள்ளையைப் படைச்சிட்டே பாரு. எல்லாம் நீ கொடுக்கிற இடந்தாங்கறேன். 'சாமியாவது, கோவிலாவது?' என்கிறானும். கோவிலையெல்லாம் இடிச்சுப் பள்ளிக்கூடமா கட்டிப்புடணுமாம். படிக்காத பயலுக்குப் பள்ளிக் கூடத்திலே என்ன அக்கறை பார்த்தியா?''

அவர் சொல்வது எல்லாம் நியாயந்தான். அவனுக்கு நல்லதைத்தான் சொல்கிறார். ஆனால் அவனுக்கு ஏறவில்லையே, என்ன செய்வது?

''அவனைக் கடையிலே உட்காரச் சொல்லி மறிச்சுப் போட்டு வைச்சா, பொறுப்புத் தன்னாலே வந்திடும்'' என்றாள் அவர் மனைவி.

அதையும் செய்து பார்த்து விட்டார், மாணிக்கம்பிள்ளை.

கடையில் போய் உட்கார்ந்து கொண்டான் சண்முகம். நோட்டும் சில்லறையுமாகப் புரளுகிற இடம்; நெஞ்சும் புரளும். எழுந்து போகிற போது இரண்டு, மூன்று என்று நோட்டாக எடுத்துச் செருகிக்கொண்டு போய் விடுவான். மாணிக்கம் பிள்ளைக்குக் கணக்குத் தெரியாது; தெரிந்தாலும் விட்டு விடுவார். எப்படியோ கடையிலாவது தரித்து உட்கார்ந்திருக்கிறானே என்று அவர் திருப்திப் பட்டுக் கொண்டார்.

அந்தத் திருப்தியிலும் ஒரு நாள் மண் விழுந்தது.

பெருமாள் கோவில் தேவநாத ஐயங்கார் நடக்கமுடியாமல் நடந்து வந்து,''மாணிக்கம்! எப்படியப்பா இருக்கே?'' என்று கேட்டார்.

''வாங்க வாங்க, ஐயா உட்காருங்க!'' என்று ஒரு பழந்தட்டை எடுத்து அவர் உட்காருவதற்கு இடம் செய்து கொடுத்தார் மாணிக்கம் பிள்ளை.

''ஏதுங்க இவ்வளவு தூரம்....அதிக நடமாட்டம் இல்லேன்னு காதிலே விழுந்திச்சு. வந்து பார்க்கணும்னு நெனப்புத்தான்...ஆறு முடியலே....''

''எங்கேப்பா முடியும்? கடை ஒண்ணு இருக்கே.....''

''இப்ப எப்படிங்க இருக்கு?''

''இருக்கிறது என்ன — வயசாகலேயா? இனிமே அப்படி இப்படித்தான். நானே எண்ணிப்பிட்டு மானமா, மரியாதையா நடையைக் கட்ட வேண்டியதுதான். பெருமாள் என்ன வழிவிடப் போறாரோ தெரியலே. மனசுக்குத்தான் ஒரு நிம்மதியில்லாமே இருக்கு. இதுக்கு நீ ஏதாவது செய்யப் படாதா?''

''என்னங்க செய்யணும்; சொல்லுங்க..... அதுவும் உங்களுக்குச் செய்ய நான் யோசிப்பேனு? சும்மாச் சொல்லுங்க!''

''ஒண்ணும் சரியில்லே போயேன்.''

''அட, சேதியை வுட்டுச் சொல்லுங்க!''

தேவநாத ஐயங்கார் வயதில் எத்தனையோ பெரியவர். மாணிக்கம் பிள்ளைக்கு அவரிடம் தனி மதிப்பும் மரியாதையும் உண்டு. இருந்தாலும் வந்த காரியத்தைப் பற்றி எப்படிச் சொல்வது என்று அவர் தயங்கினார்.

''என்ன தயங்கிறிய?''

''ம்....ம்....நீ கொஞ்சம் கண்டிச்சு வச்சா......''

''கண்டிக்கணுமா? யாரை?''

''நமக்கு ஒண்ணு அந்திம காலத்திலே வந்து பொறந்திருக்கே, அந்தக் கழிசடையைத்தான் சொல்றேன்!''

மாணிக்கம் பிள்ளை பெருமூச்சு விட்டார். சண்முகத்தைப் பற்றித்தான் ஏதாவது சொல்ல வந்திருக்கிறாரோ என்று ஒதுங்கிப் போய் உட்கார்ந்தவர் இப்போது கொஞ்சம் நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார்.

''சொல்லுங்க ஐயா! அந்தப் பிள்ளைக்கு என்ன, அதுதானே இப்ப எல்லாம் கவனிச்சுக்குதுன்னு கேள்வி!''

''அதுக்கென்ன மூணு சீட்டுக்குக் காசு வேணும்; கவனிக்கிறான்!''

''என்னது? மூணு சீட்டா? ரங்காட்டம்னு சொல்றாங்களே சூதாட்டம், அதையா சொல்றீங்க? அது வேறே உண்டா?''

''உனக்கு ஒண்ணுமே தெரியாதா?''

''நான் என்னத்தைங்க கண்டேன்? கடை உண்டு, வீடு உண்டு; இரண்டையும் வுட்டா கோயிலுண்டு. என்னமாத் தெரியும்?''

''அப்ப நான் நெனச்சது சரியாப் போச்சு. உனக்குத் தெரிஞ்சிருந்தா குதிகால் நரம்பை எடுத்திருப்பியேன்னு நெனைச்சேன். அந்தப் படியே இருக்கு.''

மாணிக்கம் பிள்ளைக்கு இப்போதுதான் கொஞ்சம் சந்தேகம் தட்டியது. உதட்டை நாக்கினால் நனைத்துக் கொண்டார்.

''பெரிய ஜமாவாத்தான் சேர்ந்திருக்கு. இந்தப்பய, உங்க வீட்டுப்பய, காப்பி கிளப்பு முத்துவோட தம்பியாமே ஒரு பய — அவன், தாயம்மாவோட வளர்ப்பு ஒரு தத்தாரி — இன்னும் யார் யாரோ — போயேன்! எனக்கு உன் மகன் ஒருத்தனைத்தான் தெரியும். மத்ததுகளை யார் கண்டா? முள்ளியாத்தங்கரை ஸ்மசான மண்டபத்திலே போய் ஒக்காந்து ஆடுறாங்களாம். எப்போர்க்கொத்த இடம் பார்த்துக்கோ? அதுலே இதுலே இருக்கிற காசைச் சுரண்டி எடுத்துண்டு போய்த் தோத்துப்புட்டு வந்து நிக்கிறானுக. நான் நடமாட்டமில்லாம கிடக்கறேனு — அவனுக்கோ கண்ணும் தெரியலே, காதும் சரியாகக் கேக்கலே — கேப்பாரு யாரு? சல்லிக்காசு கண்ணுலேயே காட்டுறதில்லே — போயேன்!''

மாணிக்கம் பிள்ளைக்குத் தலையைச் சுற்றியது. சூதாட்டம் ஆடுகிறவன் வேறு எதற்குத் துணிய மாட்டான்? குடியைக் கெடுக்கிற ஆட்டமா ஆடப் போகிறான்? பெற்ற தகப்பனைக்கூட விற்கத் தயங்காத சூது இவர்களை எப்படிப் பற்றிக் கொண்டது?

''அம்பிகே! நான் ஒரு பாவமும் அறியேன்!'' என்று இரண்டு கைகளையும் பிசைந்தார் மாணிக்கம் பிள்ளை.

# சூழ்நிலையை ஒட்டியே எதுவும் மதிப்பிடப்படுகிறது

## ப்ரௌன் & போல்ஸனின் கஸ்டர்ட் என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்






ப்ரௌன் & போல்ஸனின் கஸ்டர்ட் வழவழப்பானது, சத்துள்ளது, ருசியானது. டார்ட்டுகள், ஜெல்லிகள், கேக்குகள், புட்டிங்கு, பேஸ்ட்ரீ ஆகியவற்றிற்கு அது சுவை கூட்டுவதுடன், சாப்பிடத் தூண்டும் வகையில் அவை அமைய உதவுகிறது. ப்ரௌன் & போல்ஸனின் கஸ்டர்ட் பவுடரிலிருந்து சுவைமிக்க புட்டிங்குகள் செய்ய அவசியமான சாதாரண கஸ்டர்ட் கிடைக்கிறது. அல்லது ப்ரௌன் & போல்ஸனின் வெரைடி கஸ்டர்ட் பவுடரிலிருந்து உங்கள் அபிமான ருசிக்கேற்றபடி தேர்ந்தெடுக்கலாம். ஒரே பெட்டியில் ஆரஞ்சு, பனானா, ஸ்ட்ராபெர்ரி, லெமன், ராஸ்பெர்ரி, வனில்லா ஆகிய ஆறுவித சுவைகள் அடக்கமிடப்பட்டு வருகின்றன. இவ்விருவித பவுடர்களிலுமே முட்டைகள் கிடையாது. ப்ரௌன் & போல்ஸனின் கஸ்டர்ட் பவுடர் 1 பவு. 7 பவு. டின்களிலும், வெரைடி கஸ்டர்ட் பவுடர்கள் 6 பைண்ட் பாக்கெட்டுகளிலும் கிடைக்கின்றன.

**கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரை. லிட்.,**

## இலவசம்

இக்கூப்பனைப் பூர்த்திசெய்து, ப்ரௌன் & போல்ஸன் ப்ளேவர்ட் கார்ன் ப்ளவர் அல்லது வெரைடி கஸ்டர்ட் பவுடர் பாக்கெட்டிலுள்ள 6 உள்ளுறைகளை இத்துடன் இணைத்து அனுப்பி, ஆங்கிலம், ஹிந்தி, தமிழ், தெலுங்கு, குஜராத்தி, மலையாளம், உருது, வங்காளி அல்லது மராத்தி மொழிகளில் பிரசுரிக்கப்பட்டுள்ள சுவைமிக்க சமையல் புத்தகம் ஒன்றை, மொழியைக் குறிப்பிட்டுப் பெறவும்.

ஸ்ரீ/திருமதி/குமாரி ................................................

................................................

விலாசம் ................................................

................................................

டிபார்ட்மெண்ட் நெ. KLK 11

கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரை. லிட்.,
தபால் பெட்டி நெ. 994, பம்பாய்—1.
இச் சலுகை இந்தியாவிலுள்ளவர்க்கு மட்டுமே.

நீங்கள் பொலிவுடனிருக்க சார்மிஸ் உபயோகியுங்கள்

# புதுமை பெறுக...
# இதம் பெறுக...
# நளினமாய் இருங்கள்
# நாள் முழுதும்!

குளுமையையும், புத்துணர்ச்சியையும் அளிக்கும் சார்மிஸ் டால்கம் பவுடர் நீங்கள் நாள் முழுதும் நளினமாயிருக்க உதவுகிறது. உன்னத மனோரம்மிய மணம்கொண்ட சார்மிஸ் உங்களுக்கு சுகத்தையும் புத்துணர்ச்சியையும் அளித்து, உங்கள் அழகை நன்கு சோபிக்கச் செய்கிறது!

# சார்மிஸ்

உன்னத, மனோரம்மிய மணத்துடன் கூடிய டால்கம் பவுடர்

''இதோ பாரு, மாணிக்கம். சண்டை கிண்டை போடாதே. எனமாத்தான் வழிக்குக் கொண்டு வரணும். ஆரம்பத்திலே தடுக்காட்டா அந்தத்திலே சந்நியிலே நிற்க வேண்டியதுதான்! வேதனை தாங்காமெ உங்கிட்டெ சொல்ல வந்தேன். இப்ப உன்னே வேதனைப்படுத்திப் புட்டுப் போறதுதான் மிச்சம். பெருமாள் என்னே அதிக நாள் வெச்சிருக்கப்படாது.''

மாணிக்கம் பிள்ளைக்கு அந்த மனக் கொதிப்பு அடங்க மூன்று நாள் ஆயிற்று. அப்புறம் அதை அவளிடம் நேரிடையாகக் கேட்கவில்லே.

''இதுக்குப் போய் வேதனைப்பட்டு என்ன மிஞ்சப் போகிறது? ஒரு கால்கட்டைக் கட்டிப் போட்டா, தன்னுலே வழிக்கு வந்திட்டுப் போறான்!'' என்று அவர் மனைவி புது யோசனையைச் சொன்னாள்.

மாணிக்கம் பிள்ளைக்கும் அந்த எண்ணம் உண்டு. ஆனால் பொறுப்பு உறைக்காதவனுக்கு எப்படிக் கல்யாணம் செய்து வைப்பது?

''போடி, போடி — கூறுகெட்டவளே! மூணு சீட்டு ஆடற பயலுக்கு எவண்டி பொண்ணைக் கொடுக்க வருவான்? தாலியைப் புடுங்கிட்டுப் போயி வௌயாடிப் புடுவானே!''

''மீனாட்சிகிட்டே அதெல்லாம் பலிக்காது. கெட்டியாச் சட்டையைப் புடுச்சுக்குவா. காடாரம்பத்துப் பொண்ணு? மிஞ்சிப்போனு ஆறு ஆம்புளைங்குச் சரியா நின்னு பேசுவா. புருசன்னு எந்தவரைக்குமோ அந்த வரைக்குந்தான்....''

''மொதல்லே உன் தம்பியோட நோக்கம் தெரிஞ்சுக்க.''

''எல்லாம் தெரிஞ்சுதான் சொல்றேன்! மீனாட்சி பொறந்ததுமே முடிச்சுப் போட்டு வெச்சிப்புட்டமே! நாம முறைக்குப் பேச்சை எடுக்கலியேன்னுதான் தம்பிக்குக் குறை.''

''ம்....அதையும் பார்த்துப்புடுவோம்.''

மாணிக்கம் பிள்ளைக்கு அந்த ஒரு வார்த்தைதான் மனத்தில் பதிந்து நின்றது. தேவநாதய்யங்கார் அத்தனை சாதுவான மனிதர். 'எனமாத்தான் வழிக்குக் கொண்டு வரணும்' என்று அவர் வாயிலிருந்தே வந்ததே! இன்னொரு மனிதன் என்றால் அந்த வார்த்தை வருமா? அத்தனை நல்ல மனிதர் சொன்னால் கட்டாயம் பலிக்கும் என்று கூட அவருக்கு ஆறுதலாக இருந்தது. சண்முகத்திடம் வாயைத் திறக்கவில்லே.

ஆனால் பெண்ணைக் கொடுக்க முன்வந்த மனிதன் கண்ணால் பார்த்ததைச் சொன்ன போது,—

''அத்தான்! ஊரிலிருந்து குறுக்கா வந்து, கரையேறினேன். தம்பி கடுதாசி ஆடுறதைப் பார்த்தேன். ஆனா அது என்னைக் கவனிக்கலே. காசு வெச்சு ஆடுது போலிருக்கே? நீங்க ஒண்ணும் கண்டிச்சு வெக்கலியா?''

மாணிக்கம் பிள்ளைக்குப் 'பகீர்' என்றது.

''அவன் ஆடினதைப் பார்த்தியா நீ?'' என்றார் கோபத்தோடு.

''அது ஆடிச்சுதோ, ஆடலியோ? அந்த எடத்திலே இதுக்கு என்ன வேலே? கெட்ட பய ஆட்டமில்லே அது?....''

''அப்ப ஒண்ணு செய்... கல்யாணப் பேச்சைப் பிறகு பேசிக்கிடுவோம். அப்பத்தான் புத்தி வரும்'' என்றார் மாணிக்கம் பிள்ளை.

யாருக்குப் புத்தி வரும் என்று சொல்கிறார் அவர்? அவருடைய மைத்துனனுக்கு யோசனையாகி விட்டது.

''அத்தான்! கல்யாணப் பேச்சைப் பிறகு பேசிக்கலாம்னு ஊரிலே போய்ச் சொல்லவா? அது நடக்காது. அத்தான்! தேதியை வெச்சிக்கிட்டுத்தான் எங்க ஊரு எல்லேக் கல்லே மிதிக்கலாம். மீனாட்சி வழியைப் பாத்துக்கிட்டேயிருக்கும்.''

அதற்குப் பிறகும் இதைப் பற்றிப் பேசாமல், கண்டித்து வைக்காமல் இருக்கக்கூடாது என்று எண்ணினார் மாணிக்கம் பிள்ளை.

''சம்முகம்! மாமா வந்துட்டுப் போனாரே, தெரியுமில்லே!''

''ம், ம்.''

''என்ன தெரியும்?''

''வந்திட்டுப் போனாரு, தெரியும்.''

''எதுக்கு வந்திட்டுப் போனாரு தெரியுமாங்கறேன்!''

சண்முகம் எங்கேயோ பார்த்துக்கொண்டு நின்றான்.

''எங்கே புறப்பட்டுட்டே? கடுதாசி ஆடவா?''

''அதெல்லாம் ஒண்ணுமில்லே!''

''எல்லாம் தெரியும்டா! அதெல்லாம் கெட்ட பய சாவாசம்!''

''தெரியும், தெரியும்?''

''போகமாட்டேல்ல?''

''ஊஹும். மாட்டேன்!''

''அம்பிகை சாட்சியா?''

''சொன்னு நம்பிக்கை யில்லியாக்கும். அம்பிகை சாட்சி — அது இதுன்னு கேட்டுக்கிட்டேயிருந்தா'' என்று முனகினான் சண்முகம். அவன் பேசியதில் பின்பகுதி அவன் தந்தையின் காதுகளுக்கு எட்டவேயில்லே.

அம்பிகை சாட்சியாகச் சொல்லிவிட்டு அன்றைக்கே ஒருவன் மீறி நடந்தால் அவன் முகத்தில் விழிப்பதா? அவன் யாராக இருந்தால் என்ன? அவன் ஒரே பிள்ளையானாலும், இருந்தால் என்ன, இல்லாமலே போனால் தான் என்ன?

கோபத்தினால் ஏறிய கொதிப்பில் அவர் உடல் எல்லாம் நடுங்கியது. தெருவோடு போன தெரிந்த பையன் ஒருவனைக் கடையில் உட்காரச் சொல்லிவிட்டு, வீட்டுக்கு ஓட்டமும் நடையுமாகப் போனார்.

அவரைப் பார்த்ததுமே அவருடைய மனைவிக்கு ஏதோ நடந்திருக்கிறது என்று தெரிந்து விட்டது.

''அந்தப் பய வந்தானா?''

''எந்தப் பய?''

''உன்னோட அருமை மகனைத்தான் கேக்கறேன்...!''

''என்ன நடந்திச்சு!''

''வந்தாக்க, வீட்டுக் குத்துக்கல் ஏறப்படாது, அந்தப் பய.''

''ஏன், என்ன நடந்திச்சு?''

''இன்னும் என்ன நடக்கணும்? அம்பிகை மேலே ஆணை வெச்சிட்டு அன்னைக்கே ஆடப் போயிருக்கான் அந்தப் பய. அவனை என்ன செய்தால் தேவலாம்?''



''நெசமாத்தான் சொல்றியளா?''

''என்னையும் உம் மவன்னு எண்ணிக்கிட்டியா? வாசப்படி ஏறப்படாது அவன்....''

''அதென்னமா ஏர்றதாம்?''

''அதான் சொல்றேன். அந்தப் பயலுக்கு இங்கே சோறு கிடையாது.''

''நான் ஏன் போடறேன்?''

''எங்கியாலும் போய்க்கிட்டும்.''

''போக வேண்டியதுதான்!''

''என்னடி, கூடக்கூடப் பேசிக்கிட்டு வந்தா விளையாடறியா? இல்லே நெசமாத்தான் பேசறியா?''

''அப்ப மட்டும் சொன்னியளே — உம் மவனுட்டம் எண்ணிக்கிட்டியான்னு. இப்ப எனக்கு இல்லியோ அந்தப் பேச்சு?''

''சோறு போடப்படாதுன்னு, போடப் படாது.''

''அதான் சொல்லிட்டேனே —''

''அப்புறம் ஒண்ணு — கண்ணுன்னு— பேச்சு வந்தது. நீயும் அவனோட நடையைக் கட்டிட வேண்டியதுதான்!''

''அந்தப் பேச்சை எடுத்தேன், அப்புறம் என்னைக் கட்டி வைச்சு அடிக்கிறது. அதென்ன நாக்கு ஒண்ணு ரெண்டா?''

''பரிஞ்சிக்கிட்டு வந்தியே — பாத்தில்ல. கதையை. அம்பிகை மேலே ஆணை வெச்சிட்டுப் போற பயலுக்குச் சோறு அம்புடுமாடி?''

''அதென்ன புள்ளே — அணிப் புள்ளே. இந்தப் புள்ளே பொறக்கவேயில்லேன்னு நெனச்சுக்கறேன்!''

மாணிக்கம் பிள்ளை அசந்து போய் விட்டார். அவர் மனைவி எதிர்த்துப் பேசியிருந்தால் அவர் எதையும் நம்பியிருப்பார். ஆனால் அவருக்கு முன்னால் அவள் ஒருபடி அதிகமாகப் போகவே அவரால் ஒன்றையும் நம்ப முடியவில்லை. படபடப்போடு பேசாமல் உட்கார்ந்து கொண்டார்.

''ஏன், என்னு செய்யுது? கண்ணெல்லாம் இப்படிச் செவந்து கிடக்கே?'' — கையிலிருந்த பாத்திரத்தைத் தரையில் வைத்து விட்டு, அந்த அம்மாள் வேகமாக ஓடி வந்து அவரைத் தொட்டுப் பார்த்தாள். நெற்றியைத் தொட்டுப் பார்த்து விட்டு, கையைப் பிடித்துப் பார்த்தாள்.

''என்னு குடி முழுகிப் போச்சுன்னு இப்படி இடிஞ்சு போய் உக்காந்துட்டீங்க?'' — அவளுடைய குரல் ஒலிக்கித் தழுதழுத்தது.

மாணிக்கம் பிள்ளை மலங்க மலங்க விழித்தார்.

''அடி தாயே — பெரியநாயகி! நான் என்னடி செஞ்சேன்?.... நெஞ்சு கெடந்து இந்த அடி அடிச்சுக்குதே!''

''இன்னும் என்னு செய்யணும்? ஆணை வெச்சுப்பிட்டு மீறுற பயலைப் பெத்துவிட்டிருக்கீல்ல அது ஒண்ணு பத்தாதா?''

''படபடப்பாப் பேசாதீங்களேன்! பேசாதீங்களேன்!'' என்று அவருடைய மார்பைத் தடவி விட்டாள் அவர் மனைவி.

''என் வயித்துலே வந்து பொறந்தான் இல்லே அந்தப்பய—படபடக்காமே என்னு செய்யும்?''

''உடம்புக் காஞ்சிக்கிட்டு வருதே —''

''சேச்சே! உடுடி. சொல்றேன். இப்ப எனக்கு என்னு வந்திட்டுது?''

''அம்பிகே — பெரியநாயகி — நீதான் எனக்குத் துணை!'' என்று முறையிட்டவாறு, அவர் மனைவி பிறைக்குப் போய், குங்குமத்தை எடுத்து வந்து அவருக்கு நெற்றியிலிட்டு விட்டுத் தானும் வைத்துக் கொண்டாள்.

''தாவத்துக்குச் சாப்பிடுறீங்களா?''

''கொண்டா!''

அந்த அம்மாள் சின்னப் பெண் போல் ஓடினாள். எதையோ கரைத்துக் கொண்டு ஓடி வந்தாள்.

''இந்தாங்க!''

''வெறும் தண்ணியில்லே கேட்டேன்!''

''கெடக்கு, குடியுங்க! பாலு மாவுதானே? தெம்பா இருக்கும். படபடப்பு அடங்கும்.''

மாணிக்கம் பிள்ளை அதைக் குடித்துவிட்டு அப்படியே சிறிது சாய்ந்து கொண்டார். அவர் மனைவி பக்கத்திலேயே உட்கார்ந்து அவருடைய மார்பைத் தடவி விட்டுக்கொண்டிருந்தாள்.

''சரி, விடு. நான் கடைக்குப்போகிறேன்.''

''இன்னும் சித்தே நேரம் படுத்திருந்திட்டுத்தான் போறது.''

''எவனோ தெருவோட போறவனை உக்காரச் சொல்லி விட்டு வந்திருக்கிறேன்.''

''ஏன், இவன் எங்கே போனான்?''

''அது எங்கே போனானோ? அந்தச் சுடுகாட்டாங் கரைக்குப் போயிருப்பான்!''

'பொக்'கென்று அவர் வாயைப் பொத்தினாள் அவர் மனைவி. ''ஐயைய... அப்படியெல்லாம் சொல்லாதீங்களேன்! எங்கியாலும் உசிரோடு இருந்து திண்டாடிட்டுப் போவட்டுமே. உங்க வாயாலே அதை ஏன் சொல்றீங்க?'வுட்டேன், வுட்டேன்'னு சொல்லுங்க. புண்ணியமாப் போவுது. சொல்லுங்களேன்!'' என்று கெஞ்சினாள்.

''வுட்டேன், வுட்டேன்!''

''அப்ப அவன் இல்லியா அங்கே?''

''இல்லே.''

''என்னடை போட்டியளா?''

''நான் ஏன் போடறேன்? வந்தான்; மேற் காலே போனான். அதென்னமோ அந்தப் பயலை இந்த வீட்டுக் குத்துக்கல் ஏற விட்டே, அப்புறம் எனக்கு இங்கே வேலையில்லே.''

''எனக்கு என்ன பைத்தியமா?''

''சோறு கீறு போட்டே, அப்புறம் இந்த வீட்டுப் பக்கம் வருவேன்னு மட்டும் நெனைச் சிப்புடாதே!''

''அதான் சொல்லிப்பிட்டியளே — மீறிப் புடுவேனா?''

மாணிக்கம் பிள்ளை கடைக்குப் போய்விட் டார். வியாபாரத்திலேயே அவர் மனம் பதிய வில்லை. இரண்டு மணியிருக்கும். சாப்பிட வீட்டுக்குச் சென்றார்.

''அந்தப் பய வந்தானா?''

''வரலே.''

''வர மாட்டான். அப்படி வந்தான், சொன்னதெல்லாம் நினைப்பு இருக்கில்லே?''

''ஏறாதேடான்னு சொல்லிட மாட்டேன். அப்பாகிட்ட கேட்டுப்புட்டு அப்பறமா அடியெடுத்து வையிடான்னு சொல்லிட மாட்டேன்?''

''அதாங் கேட்டேன்.''

அவர் விருப்புடன் கடைக்குத் திரும்பிச் சென்றாலும், அவன் ஏன் வீட்டுக்குச் சாப்பிட வரவில்லை என்ற கேள்வி அவர் நெஞ்சை இடித்துக் கொண்டே யிருந்தது.

'உம்; கனுதே.—எங்கேயா னும் இரவச் சோறு தின் னுட்டு, கடிதாசி ஆடப் போயிருக்கும்' என்று தமக் குத் தாமே சொல்லிக் கொண்டார். இரவு கடை யைக் கட்டிவிட்டு, வீட்டுக்கு வந்தார். வீடு வெறிச்சோ டிக் கிடந்தது.

''என்ன செய்துகிட்டிருக் கிறே? வந்தானா உன்மகன்?''

''வரல்லியே.''

''உம்.....ம்.....'' என்று உறுமினார் அவர்.

''சாப்பிடறியளா?''

''ஊஹும்.....வயிறு சரிமானம் இல்லே...''

படுக்கையில் அவர் வெகு நேரம் வரையில் புரண்டு கொண்டே யிருந்தார்.

''இன்னும் தூங்கலியா?''

''கண்ணு எரிச்சலா யிருக்கு.''

இருட்டோடு எழுந்து விடியற் காலையில் வாசற் திண்ணையைப் போய்ப் பார்த்தார். யாரையும் காணவில்லை.

''ராத்திரிக்குக்கூட அந்தப் பய வரலே போலிருக்கு!''

''வரலே. நான்தான் முழிச்சிக்கிட்டே யிருந்தேனே!''

''அம்பிகை மேலே ஆணை வெச்சிட்டுல்லே போனான்?''

''கிடக்குது. அதை வுட்டுத்தள்ளுங்க!''

''வந்தா சோறு போடப் போறியா?''

''நானா? அவனுக்கா? உங்களைவிட அவன் எனக்கு உசத்தியா?''

''அப்ப வரேன் — கடைச் சாவியை எடு!''

மாணிக்கம் பிள்ளை பொக்கை வாயை மென்று கொண்டிருந்தார். நினைப்பெல்லாம் எதையோ அசை போட்டுக் கொண்டிருந்தது. அதோ போகிறானே, திருமலை!

மாணிக்கம் பிள்ளை கையைத் தட்டினார்.

''பெருமாளே— இப்படி வாய்யா!''

''போய்யா — வேலை கெடக்கு!''

''அட ஒரு நொடி வந்துட்டுப் போங்க ஐயா!''

வழக்கம் போல் வாயில் பச்சைக் கடலை யைக் குதப்பிக் கொண்டே கடை ஓரமாக வந்தான் திருமலை.

''என்னய்யா — சட்டுனு சொல்லும்.''

''அந்தப் பய எங்கேய்யா?''

''எந்தப் பய?''

''உம்ம கூட்டாளி ஐயா! மூணு சீட்டுப் பங்காளி!''

''என்னைக் கேட்டா?''

''பின்னே யாரையா கேக்கறது?''

''அது யாரைக் கேட்பீரோ — அவனை நேத் துக் காலையிலே பார்த்ததுதான். அப்பறம் கண்ணிலேயே படல்லே.''

''நேத்து ஆட வரலியா?''

''மாணிக்கம் புள்ளே! நீராத் தொட்டுப் பாக்கறேன். வேறே எவனாவது இப்படிக் கேட்டான், செவுள்ளே கொடுத்திருப்பேன். சூதாடிப் பயன்னு நினைப்பா?''

''பெரியபோக்கிரியாருதானுங்கநீரும், அந்தத் தத்தாரிப்பயலும்....அந்தப்பய வந்து வீட்டுப்படி ஏறிப்புடுவானா? பாத் துப்புடறேன்! போய்ச் சேரும்!''



''அவன் வந்தாத்தானே — என்னமோ பெரிசாக் கறுவுறீரே!'' என்று சொல்லிக் கொண்டே திருமலை அங்கிருந்து வேகமாகப் போய் விட்டான்.

மாணிக்கம் பிள்ளைக்கு அந்த வார்த்தை சொரக்கென்றது. அவன் வந்தால் தானே எல்லாம். வராமல் போய் விட்டால்? அப்படி யும் நடக்குமோ?

அப்படித்தான் நடந்தது. சண்முகம் அன்றைக்கும் வீட்டுப் பக்கம் வரவில்லை. அவர் மனைவி ஒருகாலும், தலையே வெடித் தாலும் அவரிடம் பொய்யே சொல்ல மாட் டாள். ஆனால் அவள் கொஞ்சங்கூடக் கலங்கக் காணுமே, ஏன்?

சண்முகத்தைப் பற்றி அவர் தம் மனைவி யிடம் பேச்சு எடுக்கவில்லையே தவிர, எந்த நேரத்திலும் அவன் நினைவுதான் அவரை உறுத்திக் கொண்டிருந்தது.

அம்பிகையின் கோபத்துக்கு அவன் ஆளாகி விட்டானோ? என்ன என்னவோ நினைக்கக் கூடாத நினைவெல்லாம் அவர் நெஞ்சிலே புரண்டு வந்தது.

''காதிலே வுழுவுதா?''

''என்ன அது?''

''எத்தினி நாளைக்குத்தான் இப்படியே இருந்துடுவான் — பார்த்துப்புடுவமே!''

''பாத்துப்புடுவம்.''

''ஊரிலேதான் இருக்கானுமா?''

''வேறே எங்கே ஓடிப் போயிடப் போறான்?''

''அப்ப உன்னெக்கூடப் பார்க்கவரலியே!''

''வசனம் கேட்டதில்லியா? புள்ளே மனசு என்னிக்குமே கல்லுதான்னுட்டு!''

''ம்....இதுலே என்னமோ சூது இருக்கு.''

''எதுலே?''

''அவன் கண்ணுலே படாமெ இருக்கறதும் நீ கலக்கம் இல்லாமெ இருக்கிறதும்....''

''என்ன சூது?''

''அதானே புரியலே.''

''அம்பிகை சாட்சியா —''

''இந்தாந்தா. அம்பிகையை இழுக்காதே இதுக்கெல்லாம். நம்மோட இருக்கட்டும்.''

மாணிக்கம் பிள்ளையின் கால் கடைப்பக்கம் போவதற்கு முன்னால் முத்துராமன் காப்பி கிளப்புக்குச் சென்றது.

''முத்து! உன் தம்பி இருக்கானா?''

''இருக்கான். ஏன், என்ன சங்கதி?''

''இருக்கான்னா கொஞ்சம் கூப்பிடேன், சொல்றேன்.''

''ஆமா, என்ன விஷயம்? என்னமோ கேள்விப்பட்டேனே?''

''என்ன — என்ன?'' என்று பதறினார் மாணிக்கம் பிள்ளை.

''உங்க பையன் இரண்டு நாளா ஆளையே காணுமாமே! என்னமோ சொல்லிப்புட்டீராம். சொல்லிக்காமெ போயிட்டானாமே!''

''என்னா சொல்லிப்புட்டேனாம்? சொரக் காய்க்கு உப்பேல்லேன்னு —''

''இருமலேதான் சொன்னான். கடையிலே கால் வைக்கப்படாதுன்னு கண்டிச்சுப்புட்டீராம். வீட்டுக்கும் வரப்படாதுன்னு சொல்லிப் புட்டீராம்.''

''இவங்கசெய்யறதுமட்டும்ஒழுங்காமோ?''

''அதான் சொன்னேனே, இந்தப் பயலோட மூட்டியைப் பேத்துப்புட்டேன். ரெண்டு நாளா எங்கேயும் போகாமெ, கடையிலேதான் இருக்கான்.''

மாணிக்கம் பிள்ளை முத்துவிடம் பேசுவது போல முணுமுணுத்துக் கொண்டார்: ''இங்கேயும் வரலே. அங்கேயும் போகலே. வீட்டுப் பக்கமும் தலைகாட்டல்லே. அப்ப..?''

தாயம்மாள் வளர்ப்பு மகளைக் கேட்டால் அநேகமாகத் தெரிந்து விடும். ஆனால் அவள் வீட்டுக்கு எப்படிப் போவது? அவளிடம் பேசி எத்தனையோ காலம் ஆகிவிட்டது. போனால் முகம் கொடுத்துப் பேச மாட்டாள். காலை நீட்டிப் போட்டுக் கொண்டு எப்பொழுதும் திண்ணையில்தான் உட்கார்ந்திருப்பாள்.— போனால் நீட்டின காலைக்கூட மடக்க மாட்டாள். இந்தச் சமயம் கௌரவத்தையெல்லாம் பார்த்தால் முடியுமா?

''என்ன தாயம்மா, ஆளு தெரியுதா?''

''அது கூடவா தெரியாமெ போயிடும்? பார்த்தாக்கூடப் பார்க்காத கணக்காப் போறது சில பேரு. அதுலே சேர்ந்தவனில்லே நீ. ஏது இவ்வளவு தூரம்?''

''சும்மா வந்தேன். எங்கே, உம் மவன் இருக்கானா?''

''இல்லாமெ எங்கே போறான்? இருப்பான் உள்ளே!''

அவருக்கு மேலே ஒன்றும் பேச்சு வரவில்லை. தாயம்மாள் அவர் எதிர்பார்த்தது போல நீட்டின காலை மடக்கத்தான் இல்லை. இருந்தால் என்ன? ஒரு காலத்திலே எப்படியிருந்த முகம்? எப்படியிருந்த உடம்பு? எப்படியிருந்த கால் — விரல்கள்? அந்த விரல்கள் எல்லாம் கன்றி,தேய்ந்து, கொஞ்சம் வளைந்து கூடப் போயிருந்தன. அந்தப் பழைய மினுமினுப்பு இல்லா விட்டாலும், சதையெல்லாம் சுருக்கமும் மடிப்பும் விழுந்திருந்தாலும், முகத்திலே அந்தப் பழைய களை இன்னும் ஒட்டிக் கொண்டுதான் இருந்தது. இரண்டு பேரும் ரகசியமாக என்னவெல்லாமோ பேசியிருக்கிறார்கள். என்னவெல்லாமோ கோட்டை கட்டியிருக்கிறார்கள். இன்றைக்கு எல்லாம் பழங்கதை. எல்லாம் பொய்யாகி விட்டது. மாணிக்கம் பிள்ளையும் அவருடைய தகப்பனுக்கு ஒரு மகன்தான். கோவில் பிராகாரத்தில் குளத்தங்கரைப் படியிலே, அரச மரத்தடியிலே, மதகடியிலே எப்படியோ ஒரு நாளைக்கு ஒரு தடவையாவது அவர்கள் சந்திப்பார்கள்; நாழிக் கணக்கில் பேசிக் கொண்டிருப்பார்கள். வெள்ளிக்கிழமை அம்பாள் சந்நிதிக்குப் போகிற பழக்கம் உண்டானதற்கே அவள்தான் காரணம். அவளுடைய கெண்டைக்காலையும் பட்டைக் கொலுசையும் பார்த்துப் பார்த்து மாணிக்கம் பிள்ளை இறங்கித்தான் போயிருந்தார். ஆனால் அவருடைய தகப்பனார் கண்டிப்புக்காரர்.

''எலே, நாம மானமாக் குடித்தனம் செய்யறவங்கடா. இன்னொருவாட்டி அந்தக் குட்டியோட கோவில்லே பாத்தேன், குளத்திலே பாத்தேன். அங்கே பாத்தேன் இங்கே பாத்தேன்னு காதுலே விழுந்திச்சி, அப்புறம் உசிரோட என்னைப் பாக்க மாட்டே நீ. கெட்டியா முடிஞ்சுக்க!'' என்று அவர் ஒரு வார்த்தை தான் சொன்னார், மகனைக் கூப்பிட்டு.

தாயம்மாளுடைய நேரமெல்லாம் மாணிக்கம்பிள்ளைக்குப் பொட்டைப் பாடம். எங்கெல்லாம் அவர்கள் நின்று பேசுவார்களோ, அங்கெல்லாம் அவள் கால் கடுக்கத் தவமிருந்து பார்த்தாள். மாணிக்கம் பிள்ளை வராத காரணம் தெரியவில்லை. உடம்புக்குத்தான் ஏதாவதோ என்று கவலைப்பட்டு, வெளியிலும் கேட்க முடியாமல் கண்கலங்கிப் போனாள். இரண்டு வாரம் ஆன பிறகுதான், அவளுக்குக் கண் திறந்தது. புது மாப்பிள்ளையும் பெண்ணுமாக, கூண்டு வண்டியிலே உட்கார்ந்து, சாமிக்குப் படையல் போட மாணிக்கம் பிள்ளையும் அவர் மனைவியும் போய்க் கொண்டிருந்தார்கள். மதகடியில் நின்று கொண்டிருந்த தாயம்மாளுக்குத் தரையே பெயர்ந்து, அதற்குள்ளே விழுந்து விட்டது போல் இருந்தது.

இது போதாதென்று மதகடி ஓரமாக இருந்த சின்னக் குடிசையில் இதுவரை யார் இருக்கிறார்கள் என்றே தாயம்மாள் கவனித்ததில்லை. அங்கிருந்த பக்கிரியம்மாள் பல நாட்களாகத் தன்னையும் மாணிக்கம் பிள்ளையையும் கவனித்திருக்கிறாள் என்றும் அவளுக்குத் தெரியாது.

# ரிகரிங் டிபாசிட் திட்டம்

மாதாமாதம் நீங்கள் செலுத்தும் சிறிய தொகை முறையே 34, 46, 86 மாதங்களில் கணிசமான அளவிற்குப் பெருகிவிடுகிறது

| பிரதி மாத டிபாசிட்டுகள் | 34 மாதங்களில் | 46 மாதங்களில் | 86 மாதங்களில் |
|---|---|---|---|
| 10-00 | 360-00 | 500-00 | 1,000-00 |
| 15-00 | 540-00 | 750-00 | 1,500-00 |
| 20-00 | 720-00 | 1,000-00 | 2,000-00 |
| 30-00 | 1,080-00 | 1.500-00 | 3,000-00 |

குறைந்தபட்சம் ரூ. 10/- பின் ரூ. 5/-ன் பெருக்குத் தொகைகளில் ரூ. 500/- வரை ஒரே சிராகச் செலுத்தி வரலாம். ஜூலை 1ம் தேதி முதல் 34, 86 மாதங்களுக்கான டிபாசிட்டுகள் ஏற்கப்படுகின்றன.

விவரங்களுக்கு அருகாமையிலுள்ள எங்கள் கிளையை அணுகவும்

G. S. சுந்தரம்
காரியதரிசி

# இந்தியன் பாங்க் லிமிடெட்

இந்தியன் சேம்பர் பில்டிங்ஸ் – சென்னை-1

VSK IB

# ராம்தீர்த் பிரம்மி ஆயில்

(ஸ்பெஷல் நெ. 1) (ரிஜிஸ்டர்டு)



கூந்தல் உதிர்வதையும், பொடுகையும் தடுத்து கேசத்திற்கு கருநிறத்தையும் பளபளப்பையும் அளிக்கும் ஓர் ஒப்பற்ற கூந்தல் தைலம். பல உயர்ந்த மூலிகைகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டது. மூளைக்கு குளிர்ச்சி அளித்து, ஞாபக சக்தியை அதிகரித்து, கண் எரிச்சலையும் அடிக்கடி ஏற்படும் தலைவலியையும் போக்கி நிம்மதியான நித்திரையை அளிக்கிறது.

பெரிய பாட்டில் விலை ரூ. 4.50 : சிறிய பாட்டில் விலை ரூ. 2.25

## யோகாசனப் படம்

எங்கள் யோகாசனப் படத்தில் காட்டியுள்ளவாறு ஆசனங்களை முறைப்படி செய்து வந்தால் நீங்கள் உடல் வலிவு பெற்று ஆரோக்கியமாக வாழ்வீர்கள்

விலை ரூ. 3/- (தபால் செலவு உள்பட)

# SHRI RAMTIRTH YOGASHRAM

DADAR, BOMBAY-14

மதராஸ் டிப்போ: 25, நைனியப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-3

''கூடிக் கூடிப் பேசிக் குலாவினியே — பாத்துக்கிட்டியா! இந்த ஆம்புள்ளைங்களே இப்படித்தாண்டி பொண்ணே. கொஞ்சம் நின்னு சிரிச்சிப்புட்டமன்னு, என்னிக்கும் சிரிப்பாச் சிரிக்க வெச்சுப் புடுவானுக. இனிமேயானும் தெரிஞ்சுக்க!'' என்று புத்தி சொல்லிவிட்டுச் சிரித்தான்.

தாயம்மாள் தலைதெறிக்க ஓடினள். அப்புறம் இந்த நாற்பது வருஷங்களில் அந்த மாணிக்கம் பிள்ளையை எத்தனையோ தடவை வழியில் நாலு பேரோடும் பார்த்திருக்கிறாள்; தனியாகவும் பார்க்க நேர்ந்ததும் உண்டு. ஆனல் இதுவரையில் எதுவுமே நடந்ததாகக் காட்டிக் கொண்டதில்லே. அவன் யாரோ, தான் யாரோ என்றுதான் அவள் நடந்து கொண்டாள். இத்தனைக்கும் ஊரிலே அவர்கள் இரண்டு பேரையும் பிணைத்து ரகசியமாக ஒரு பேச்சு இருந்து வந்தது அவளுக்குத் தெரியும். அவளுக்குக் கல்யாணமாகி, வெகுநாள் வரைக்கும்கூட இந்த அவதூறு அடிபட்டது. இருக்கட்டுமே; அவள் மடியில் கனமிருந்தால்தானே பயப்படுவதற்கு?

மாணிக்கம் பிள்ளே மகா யோக்கியனும்! சாமிக்குப் பயந்து நடப்பவனும்! சொன்ன சொல் தவருத நாணயமுள்ளவனும்! இதெல்லாம் யாரிடம் கதை — தாயம்மாளிடம் செல்லுமா? மரத்துக்கும் மதகுக்கும் நிலத்துக்கும் நீருக்கும் உயிர் இருந்து வாயும் இருந்தால், அதெல்லாம் தாயம்மாளுக்குச் சாட்சி சொல்லுமே! அவன் யோக்கியப் பொறுப்பின்றிக் கையைத் தீண்டியவன்; சத்தியம் அடித்துக் கொடுத்தவன்; நாணயமில்லாமல் சொன்ன சொல்லே, கொடுத்த வாக்கை மீறி நடந்து கொண்டவன். இதெல்லாம் வேறு யாருக்குத் தெரியும்? வீண் அபவாதத்தைச் சுமந்து கொண்டு அவள் பட்ட துன்பமெல்லாம் மற்றவர்களுக்கு எப்படித் தெரியும்?

ஊர் மறந்து போயிருக்கலாம். ஆனல் அந்த நினைப்பு அவள் நெஞ்சில் இன்னமும் நச்சு உருண்டையாகத் தங்கியிருந்தது. அவள் கண்களை விட்டு அந்தப் பழைய அழகு போய் விட்டது. ஆனல் அவள் பார்வையை விட்டு அந்த வெறுப்பு நீங்கவில்லே. எல்லாரும் செய்வது போல மாணிக்கம் பிள்ளை இப்போது ரொம்பவும் நல்லவனுகவே இருக்கட்டும்; இருக்கவும் வேண்டியதுதானே. ஆனல் அவள் பட்ட சூட்டின் பெரிய தழும்பு இன்னும் மறைந்து போகவில்லேயே. அறியாத பருவத்தில் தெரியாத்தனமாக நடந்து கொண்டதெல்லாம் மறந்துகூடப் போய் விட்டது. ஆனல் அதன் வடு எங்கே மறைந்தது?

மாணிக்கம் பிள்ளை ஒன்றும் பேசத் தோன்ருமல் உட்கார்ந்திருந்தார். அவரால் பேச முடியவில்லே. அவள் எடுத்துக் கொடுத்தாள்.

''மவளைக் காணுமேன்னு கேக்க வந்தியாக்கும்?''

''க்ஹும். ஆமாம்.''

''இவனுக்கு என்னமாத் தெரியும்? தெரிஞ்சிருந்தாலும் சொல்லுவானு?''

''இல்லே....கண்டிச்சுக் கேட்டா....''

''அப்ப மட்டும் சொல்லிப்புடுவானு? நெருக்கிக் கேட்டா பொய்ச் சத்தியம் வுடுவான். சத்தியம் செய்யுறது காசா, பணமா? அது என்ன செய்துப்புடும்? உப்புக்கு உதவாத சத்தியம்! சத்தியம் செஞ்சு கொடுத்தவங்க எல்லாம் அப்படியே காப்பாத்திப்புட்டாங்களோ....?''

தாயம்மாள் குரல் மாறி வருவதை உணர்ந்தார் அவர். மெல்ல எழுந்திருந்து, ''அப்ப?'' என்று கேட்டார்.

''போயிட்டு வா. அப்பனுக்குக் கட்டுப்படறது எல்லாம் இந்த நாள்ளே இல்லே. கட்டுப்படணும்னு எழுதியா வெச்சிருக்கு? போ, போ — வேலையைப் பாரு....''

மாணிக்கம் பிள்ளைக்கு மண்டையிலே அடித்தது போலிருந்தது. பிள்ளையைப் பெற்று இப்படி வேதனைப் படுவதை விடத் தாயம்மாளைப் போல, பிள்ளை குட்டி இல்லாமல் இருப்பது நல்லது என்று பட்டது. பேசாமல் கடையை நோக்கி நடையைக் கட்டினார்.

அன்று சாப்பாட்டுக்கு வீட்டுக்குப் போகவில்லே. பசி வந்தால்தானே?

கப்புச் செட்டியார் அந்த வழியாகப் போகும் போது, ''என்னங்க, சாப்பிடப் போகலீங்களா?'' என்று கேட்டார்.

''போகலே!''

''ஆமா, இப்பத்தான் நெனப்பு வருது. சம்முகம் சங்கதி என்ன? ஒண்ணும் தகவலே இல்லியாமில்லே?''

''பேசிக்கிறாங்களா?''

''பேச மாட்டாங்களா பின்னே?''

கப்புச் செட்டியார் கண்டிப்பான ஆசாமி. எட்டுப் பிள்ளைகளும் கிட்ட நெருங்கவே பயப்படும். எல்லாம் பொறுப்புத் தெரிந்த பிள்ளைகள். எல்லாவற்றிற்கும் கொடுத்து வைத்திருக்க வேண்டாமா? மாணிக்கம் பிள்ளைக்கு வேகம் பிறந்தது.

''இருந்தா உங்க பிள்ளைங்க மாதிரி இருங்கா இருக்கணும். இல்லாட்டி அந்தப் புள்ளையே வேணும்!'' என்ருர்.

''மாணிக்கம் பிள்ளை! ரொம்ப அழுத்தக்கார மனிசன்ஐயா நீங்க! ஒண்ணே ஒண்ணு: எப்படி ஐயா விட்டுப்புட்டு இருக்கிறது? எங்கிருந்தாலும் புடிச்சு இழுத்தாறச் சொல்லுங்க ஐயா!''

கப்புச் செட்டியார் இன்னும் ஒரு நிமிஷம் நின்றிருந்தால் மாணிக்கம் பிள்ளை பச்சைக் குழந்தை போல் அழத் தொடங்கியிருப்பார்.

''அம்பிகே!'' என்று அழுகையையும் சோகத்தையும் அப்படியே விழுங்கிக் கொண்டார்.

இரவிலும் அவர் சரியாகச் சாப்பிடவில்லே. ஆனல் சண்முகத்தின் பேச்சையே எடுக்கவில்லே.

படுத்து வெகு நேரம் ஆன பிறகு, மூச்சொடு மூச்சாக, ''தூங்கிட்டீங்களா?'' என்று கேட்டாள் அவர் மனைவி.

அவர் வாயைத் திறக்கவில்லே; கண்ணையும் திறக்கவில்லே. இரண்டு கண்கடை வழியாகவும் கண்ணீர் வடிந்து கொண்டிருந்தது. மகன்மீது உண்டான கோபமெல்லாம் கண்ணெதிரே தோன்றிய அம்பிகையின் மீது பாய்ந்து சென்றது. அப்புறம் எப்பொழுது தூக்கம் வந்ததோ, அவருக்கே தெரியாது.

காலையில் மனைவியின் முகத்தை நடுநடுவில் கவனித்தார். அவருக்கு அவள் தைரியமாக இருந்து, அவருக்கு வேண்டியதைச் செய்து,

கடைக்கு அனுப்புவதில் மூனைந்திருந்தாள். அவளைப்போல் கொஞ்சமும் கலக்கமின்றி இருந்தால் தேவலை போலிருந்தது. ஆனால் முடியவில்லையே! பத்து மாதம் சுமந்து பெற்றவளே இருக்கும் போது—தம்மால் ஏன் இருக்க முடியவில்லை என்று அவருக்குத் தோன்றியது. விளையாட்டுப்போல் நாலு நாளாகி விட்டது.

வயிற்றில் மட்டும் ஒரு சங்கடம் இருந்து கொண்டே யிருந்தது. நாலு மணியானதும் கடையை விட்டு இறங்கினார். அடுத்த கடைப் பையனைக் கூப்பிட்டு, "டேய், கொஞ்சம் கவனிச்சுக்கடா, இதோ வந்துட்டேன்!" என்று ஆற்றங்கரைப் பக்கம் போனார். திடீரென்று வேறு ஒரு யோசனை தோன்றியது. அப்படியே சுடுகாட்டு மண்டபம் வரையில் அவரே போய்ப் பார்த்தால், என்ன? 'அது தான் சரியான வேலை; போக வேண்டியது தான்' என்று எண்ணியவாறு, ஒற்றையடிப் பாதை வழியே நடந்து போனார்.

மண்டபத்திலே வெள்ளையாக ஆட்கள் இருப்பது தெரிந்தது. அவர் பார்வையைத் திருப்பாமல் அந்த மண்டபத்தை நோக்கிச் சென்றார். நெஞ்சு 'திக்திக்'கென்று அடித்துக் கொண்டது. சண்முகத்தைப் பார்த்தால் என்ன செய்வது? என்ன கேட்பது? புங்க மிளாற்றை ஒடித்து, எல்லாருக்குமே தலைக்கு நாலாக, பட்டை பட்டையாகத் தடிக்கும்படி விளாசி யிருந்தால் என்ன? ஏன் அப்படிச் செய்யப்படாது?

**ம**ண்டபத்தை நெருங்கி வந்து பார்த்த போது இவர் எதிர்பார்த்த முகம் ஒன்றுகூட அங்கேயில்லை. வேறு யாரெல்லாமோ உட்கார்ந்து, கலகல வென்று சில்லறைகளைப் போட்டு விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஒருவராவது இவரை லட்சியம் செய்யவில்லை. ஒருவன் முகத்திலாவது துளி 'பவிஷு'இருக்க வேண்டுமே. பீடிப் புகையும், வெற்றிலை புகையிலை எச்சிலுமாக முதுகு எலும்பு ஒடிந்தவர்களைப் போல் அவர்கள் காணப்பட்டார்கள்.

மாணிக்கம்பிள்ளை ஏமாற்றத்துடன் திரும்பினார். அவருக்குப் பின்னால் யாரோ 'பொக்' கென்று சிரிப்பது போல் இருந்தது. முகத்தைத் திருப்பாமல் அவர் நடையை எட்டிப் போட்டார். போகிறபோது இருந்த நம்பிக்கையும் தைரியமும் இப்போது அவரிடம் அடியோடு இல்லை. இனி, அவர் சந்தேகப்படக் கூடிய இடம் எதுவுமே இல்லை. மாணிக்கம் பிள்ளையின் கோபம் மாறி, பயம் மேலோங்கி வந்தது. அசட்டுப் பயல் ரோசப்பட்டுக் கொண்டு 'என்னவாவும்' செய்திட்டானோ என்று நெஞ்சு ஊமைக் கதறலாகக் கதறியது.

"அம்பிகே! அப்படிக் கூட என்னைச் சோதிச்சுப்புடுவியா?" என்று கோயிலிருந்த திக்கைப் பார்த்து இரு கைகளையும் சேர்த்து முறையிட்டார்

கடைத் தெரு முனைக்கு வந்த போது, போலீஸ் கந்தசாமி நிற்பதைப் பார்த்தார். ஒரு சமயம் போலீசில் பிடித்துக் கொண்டு போய் அடைத்து வைத்திருப்பார்களோ என்ற எண்ணம் வந்தது. அப்படியிருந்தால் தகவல் எட்டியிருக்குமே. அதோ அந்தக் கந்தசாமிகூட அவரைப் பார்க்கிறானே, புன்முறுவல் செய்கிறானே! பொங்கலுக்கு நாலு சீப்புப் பழம் 'இனாம்' வாங்கிக் கொண்டு போன அவன், இந்தத் தகவலைக் கூடவா சொல்ல மாட்டான்?

"**அ**ண்ணாச்சி! மாலையை வெச்சிருக்கட்டுமா, கடைக்குக் கொடுத்தனுப்பட்டுமா?" என்று கேட்டான் ஆறுமுகம்.

"வெள்ளியா இன்னிக்கு?"

"பின்னே இல்லியா?"

மாணிக்கம்பிள்ளை பெரிதாக, அம்மன் உயரத்துக்குச் சரியாகக் கட்டியிருந்த ரோஜா மாலையைப் பார்த்தார். அவருக்குக் கோபம் தான் வந்தது.

"வேணாம், இன்னிக்கு அனுப்பாதே!"

"அப்ப எடுத்துக்கிட்டுப் போறியளா?"

"வேணாம்டா-மாலையும் வேணாம்; மட்டையும் வேணாம்! நானும் போவப் போறதில்லே இன்னிக்கு!"

"என்ன அண்ணாச்சி, நெசந்தானா?"

"இதிலே நெசமென்ன? பொய் என்ன?"

"அப்படி என்ன அண்ணாச்சி இன்னிக்கு?"

"இன்னிக்கு மட்டுமில்லேடா—இனி எப்பவுமே சரிதான். எனக்குன்னு நீ மாலை கட்டாதே. நான் போகப் போறதில்லே!"

ஆறுமுகம் வாயை 'ஆ' என்று பிளந்தபடி உட்கார்ந்திருந்தான். ஆனால் மாணிக்கம் பிள்ளை அவன் கண் பார்வையிலிருந்து மறைந்து போய் விட்டார். அதற்குள் எப்படிப் போனார்? அம்பிகையின் மீது ஆத்திரத்தைத் தீர்த்துக் கொண்டு விட்ட வேகத்தோடு அவர் நடையை எட்டிப் போடத் தொடங்கினார். ஆனால் கடைக்கு மீண்டும் போகவே அவருக்கு எரிச்சலாக இருந்தது. வெள்ளிக்கிழமை என்றால் மன்னார்சாமி கடை வத்தியும் மட்டிப் பால் சாம்பிராணியும் அவர் கடையில் மணக்கும். இனி மேல் இரண்டையும் போய் வாங்கிவர வேண்டும். வால் சின்னச் சட்டியைத் தேடி, கரியைத் தேடித் தணலாக்க வேண்டும். அப்புறம் வத்தியைக் கொளுத்தி வைத்துச் சாம்பிராணி போட வேண்டும். இதெல்லாம் யாரால் ஆகும்? இதெல்லாம் இனி யாருக்காக? எதற்காக? அந்த நினைப்பு அவர் நெஞ்சை வந்து அடைத்தது. கால் நடை மெல்லத் தள்ளாடியது. 'குப்'பென்று கடைத் தெரு சந்தடி அடங்கி, கண்கள் இரண்டும் இருட்டிக் கொண்டு வந்தன. அதோ, அங்கே, அவர் கடையிட்டே



என்னதான் புகைச்சல்? உரிமட்டைப் புகைச்சலா?

''இதெல்லாம் என்ன? சினிமாவில் அறுந்த படம் ஆடுவது போல, கடை வீதியிலுள்ள கடைகள் எல்லாம் இப்படியும் அப்படியுமாக ஆடுவானேன்? தரை ஏன் இப்படிப் பம்பரமாகச் சுற்றுகிறது? இதென்ன, கடை வீதி, வீதியில் போகும் மனிதர்கள், வண்டிகள், கடைகள் எல்லாமே 'கிர் கிர்' என்று சுற்றுகின்றனவே! நான்....நானுமா சுற்றுகிறேன்? கால் எப்படி நிற்கும்? நிற்க முடியவில்லையே... பிடித்துக் கொள்ள..... பிடித்துக் கொள்ள.. அம்பிகே!''

மாணிக்கம்பிள்ளை தடாலென்று கீழே விழுந்து விட்டார். விழுந்ததுதான் அவருக்குத் தெரியும். அப்புறம் ஒன்றுமே தெரியாது. எது சுற்றியதோ, யார் சுற்றினார்களோ? அவரைப் பற்றினவரையில் ஊர் கடை உறவு, ஒன்றுமே இல்லை......

....ஆனால் அதோ என்னவோ அவருடைய கடை வாசலில் புகை வருகிறதே! இது யார் ஒருவருமில்லாத கடையில் ஒரு பெண், கண்ணைக் கரிக்காதபடி சுருக்கிக் கொண்டு, உரிமட்டையைக் கொளுத்தி விசிறி, கரியைத் தணலாகக் கனிய வைப்பது?

''மீனாச்சியா?''

''ஆமா, மாமா!''

''நீ எப்ப வந்தே மீனாச்சி?''

''இப்பத்தான்!''

''தனியாகவா?''

''தனி என்ன மாமா தனி? பெரிய நாயகி பேரை மனசுக்குள்ளாற நெனச்சுக்கிட்டேன்; வாய்க்குள்ளாறச் சொல்லிக்கிட்டே வழி யோடெ வந்திட்டேன், மாமா. அத்தானைக் காணும்னு.....''

மீனாட்சி அழுகிறாளா, சிரிக்கிறாளா?

''வயித்தெ எரியுது; என்ன சிரிப்பு உனக்கு மீனாச்சி?''

சிரிப்பவள் யார் மீனாட்சியா? மீனாட்சியென்றால் அவளுக்கு இந்த மாதிரி சிவப்புப் புடவை ஏது? கழுத்திலே ரோஜா மாலை அணிந்திருப்பவள் மீனாட்சியாக எப்படி இருக்க முடியும்? அதே கால்கள், பாதங்கள், வெள்ளிக் கவசங்கள், கைகள், முகம், இலகமிட்ட நெற்றி, வைரப் பொட்டு, வெள்ளிக் கண்கள், சுவர்ணக் கிரீடம் எல்லாம் அணிந்திருக்கும் இவள் மீனாட்சியா, பெரியநாயகியா? இவளுக்கு இத்தனை குறும்புத்தனமா?

''பெரிய நாயகி.....''

....மாணிக்கம்பிள்ளை வாயை விட்டுக் கத்தியவாறு கண்களைத் திறந்தார்.

''மாமா!''

'மாமாவா? யார் இது, மீனாச்சியா? இது என்ன, என்னைச் சுற்றிலும் கூட்டம்? நம்ம வூட்டுக்காரி கண்ணுலே மாலை மாலையாக் கொட்டுதே தண்ணி.... இது என்ன மருந்து நெடியா....?' மாணிக்கம்பிள்ளை மலங்க மலங்கச் சுற்றிலும் பார்த்தார்.

''காத்தை வுடுங்க. நெத்தியெல்லாம் வேர்க்குது....'' ஒரே சலசலப்பு; புழுக்கம்; இலேசான காற்று; களைப்பு.... புகைச்சல்....

'இதெல்லாம் என்ன? இதிலே எது கனவு? எது நெனப்பு? இது நிச்சயமா மீனாச்சிதான்! பின்னைக் கொண்டை; கருகரு வென்று உருண்டோடும் விழிகள்; பூப் போன்ற கைகள், புல்லாங்குழல் குரல்... மீனாச்சியேதான்!'

''மீனாச்சி......''

''மாமா!''

''என்ன இதெல்லாம்?''

''கடைத் தெருவிலே மயக்கமடிச்சி வுளுந்திட்டீங்க, மாமா!''

''எப்ப?''

''இன்னிக்குத்தான். வெளக்கு வெக்கிறப்போ!'''

''நீ எப்ப வந்தே?''

''நானும் அப்பத்தான் வந்தேன்.''

''ஆருகூட?''

''அப்பா வந்தாங்க... அதுவும் வந்திச்சி.''

''எது?''

''அதுதான்... அத்தான்தான்!''

''அத்தானா? எங்கே... எங்கே அவன்?''

மீனாட்சி தன் அத்தையின் பக்கம் பார்த்து, ''போனவங்க இன்னும் வரலியா அத்தே?'' என்று கேட்டாள்.

''எங்கே.... எங்கே போனான்? மூ..மூ..''

மாணிக்கம்பிள்ளைக்கு மூச்சை அடைத்தது.

''ஆமாம், மாமா. பூக்கடைக்குத்தான் போனாங்க...''

மாணிக்கம் பிள்ளை மூச்சை மெதுவாக விட்டுக் கொண்டே, ''பூக் கடைக்கா? எதுக்கு?'' என்றார் ஒன்றும் புரியாமல் விழித்தவாறு.

''ஆமா மாமா! பூக்கடைக்குப் போயிட்டு அப்படியே கோயிலுக்குப் போயிட்டு.... இன்னிக்கு வெள்ளிக்கிழமை இல்லியா? எப்பவும் நீங்க போவீங்களே இந்த நிலைமையிலே எப்படி மாமா, உங்களாலே போக முடியும்? அதுக்குப் பதிலாத்தான் நான் போறேன்னு போனாங்க மாமா....''

மாணிக்கம்பிள்ளைக்கு இப்பொழுதுதான் நல்ல நினைவு சரியாக வந்தது.

''அங்கியா? உங்க ஊருக்கா வந்தான் அந்தப் பய?''

''ஆமா, மாணிக்கம்புள்ளே! நான்தான் போகச் சொன்னேன். இனிமேல் எல்லாம் சரியாப் போயிடும். பெருமாள் எங்களுக்கெல்லாம் நல்ல புத்தியைக் கொடுத்திட்டார். கவலைப்படாதேயும் ஐயா. என் வரையில் அவராலேதான் நீர் இன்னிக்குப் பிழைத்திருக்கிறீர். நாங்களும் பிழைச்சோம். ...'' என்று பெருமாள் பிரசாதமாக ஒரு வாழைப் பழத்தைக் கட்டை விரல்களால் நீட்டினான் இருமலை.

''அம்பிகே.....'' என்றார் மாணிக்கம் பிள்ளை.

''அட ஆரா பிருந்தா என்னய்யா, துவிண்டு வாயிலே போடட்டுமா?'' என்றான் இருமலை.

அர்ச்சனைத் தட்டும் மாலையுமாக வந்த சண்முகம் சமயம் எப்படியோ என்று வாசற்படியிலேயே நின்று கவனித்தான்.

மாணிக்கம்பிள்ளை பொக்கை வாயில் கொஞ்சம் வாழைப் பழத்தைப் போட்டு மென்று கொண்டிருந்தார்.



# பாடிப் பறந்த குயில்

இளங்காலை நேரம். கனமான பனி விலகிச் சல்லா விழுந்திருப்பது போல் மாறியிருந்தது. காட்டின் கலகலப்பு தொடங்கி விட்டது. சூரிய கிரணங்களின் இனிமையான ஸ்பரிசம் நீண்டுயர்ந்து நின்ற மரங்களிலிருந்து நழுவி, மூங்கில் புதருக்குப் பக்கத்தில் ஒரு மேட்டின் மீது கிரீடம் போல் நின்றிருந்த குடிசைக்குள் நுழைந்தன. ஜீவானந்தம் புரண்டான். கனமான கம்பளிப் போர்வை முகத்தை மூடவில்லை. கண்களின் மீது சூரிய ஒளி குழந்தையின் முத்தம்போல் அமிருதமான சுகத்தை ஏற்றியது. சட்டென்று விழித்துக் கொண்டு இடக் கையை உயர்த்திக் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். சாவி தீர்ந்து விட்டதால் கடிகாரம் நின்று விட்டிருந்தது. போர்வையை உதறிவிட்டுப் படுக்கையில் எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

எங்கிருந்தோ புது மலர்களின் விநோதமான வாசனை புறப்பட்டு உள்ளத்தில் உன்னதமான உணர்வுகளை மெல்ல மெல்ல மலர்விப்பது போல்



# வையவன் எழுதிய குறுநாவல்

வீசிற்று. ஜீவானந்தம் அந்த நறுமணத்தில் லயித்தபடியே மெல்லத் தாடையைத் தடவிக் கொண்டான். சொர சொர வென்று முட்களைப் போல், அவனுடைய முரட்டுக் கைக்கே முகத்தில் மண்டியிருந்த தாடி உறைத்தது. ஒன்றரை வாரத்துக்கு மேலாகி விட்டிருக்கும் முக க்ஷவரம் செய்து. காட்டுவாசத்தில் எந்தெந்தத் துக்கங்களையோ மறந்து, என்னென்ன சுகங்களையோ துறந்து கிடக்கும் போது இதில் என்ன இருக்கிறது என்று நினைத்துக் கொண்டான் ஜீவானந்தம்.

படுக்கையை விட்டிறங்கி அதைச் சுருட்டி வைத்து விட்டு நிமிர்ந்தான். குடிசையின் நடு வாரை பலமாக மண்டையைத் தாக்கிற்று. 'அப்பாடா...' என்று இலேசாக மண்டையைத் தடவி விட்டுக் கொண்டு, குனிந்தபடியே மாடம் என்ற பெயரில் அமைக்கப்பட்டிருந்த பொந்தினுள் கையை விட்டான். புத்தகங்கள், தோட்டாப் பெட்டி, சீப்பு என்று ஒரே குப்பையாயிருந்தது அந்த மாடம். கடைசியில் அந்தப் பல் குச்சிக் கட்டு கிடைத்தது. ஏழெட்டுப் பல் குச்சிகள்—வேலங் குச்சிகள்—அழகாக, நறுவிசாகச் சீவிக் கட்டுப் போட்டுக் கொண்டு வந்து வைக்கப்பட்டிருந்தது. அதைப் பார்த்தவுடன் ஜீவானந்தம் மனத்தில் பழைய உணர்வுகள் மலர்வதை உணர்ந்தான். நிஷா தான் வைத்திருப்பாள். நிஷா எவ்வளவு அருமையான பெண்! ஜீவானந்தம் ஒரு பல் குச்சியை உருவிப் பற்களால் கடித்தவாறு ஜாக்கிரதையாகக் குனிந்துகொண்டு, குடிசையை விட்டு வெளியே வந்தான்.

நெடிய தேகாத்திரமான அவனுடைய உடல் ஓங்கி வளர்ந்த மரங்கள் மத்தியில் நிமிர்ந்து நின்றபோது, மனிதனின் வீறுள்ள லட்சியங்களொருங்கே நிமிர்ந்து நிற்பது போல் இருந்தது. அவ்வளவு பெரிய உடம்புக்கு அந்தக் குடிசைவாழ்வு சரியான தண்டனை. நிமிர்ந்தாலும் இடிக்கும்; நடந்தாலும் இடிக்கும். அது ஒரு சமாதி போல் இருந்தது. நீட்டிப் படுத்துக் கொள்ளலாம்; அதற்கு மட்டும் சௌகரியம். அதுகூட நிஷாவின் உதவியால் கிடைத்ததுதான். அவள் பொரிக இல்லாவிட்டால் அவனுடைய தந்தை இந்த விஷயத்தில், அந்த மலைவாசிகளின் சந்தேகம் நிறைந்த பார்வைகளையும் பேச்சுக்களையும் சம்பிரதாயங்களையும் கடந்து வந்து இந்த உதவியைச் செய்திருக்க மாட்டார்;

பூட்ஸ் மறந்து போய்விட்டதால், ஜீவானந்தம் குடிசைக்கதவை ஒருக்களித்து, கையை நீட்டி உள்ளேயிருந்த பூட்ஸ்களை எடுத்தான்.

குடிசைக் கதவைப் பூட்டிவிட்டு, பூட்ஸ் ஓசையிட ஒரு கடற்படை வீரன் போல் சாய்ந்து சாய்ந்து ஜீவானந்தம் மலைப் பாதையில் நடக்கத் தொடங்கினான். நிஷாவின் ஞாபகம்தான் அவன் சிந்தனையை அப்போது ஆக்கிரமித்திருந்தது. அவன் எங்கேயோ இருந்து வந்தான். அவன் யாரென்றோ இன்னும் எத்தனை நாட்கள் இங்கே இருப்பான் என்றோ பூரணமாக அறிந்துகொள்ள முயற்சிசெய்யாமலேயே அந்த மலைஜாதிப் பெண், மனம் கலந்து அவனோடு பழகினாள். சிரித்துச் சிரித்துக் கபடமற்ற பேதைமை நிறைந்த இதயத்தோடு பேசி, இந்தக் காட்டு வாசத்தின் கசப்பையும் அவன் உள்ளத்தில் நிரம்பியிருந்த ஒரு பேரந்தகாரத்தையும் மெதுவாக விலக்கிவிட்டாள். அவளுடைய நட்பு ஒரு நட்சத்திரத்தின் குளிர்ந்த சுடர்போல் மாசற்ற இனிய தண்ணீரைப் போல் அவனுக்குப் பட்டது.

''ஹல்லோஹோய்....'' என்று யாரோ தொலை தூரத்துக்கு அப்பாலிருந்து கூவினார்கள். அந்தக் காட்டின் இருதயம் அதிர்வதுபோல் அதன் எதிரொலி படிப்படியாக ஏறி இறங்கி மெல்ல எங்கோ கடந்து சென்று விட்டது. மலைவாசிகளின் குரல்தான் அது. சூரியவெளிச்சம் நன்றாகத் தெளிந்து விரிந்தது. மேற்கே தெரிந்த சில குடிசைகளிலிருந்து அடுப்புப் புகை, நீல வானை நோக்கிக் கருப்புக் கோலங்கள் போல் கிளம்பின. பறவைகளின் மகிழ்ச்சியான சந்தடியும் தெளிவான வானமும், குடிசைகளிலிருந்து ஆங்காங்கே மெல்ல எழுந்த அந்த அடுப்புப் புகையும், மலர்களின் கம்மென்ற வாசனையும் வாழ்க்கை எவ்வளவு சாந்தி நிறைந்தது; இன்ப மயமானது என்ற நினைவுகளையெல்லாம் ஜீவானந்தத்தின் முரட்டு உள்ளத்தில் எழ வைத்தன.

நினைத்து ஒரு விநாடி கூட முடிந்திராது. மரங்களும் புதர்களும் அடர்ந்திருந்த கிழக்குப் பக்கத்திலிருந்து பயங்கர முழக்கத்துடன் ஒரு துப்பாக்கி வேட்டு கேட்டது. கா...கூவென்று அலறிக் கொண்டு குபீரென்று விதம் விதமான பறவைகள் வானத்தில் பறந்தன..... ஜீவானந்தம் திடுக்கிட்டு அப்படியே நின்றான். யார் இந்தக் காலை நேரத்தில் துப்பாக்கி சுடுவது? இந்தக் கேள்வி தோன்றியதும், கடிகார வில் விரிவது போல் பயம் அவன் உள்ளத்தில் சிறுகச் சிறுகப் பரவலாயிற்று. வேட்டைக்காரர்கள் என்றும் இந்தக் காலை நேரத்தில் திடீரென்று சுடமாட்டார்களே! அந்தக் காட்டில் கழுதைப் புலி, கருஞ் சிறுத்தை, காட்டெருமை போன்ற மிருகங்களை வேட்டையாடச் சிலர் அபூர்வமாக வருவதுண்டு. ஒரு நாள் முன்னதாக வந்து தங்கியிருந்து விட்டுப் பின்தான் அவர்கள் வேட்டையை ஆரம்பிப்பது வழக்கம். நேற்று அப்படி யாராவது வந்திருந்தால் அவர்களை, ஜீவானந்தம் சந்தித்திருப்பான்; அல்லது நிஷாவாவது அவனிடம் சொல்லியிருப்பாள். ஒரு வேளை... ஒரு வேளை... போலீஸ்தானோ....?

பூமியை அழுத்துவது போல் ஜீவானந்தம் விறைப்பாக எஃகுச் சிலை போல் நின்றான். அவனுடைய நெற்றி சுளித்துப் புருவங்கள் நெறிந்தன. கீழ் உதட்டைப் பல் குச்சியோடு சேர்த்துக் கடித்தபடி அந்தத் துப்பாக்கி மறுபடியும் பேசுகிறதா என்று கேட்கக் காத்திருந்தான். பறவைகளின் இரைச்சலிலே விரைவிலேயே அந்தக் குண்டின் ஓசை அடங்கிவிட்டது. ஒரு நிமிஷம் வரை மீண்டும் துப்பாக்கிச் சத்தம் கேட்கவில்லை. காலடியோசையும் கேட்கவில்லை. ஒரு வேளை மலை ஜாதியினர் யாராவது ஈயக் குண்டுகள் போட்டுக் கொக்கு சுடுகிறார்களோ? சிறிது தைரியத்தைத் தருவித்துக் கொண்டு ஜீவானந்தம் வாயிலிருந்து பல் குச்சியை எடுத்து விரலில் பற்றியபடி இரண்டு கைகளையும் வாயருகே குவித்து, ''யாரது?'' என்று உரத்த குரலில் கத்தினான்.

எதிரொலிதான் பதில் அளித்தது. கொஞ்ச தூரத்துக்கு அப்பால் 'டக் டக்' என்று தாள லயம் தவறாத ஓசை நகர்ந்து கொண்டிருந்தது. ஜீவானந்தம் அதைக் கூர்ந்து கேட்டான். ஒரு குதிரையின் குளம்படி ஓசை போல் தோன்றியது. குதிரை.... துப்பாக்கி ஒலி... இந்தச் சாந்தி நிறைந்த காட்டில் என்ன நடந்து கொண்டிருக்கிறது? ஜீவானந்தத்துக்கு எதையும் ஊகிக்க முடியவில்லை. ஆனால் மனத்துக்குள் ஒரு சிவப்பு விளக்கு எரியத் தொடங்கி விட்டது. எனவே கொஞ்ச நேரம் தாமதித்து விட்டு, அவன் தெற்கு நோக்கி இறங்கிச் சென்ற குறுக்குக் கொடி வழியில் நடந்தான்.

அந்த வழி சீக்கிரமே முடிவடைந்து, ஒரு விரிந்த வெளியில் கொண்டு போய் விட்டது. கீழே சற்றுச் சரிவில் அங்கங்கே பாறைகள் தடுத்து மடக்கி அனுப்பியும்கூடக் குதூகலித்தபடி, வெய்யிலின் பொன்னொளியில் தங்கமாக மின்னிக் கொண்டு மலையருவி ஒன்று ஓடிக் கொண்டிருந்தது. அந்த அருவிக்கு மத்தியில் அழகான வேலைப்பாட்டோடு ஒரு விநாயகர் கோவில் இருந்தது. அவருக்கு மாய விக்னேசுவரர் என்று பெயர். பக்தி மிகுந்த காட்டிலாகா அதிகாரியால் சிரத்தையோடு வெகு காலத்துக்கு முன் கட்டப்பட்ட கோவில் அது. வெள்ளிக் கிழமை தோறும் கீழே பக்கத்துக் கிராமம் ஒன்றிலிருந்து அர்ச்சகர் ஒருவர் வந்து கோவிலில் பூஜை செய்து விட்டுப் போவார். கோவிலுக்குப் பின்புறமாகப் படிக்கட்டு உண்டு. நீந்தத் தெரியாதவர்களும், அருவி வேகத்துக்குப் பயந்தவர்களும் அப்படித்தான் வரவேண்டும்.

ஜீவானந்தம் அருவியில் யாரோ கடகட வென்று வாயைக் கொப்புளித்து உமிழும் சத்தம் கேட்டு, யோசனையிலிருந்து விடுபட்டு நிமிர்ந்து பார்த்தான். நிஷா குளித்துக் கொண்டிருந்தாள். கன்னங்கரிய கூந்தல் தலைக்கு மேலே கட்டியிருக்க, அவளுடைய பொன்னிறமான முதுகு ஜலத்தில் பட்டுப் பரப்புக்கு மேலே தெரிந்தது. ஜீவானந்தம் வந்ததை அவள் பார்க்கவில்லை. எனவே சுயேச்சையாக நீந்திக் கொண்டிருந்தாள். சதைப் பற்றுள்ள தோள்களும், கடைசல் பிடித்தாற் போன்ற அமைப்பான கரங்களை அவள் வீசி வீசிப் போடும்போது, அவை அசைந்த அழகும் ரம்மியமாக இருந்தன. மலை ஜாதிப் பெண்கள் பெரும்பாலும் கறுப்பாக இருந்தார்கள். நிஷா அவர்கள் மத்தியில் தேவதை போல் அசாதாரணமான ரோஜா நிறத்தோடு விளங்கினாள். உண்மையில் மலைவாசி இளைஞர்களிடையே அவளைப் பற்றிப் பெரிய

# ஈறு உபாதை மற்றும் பற்சிதைவிலிருந்து குணமடைந்ததைப்பற்றிய

# வியக்கத்தக்க செய்திகள்

தாமாகவே விரும்பி எழுதப்பட்ட அத்தாட்சிக் கடிதங்கள்

## போர்ஹான்ஸ்

பற்பசையின் பிரத்தியேகமான மதிப்பை நிரூபிக்கின்றன.

"எனக்கு இப்போது 55 வயதாகிறது.

என்னுடைய எல்லாப் பற்களும் சீராகவே இருக்கின்றன ஆனால் 1943 ல் என்னுடைய இரண்டு பல்வரிசைகளிலும் உள்ள முன்புற மற்றும் பக்கவாட்டிலுமுள்ள பற்கள் அசையத் தொடங்கின. அவை விழுந்துவிடுமென்றே நான் நினைத்தேன் 1943-ல் ஒரு நாள் போர்ஹான்ஸைப்பற்றிய குறிப்புகளைக் கண்டேன். நான் அதை உபயோகிக்கத் தொடங்கினேன். இப்போது போர்ஹான்ஸ் என் பற்களைக் காப்பதுடன் அவற்றை வலுவுள்ளதாகவும் செய்திருக்கிறதென்பதைக் கூற மகிழ்கிறேன்."

---

"நான் எப்பொழுதும் போர்ஹான்ஸையே குறிக்கிறேன்.

பற்கள் அல்லது ஈறுகளிலுள்ள கோளாறுகளுக்காக என்னிடம் சிகிச்சைபெறுபவர்களும் எப்பொழுதும் அதற்காக நன்றி கூறுகிறார்கள். சிகிச்சைபெறும் குழந்தைகளைக்கூட போர்ஹான்ஸ் உபயோகிக்கும்படி நான் சிபார்சு செய்கிறேன். மேலும் என்னுடைய ஆஸ்பத்திரிக்கு வருபவர்களில் பலர் அவர்களின் குழந்தைகளுக்கும் போர்ஹான்ஸையே உபயோகிக்கிறார்கள்"

---

"நான் மிகச் சிறந்த பலனை அடைந்திருக்கிறேன்.

போர்ஹான்ஸ் உபயோகிப்பதால், என் தகப்பனார்மூலம் நான், போர்ஹான்ஸ் ஈறுகளுக்குப் பலனளிக்கக் கூடியது என்று கேட்டிருக்கிறேன். ஆதலால், எனக்கு ஈறுகளில் உபாதை ஏற்பட்டவுடன், என் தந்தையின் புத்திமதிப்படி போர்ஹான்ஸ் உபயோகிக்கத் தொடங்கினேன். அன்றிலிருந்து இன்றுவரை போர்ஹான்ஸையே உபயோகித்து வருகிறேன்."

**போர்ஹான்ஸ்**

ஒரு பல் வைத்தியரால் உருவாக்கப்பட்ட பற்பசை.




GEOFFREY MANNERS & CO., LIMITED

# இலவசம்

## கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்கள்

தேவைக்கு ஏற்பத் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். மன மகிழ்வு பெறலாம்.




ஓ. கே. தயாரிப்புகளின் பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள்.

★ ஓ. கே. வனஸ்பதி ★ ஓ. கே. டபிள் ரிபைண்ட் ஆயில் ★ கோல்டன் ஸலட் ஆயில் ★ ஓ. கே. சந்தன சோப் ★ ஓ. கே. ஓரியண்டல் ரோஸ் சோப் ★ ஓ.கே. க்ரீம் சோப் ★ மியோகே சோப் ★ சோப் சிப்ஸ்

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு ஓ. கே. தயாரிப்புகளிலும் உள்ள பரிசுக் கூப்பன்களைச் சேகரியுங்கள். அவற்றிற்குப் பதிலாக, உங்கள் அருகிலுள்ள ஓ. கே. வியாபாரியிடமிருந்து, நீங்கள் விரும்பும் அளவிலும், வடிவிலும் கவர்ச்சி மிகுந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் பாத்திரங்களைப் பெறுங்கள்.

இந்த விசேஷமான பரிசுத் திட்டம் பற்றிய இதர விவரங்களை அறிய உங்கள் ஓ. கே. வியாபாரியிடமிருந்து, படங்களோடு கூடிய 'போல்டரை' (folder) வாங்கிப் பாருங்கள்.







EP-EAC 7-TAM

தயாரிப்பாளர்கள் :

தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிமிடெட், மதராஸ்-1

லைகல்களும், பேராசை நிறைந்த கனவுகளும் தயாராக இருந்தன.

நீந்தும் போது ஜலத்தில் அவளுடைய சிவந்த மேனி நாகத்தைப் போல் பளபளத்தது. அபாரமான வேகம். அந்த அருவி ஒரு பர்லாங் தூரத்துக்கு அப்பால் இடப்புறமாக மடிந்து எங்கோ கீழே இறங்கி விடுகிறது. எச்சரிக்கையின்றி அடித்து வரும் காட்டு வெள்ளம். அதற்குக்கூடப் பயப்படாமல் அவள் நீந்துகிற அழகைப் பார்த்துக்கொண்டு நின்றான் ஜீவானந்தம். ஓர் அழகிய காட்சியைப் பார்க்கிற உணர்வு மட்டுமே அப்போது அவன் மனத்தில் நின்றதே ஒழிய, வேறு ரஸாபாசங்கள் அல்ல.

நிஷா அவன் நிற்பதைப் பார்த்து விட்டாள்.

''ஜீவா..... தூரப் போ.... தூரப் போ'' என்று சிரித்துக் கொண்டே கூறிக் கையை ஆட்டியபடியே நீந்தினாள்.

பெரியதொரு சிரிக்கும் மலர், ஜலத்தில் மிதந்து கொண்டு வருவது போல் அவனுக்குத் தோன்றியது. ''ஏன் போவணும்?'' என்று குறும்புடன் கேட்டான் அவன்.

''ஐயோ ...தூரப் போன்னுப் போ! உனக்கு வெட்கமாயில்லே. சீச்சீ! எங்க ஜாதியார் பார்த்தா..... உப்ப்... உப்ப்... உன்னைச் சும்மா விடமாட்டாங்க!'' என்று மூச்சு வாங்கியபடியே பேசினாள் நிஷா.

ஜீவானந்தம் கொஞ்ச நேரத்துக்கு முன் தனக்கு ஏற்பட்ட கிலியையும், அதிர்ச்சியையும் மறந்து கல கல வென்று சிரித்தான்.

''உங்கிட்டே எனக்கு என்ன வெட்கம்? உங்கப்பாகிட்டே வேணும்னாலும் போய்ச் சொல்லேன். அவர் ஒண்ணும் என்னைத் தப்பா எடுத்துக்க மாட்டாரு.''

நிஷாவின் ரோஜா முகம் குங்குமமாய்ச் சிவந்தது. ''ஒனக்கு அம்புட்டுத் தைரியமா விடுச்சா, நீ மறைவாப் போறியா இல்லையா?''

''ஊஹூம், மாட்டேன்.''

''அப்படியா?'' என்று கேட்டபடி கோயில் ஓரத்தில் குவிந்திருந்த கற்களின் அருகே நீந்தியவாறே போனாள். நீருக்குள் நின்றபடியே ஒரு சிறிய கல்லே எட்டி எடுக்க அவள் முயன்ற போது, தந்தம் போன்ற வெண்மையான உறுதியான அவளது வலது புறத்தின் மீது முத்து முத்தாகத் தேங்கியிருந்த நீர்த் திவலைகள் ஜொலித்தன.

'விர்'ரென்று தன்னை நோக்கிப் பறந்துவந்த கல்லைப் பிடித்துக் கொண்டான் ஜீவானந்தம்.

''இப்ப இதை அப்படியே உன் பேரிலே போடட்டுமா?'' என்று வேடிக்கையாகக் கையை ஓங்கிப் பயமுறுத்தினான் ஜீவானந்தம்.

''எங்கே போடேன், பார்க்கலாம்!'' என்று நிஷா நீருக்குள் மூழ்கி விட்டாள்.

ஜீவானந்தம் கல்லைக் கீழே போட்டு விட்டு ஒரு பாறைக்குப் பின்னால் போய் உட்கார்ந்து கொண்டான்.

சுடிக்கென்று தலையை நீட்டிப் பார்த்த நிஷா, அவனைக் காணாததால் சுற்றுமுற்றும் பார்த்தாள். ''ஜீவா..... ஜீவா.....'' என்று குரல் கொடுத்தாள்.

பல் குச்சியைப் பிளந்து நாக்கை வழித்துக் கொண்டிருந்த ஜீவானந்தம், ''இதோ பாறைக்குப் பின்னாலிருக்கிறேன், நிஷா! சீக்கிரம் ஆகட்டும். நான் குளிக்கணும்'' என்றான்.

''ஐயோ, நல்ல பிள்ளை! அதெல்லாம் முடியாது. சீக்கிரம் நான் கரையேற மாட்டேன். அங்கேயே காத்துக்கிணு இரு.''

''ஓ. என்ன ஏய்க்கிறே? நானும் சட்டையைக் கழற்றி விட்டு வந்து குதிச்சுடுவேன்'' என்று பயமுறுத்தினான்.

''வேணாம்.... வேணாம்... நான் வந்துடறேன்'' என்று பதிலளித்தாள் நிஷா.

பல் குச்சியை எறிந்து விட்டு, பாறை மேல் நன்றாகச் சாய்ந்தவாறு இரு கால்களையும் நீட்டிக் கொண்டு உட்கார்ந்தான். இரண்டு பூட்ஸ் கால்களும் மெதுவாக ஆடின. சூரிய உஷ்ணம் உடம்பின் மீது பட்டுக் குதுகுதுப்பேற்றியது. இன்னும் சரிவர உஷ்ணம் பாயாத இடங்களிலிருந்து வந்த தண்மையான காற்று ஒரு யுவதியின் மூச்சைப் போல் முகத்தில் பட்டு



தழுவியது. ஜீவானந்தம் கண்களை மூடிக் கொண்டான். அந்த நேரத்தில் வெள்ளி வளையல்களும், மெட்டிகளும் கிலுகிலுக்க நிஷா வருவது தெரிந்தது. ஆயினும் அவன் கண்களைத் திறக்கவில்லை. அந்த இனிய ஓசை அவன் எதிரே வந்து தாமதித்தது.

''கொழந்தை தூங்குதோ...? அப்ப அதன் தலையிலே ஒரு பாறாங்கல்லைத் தூக்கிப் போட்டாத்தான் நல்லது!'' என்று கொஞ்சலான குரலில் கூறினாள் நிஷா. ஜீவானந்தம் சிரித்தபடியே கண்களைத் திறந்தான். குளித்து விட்டு வந்ததால் பளிச்சென்று பிரகாசித்த அவள் ரோஜா முகத்தில், சிவப்பான உதடுகளிடையே மலர்ந்த ஒளி நிறைந்த புன்னகையில், கறைகளே இன்றிப் பளிங்கு மணிபோல்

கடாக்ஷிய கண்களில் ஒரு தேவ மங்கையின் சாயல் இருந்தது. ஜீவானந்தம் அவளைக் கண்கொட்டாமல் பார்த்தான்.

''ஐய்ய, என்ன ஜீவா அப்படிப் பார்க்கிறே?'' என்றாள் நிஷா.

''இன்னிக்கு நீ ரொம்ப அழகாயிருக்கே நிஷா!'' என்றான் மெய்ம்மறந்தபடியே.

அதற்குப் பிரதியாக வெகுளி போல் கலகலவென்று சிரித்தாள் அவள். இளமை நிறைந்த அவளது மேனியில், மலிவான துணியில் தைக்கப்பட்ட 'கமீஸ்' போன்ற மலை ஜாதி உடை குலித்த சுகத்தோடு தென்பட்டது. பூரணமான அவளுடைய யௌவன அழகு ஜீவானந்தத்தின் மனத்தில் ஓர் அபூர்வமான சாந்தியை ஏற்படுத்தியது. சந்தனக் கால்களைத் தழுவியிருந்த வெள்ளி மெட்டிகளைப் பார்த்தவாறே அவன் பேசப் பிரியப்படாது சும்மா இருந்தான். நிஷாவுக்கும் என்ன தோன்றிற்றோ, அவள் மௌனமாக இருந்தாள். சிறிது நேரம் கழித்து, விடியற்காலையில் தன்னை வரவேற்ற அந்தத் துப்பாக்கி ஓசை அவன் ஞாபகத்துக்கு வந்தது.

''நிஷா! இன்னிக்குக் காலையிலே உங்களவங்க யாராவது வேட்டையாடப் போனாங்களா?'' என்று கேட்டான் ஜீவானந்தம்.

''எங்களவங்களா! ஒண்ணும் கிடையாதே ஜீவா! ஏன்?''

''அப்போ காலையிலேயே யாராவது வேட்டைக்காரங்க வந்துட்டாங்களா? கொஞ்ச நேரத்துக்கு முன்னாடி, ஒரு துப்பாக்கி வெடிச்சுதே, நீ கேட்டிருப்பியே!''

நிஷாவின் முகம் திடீரென்று மலர்ந்தது.

''ஓ! அதா, நான்கூடக் கேட்டேன். நம்ம காட்டுக்குப் புதுசா அதிகாரி வந்திருக்கார். செகப்பா உயரமா இருக்காரு. வெள்ளையாப் பால் போல ஒரு குதிரைகூட வெச்சிக்கினு இருக்காரே. காலையிலே நான் இங்கே வர்றப்போ பார்த்தேன். அவரு பெண்டாட்டி கூட வந்து காட்டுப் பங்களாவிலே தங்கியிருக்காங்களாம்.''

காட்டிலாகா அதிகாரி, இந்தக் காடுகளைப் பொறுத்தவரையில் சர்வ சக்தி வாய்ந்த ஓர் எஜமான். ஒரு சின்னஞ்சிறிய தவறு ஏற்பட்டால்கூட மற்றக் காடுகளில் மலைவாசிகள் ஈவு இரக்கம் பாராமல் அதிகாரியை ஒழித்து விடுவார்கள். இந்த மலைவாசிகளுக்குச் சட்டத்தின் விளைவுகளைக் குறித்துத் தெரியும். அதை மிக மிகக் கசப்பான முறையில் அனுபவித்து விட்டவர்கள். எனவே அந்தப் பதவியை மதித்து உரிய மரியாதையை அதற்குச் செலுத்தினார்கள். முன்பு இருந்த மனிதர் நல்லவர். வயதானவர். ஜீவானந்தத்தை ஒரு நண்பனைப் போல் பாவித்தார். அவனுடைய அந்தரங்கங்களையும் பழைய நாட்களையும் அறிய முயற்சி செய்யவில்லை. 'வந்திருக்கும் இந்தப் புதியவன் யாரோ? எப்படிப்பட்டவனோ?' ஜீவானந்தம் இரண்டு கைகளையும் கால் சட்டைப் பைக்குள் விட்டு, நிர்மலமான நீலவானை நோக்கிப் பெருமூச்சு விட்டான்.

நிஷா வலக் கையை அவன் சட்டைப் பைக்குள்ளிருந்து எடுத்துத் தன் குளிர்ந்த விரல்களால் பற்றியவாறு, ''என்ன யோசிக்கிறே, ஜீவா?'' என்றாள்.

''ஒண்ணுமில்லே நிஷா..... சரி! நீ பொறப்படு. நாம சாயங்காலம் பார்க்கலாம்'' என்று சட்டையைக் கழற்றத்தொடங்கினான். இரு பெரிய கருவிழிகளும் கொஞ்ச அவனைப் பார்த்துவிட்டு, நிஷா மலைப் பாதையை நோக்கித் திரும்பினாள்.

அந்தப் பிரிட்டிஷ்காரக் கிழவர் வீட்டுக்குள் இல்லை. வீட்டில் உதவிக்காக வைத்திருந்த மலை ஜாதி இளைஞனைக் கேட்டபோது அவருடைய நிலத்தின் பக்கமாகப் போயிருப்பதாகச் சொன்னான். அவருக்கு அதிக நிலம் இல்லை. கொஞ்ச நிலத்தை வைத்துக்கொண்டு நவீன முறையில் சாகுபடி செய்து வாழ்க்கை வசதிக்கு மேலான பொருள் சம்பாதித்து வந்தார் அவர். ஓய்வு நேரத்தின் பெரும் பகுதியை மலை ஜாதிக் குழந்தைகளுக்குக் கல்வி கற்பிப்பதிலும், நாகரிகத்தைப் பற்றிச் சொல்லிக் கொடுப்பதிலும் கழித்து வந்தார்.

பத்தடிக்கு அப்பால் அந்தப் பிரிட்டிஷ்காரக் கிழவர் வில்லியம் ஜான்ஸன் நின்றுகொண்டிருந்த அதிசயக் காட்சியைக் கண்டான் ஜீவானந்தம். இரண்டு உழவு மாடுகளைப் பூட்டிக்கொண்டு நவீனக் கலப்பை ஒன்றினால், தீய்த்துக் கொண்டிருக்கிற இந்த வெய்யில் நேரத்தில், அவரே உழுது கொண்டிருந்தார். பெரிய மல்யுத்த வீரனைப் போன்ற திடகாத்திரமான தேகம். ஆறு அடி உயரம். விரிந்து பரந்த மார்பு. தலை முடி, மீசை, தாடி எல்லாம் வெள்ளை வெளேரென்று நரைத்து விட்டது. அறுபத்தைந்து வயது. இந்தக் காலத்திலும் அவர் உடல் ஓய்ந்துபோகவில்லை. சுற்றிலும் நாலைந்து மலைவாசிகள் அதை வேடிக்கை பார்த்துக்கொண்டு நின்றிருந்தனர்.

''ஹலோ, குட்மார்னிங் ஸார்!'' என்று ஆங்கிலத்தில் ஆரம்பித்தான் ஜீவானந்தம்.

தம்முடைய வேலையைத் தொடர்ந்தபடியே ''குட் மார்னிங்... குட்மார்னிங், ஜீவானந்தம்!'' கண்களைச் சுருக்கியபடியே பதில் அளித்தார்.

''என்ன ஸார்! இந்த வெயில்லே நீங்களே நிலத்தில் இறங்கிட்டீங்க? யாராவது நாலு மலைஜாதிக்காரர்களிடத்திலே சொல்லியிருந்தால் சந்தோஷத்தோடு வந்து செய்திருப்பார்களே?'' என்று ஆங்கிலத்தில் அவரிடம் சொன்னான்.

''எக்ஸ்க்யூஸ்மீ....ஜீவா.... என்னிடத்திலும் தமிழிலேயே பேசுங்கள். உங்கள் தாய்மொழி எனக்கு நல்லாத் தெரிஞ்சிருக்கிறபோது, நீங்க ஆங்கிலத்திலே பேசினா உங்க மொழிக்கு நீங்க மரியாதை செய்யறதா எனக்குத் தோணலே.'' ஜான்ஸன் இந்த வார்த்தைகளைப் படபடப்பின்றி நிதானமாகச் சொன்னார். அவர் மிகவும் கண்டிப்புக்காரர். தவறுகள் எந்தப் பக்கத்தில் தெரிந்த போதிலும் அதற்காக மிகவும் வருந்துவார். இருபது வருஷ காலமாக அவர் தமிழ் நாட்டில் வசித்து வந்தவர். தமிழைப் பிழையின்றிப் பேச அவருக்குத் தெரியும். சாதாரணமான கொச்சைத் தமிழில், பேச்சு வழக்கில் இருக்கும் தமிழில் அவரால் நன்றாகப் பேச முடியும்.

''மன்னிக்கணும், சார்! ரொம்ப வெட்கப்படறேன்'' என்றான் ஜீவானந்தம்.

''நோ...நோ... மன்னிக்கிறதிலே ஒண்ணுமில்லே ஜீவா. நீங்க உணர்ந்துட்டா சரிதான். என்ன கேட்டீங்க? இந்த வெய்யிலிலே ஏன்

# மங்கலாயிருப்பதை பளபளப்பாக்க

# கார்டினல் பாலிஷ்

உங்கள் வீட்டுத்தரைகள் மங்கலாகவும் அசுத்தமாகவும் இருக்கின்றனவா? அவற்றிற்கு ரெட் கார்டினல் பாலிஷ் மூலம் உயிர் கொடுத்து ஒளி பெறச் செய்யுங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் உடனே தரைகளுக்கு செந்நிற ஒளி கொடுத்து பிரகாசிக்கச் செய்கிறது. சாதாரணமினுமினுப்பற்ற கல் தரையிலும் சிமிட்டித் தரையிலும் பரீட்சை செய்து பாருங்கள். ரெட் கார்டினல் பாலிஷ் சீக்கிரத்திலேயே மங்கலான தரைகளைப் புதியதோர் செந்நிற ஒளியுடன் பிரகாசிக்கும்படியாகச் செய்துவிடும்.

உங்கள் வீட்டுத்தரைகள் உயிருடன் கூடிய ஒளிபெற இன்றே ரெட் கார்டினல் பாலிஷை உபயோவியுங்கள்.

அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் ஸ்தாபிக்கப்பட்டது)




CP 1

JWTCP 5087 A


பவுன் சூரியன்
மார்க்
புகையிலை
குணமும்
மணமும்
கொண்டது!
M/S N. ஆறுமுகம் பிள்ளை
காரைக்குடி
BS

கஷ்டப்படறேன்னுதானே! நீங்க பாருங்க, உழைப்பிலேதான் மனிதனோட பெருமையெல்லாம் இருக்கு. நீங்க பாருங்க சின்னப் பிள்ளை. இப்படிக் கேட்கலாமா? லட்சக்கணக்கான வருஷங்களுக்கு முன்னே இந்த உலகம் வெறும் மண்ணும் கல்லுமா யிருந்தது. மனிதனின் வேர்வைதானே இன்னைக்கு நாம்ப பார்க்கிற மெஷின், வீடு, நாகரிகம் எல்லாம். மனிதன் வயசை நெனச்சி வெய்யிலைப் பார்த்து உழைப்புக்கு அஞ்சி யிருந்தா இதெல்லாம் நீங்க பார்க்க முடியுமா?'' என்று கேட்டு விட்டு ஏரை நிறுத்தினார் வில்லியம் ஜான்ஸன். கால் சட்டைப்பைக்குள் கையை விட்டுக் கைக் குட்டையை எடுத்தார். சிவந்து விட்டிருந்த முகத்தில் வியர்வை ஆறுகக் கொட்டிக் கொண்டிருந்தது. முகத்தை நன்றுகத் துடைத்தார். மேல் சட்டைப் பையிலிருந்து 'பைப்' (புகைக் குழாய்)பை எடுத்து அதில் புகையிலைத் தூளை நிரப்பினார். கால் சட்டையில் இரண்டு பக்கமும் தடவிப் பார்த்தார். தீப்பெட்டி இல்லை. ஜீவானந்தத்தின் பக்கம் நிமிர்ந்தார்.

''தீப்பெட்டி இருக்குதா?''

''ஓ. இருக்கே!'' என்று ஜீவானந்தம் தீப்பெட்டியை எடுத்துக் கொண்டு அவரை நெருங்கப் போனான்.

''நோ...நோ.. அங்கே யிருந்தே எறியுங்க!'' ஜீவானந்தம் தீப்பெட்டியை அவரிடம் வீசி எறிந்த போது ஒரு வாலிபனைப் போல் குஷியாக அதைப் பிடித்தார். பைப்பைப் பற்களால் கடித்துக் கொண்டு மீண்டும் ஏர்க்காலைப் பற்றினார். நிலம் அநேகமாக உழுது முடிந்து விட்டது. இன்னும் சில சுற்றுக்கள் வந்தால் வேலை பூர்த்தியாகி விடும்.

''எஸ், மிஸ்டர் ஜீவா! என்ன விசேஷம்?'' என்று தம் வேலையைத் தொடர்ந்தவாறே கீழே குனிந்தபடி ஜான்ஸன் கேட்டார்.

''ஒண்ணுமில்லே, சார்! புதுசா யாரோ காட்டிலாகா அதிகாரி வந்திருக்கிறாரும், உங்களுக்குத் தெரியுமா?''

''எஸ், கொஞ்ச நேரத்துக்கு முன்னுடி அவரைச் சந்திச்சேன். அவரைப் பற்றி என்ன?'' என்றவர் சட்டென்று கவனம் வந்தது போல, ''ஓ. அந்த விஷயத்தைப் பற்றியே நீங்க ரொம்பக் கவலைப்படறீங்க மிஸ்டர் ஜீவா. எனக்கு அந்த ஆபீசராலே பிரமாதமான கெடுதல் ஏதும் வரும்னு தெரியல்லே. அநாவசியமான அதிகார மிடுக்கு இருக்கு.— அதுகூட ஒரு பெரிய பலவீனம். நீங்க கவலைப்படாதீங்க ஜீவா. எங்க தேசத்திலும், இந்தத் தேசத்திலும் நான் ரொம்ப 'அவுட்லாஸை'-சட்டத்துக்குத் தப்பியோடியவர்களை— பார்த்திருக்கிறேன்.''

மிஸ்டர் ஜான்ஸன் உழுவை முடித்து விட்டு, நிலத்திலிருந்து ஏறி வந்தார். அந்த இரும்புக் கலப்பையையும் மாடுகளின் கயிற்றையும் சேர்த்து இடது கையால் அநாயாசமாகப் பற்றியபடியே நடந்து வந்து, ஜீவானந்தத்தின் தோளை அன்புணர்ச்சியோடு தட்டிக் கொடுத்தார். உழைப்பும் வெய்யிலும் அந்த வயதான அன்னிய முகத்தில் தீட்டியிருந்த செக்கர் சிவப்பு பார்க்கப் பெருமிதமாக இருந்தது.

சின் வண்டுகளின் ரீங்காரமும், இருவருடைய பூட்ஸ் ஓசையும், மௌனம் நிறைந்த அக்கானகத்தில் ஒரு சோகப் பாட்டின் தாளம் போல் கேட்டன. ஜான்ஸனுடைய வீடு நெருங்கி விட்டது. காட்டு விலங்குகளின் தொல்லைகளுக்குத் தூரமாக, பிரிட்டிஷ் பாணியில் அந்த வீடு கட்டப்பட்டிருந்தது. கச்சிதமானது. கவர்ச்சியுள்ள வேலைப்பாடு. ஜீவானந்தம் அவர் பக்கம் திரும்பி விடைபெற முயன்றான்.

''ஜீவா, வந்து டீ சாப்பிட்டு விட்டுப் போங்கோ!'' என்று அழைத்தார். அந்த அழைப்பைப் புறக்கணிக்க முடியாவிட்டாலும் அப்போதிருந்த மன நிலையில் அவனால் ஏற்கவும் முடியவில்லை.

''தாங்க் யூ சார். நான் இப்பத்தான் டீ போட்டுக் குடிச்சுட்டு வந்தேன். நான்



வரட்டுமா?'' என்று கூறி விடை பெற்றுக் கைகூப்பினான் ஜீவானந்தம்.

மிஸ்டர் வில்லியம் ஜான்ஸன் தென் இங்கிலாந்துப் பகுதியில் ஒரு மதிக்கத்தக்க குடும்பத்தில் பிறந்தவர். சொத்து சுகம் இல்லாவிட்டாலும் அவருடைய தாய் தந்தையர் அவரை ஓர் உண்மையான கிறிஸ்தவராக வளர்த்தார்கள். இருபத்தைந்தாவது வயதில் இந்தியாவில் ஒரு ராணுவ லெப்டினெண்டாகப் பணியாற்றி வந்த தம் சித்தப்பாவுடைய அழைப்பின் பேரில் இந்தியாவுக்கு வந்தார். பம்பாய்,

உத்தரப்பிரதேசம், பகுதிகளில் நீண்ட காலம் சுற்றிக் கொண்டிருந்து விட்டு, தாம் மிகவும் அருமையாக நேசித்த தம் மனைவியுடனும் தம் ஒரே ஒரு பையனுடனும் இந்த மலைப் பிரதேசத்துக்கு அவர் வந்தார். ஐந்து வருஷங்களுக்கெல்லாம் மலேரியாக் காய்ச்சலில் அவருடைய மகன் இறந்து விட்டான். அது நடந்து இரண்டு வருஷங்களில் அவர் மனைவியை ஒரு புலி அறைந்து கொன்று விட்டது. அவர் மீண்டும் தாய் நாடு செல்லவில்லை. அவர் இங்கேயே தங்கி விருக்கிறார். தாய் நாட்டில் பெற்றோர் இறந்து விட்டனர். எங்கோ ஒன்றிரண்டாக உறவினர் சிந்திச் சிதறி விட்டனர். அங்கே போக அவருக்குப் பிடிக்கவில்லை.

ஜீவானந்தம் அவரைப் பற்றிய யோசனைகளிலிருந்து மெல்ல விடுபட்டபோது, வெகு அருகில் குதிரையின் குளம்படியோசை கேட்டது. வேகமாக அவன் திரும்பிப் பார்ப்பதற்குள், ஒரு துப்பாக்கியின் பட்—கட்டைப் பகுதி—அவன் தோள் மேல் பட்டு அவனைப் புதர் ஓரத்துக்கு உந்தித் தள்ளியது.

அவன் ஆத்திரத்தோடு நிமிர்ந்து பார்த்தான். சாக்லெட் வர்ணத்தில் வேட்டைக்காரர்கள் அணிவது போன்ற ஒரு கோட்டும் தொப்பியும் அணிந்து கொண்டு, கடுகடுப்பான பார்வையும் ஏளனமான புன்னகையுமாய் ஒரு சிவந்த மனிதன் குதிரையை இழுத்துப் பிடித்தான். அவனுடைய இடது கையில் இருந்த வேட்டைத் துப்பாக்கி வெய்யிலில் பளபள வென்று மின்னியது. பருவ மதர்ப்போடு அந்த வெள்ளைக் குதிரை வாலை விசிறிக் கொண்டு நுறுநுறுத்தது.

''என்ன மேன்! குதிரைச் சத்தம் கேட்கலையா, ஓரமாப் போவறதுதானே?'' என்று மிடுக்காக விசாரித்தான் அந்த மனிதன்.

ஜீவானந்தத்தின் பற்கள் நெறிந்தன. ஆனால் எல்லோரும் பேசிக் கொண்டதிலிருந்து இவன்தான் அந்தப் புதிய காட்டிலாகா அதிகாரி என்பது நன்கு தெரிந்தது. எடுத்த எடுப்பிலேயே அவனோடு விரோதம் பாராட்ட அவன் விரும்பவில்லை.

''பாதசாரிக்கு இதுதான் வழி! நீங்க இஷ்டப்பட்டிருந்தால் அப்படியே கூடப் போயிருக்கலாம்'' என்று அடக்கமாகப் பதிலளித்தான் ஜீவானந்தம்.

''அப்படியா?.......'' என்று அவனை ஏற இறங்கப் பார்த்தபடியே மெல்ல விஸிலடிக்கத் தொடங்கினான் அவன். அவனுக்கு என்ன தோன்றிற்றோ, பிறகு ஜீவானந்தத்துடன் மரியாதையாகவே பேசத் தொடங்கினான்.

''நீங்க யாரு? காட்டிலே எத்தனை நாட்களா தங்கியிருக்கீங்க?''

ஜீவானந்தம் அவன் ஒரு படி இறங்கி வருவதைக் கண்டதும் தான் விட்டுக் கொடுக்காமல் திருப்பிக் கேட்டான்.

''நான் இங்கே ரெண்டு மூணு மாசமா காட்டிலே இருக்கிறேன். நேற்றைய வரைக்கும் உங்களைப் பார்த்ததில்லே. நீங்க யாரு என்று நான் தெரிஞ்சுக்கலாமா?''

அந்த மனிதனின் முகத்தில் ஒரு கடுமை கலந்த புன்னகை பரவியது. ''நான் இன்னிக்குக் காலையிலேதான் வேலைக்கு வந்தேன். காட்டிலாகா அதிகாரி ஐ. வி. தியாகராஜ்'' என்று அறிமுகத்துக்குக் கையை நீட்டுவது போல அவன், குதிரையின் கடிவாளத்தை இடது கைக்கு மாற்றிக் கொண்டு வலது கையை நீட்டினான்.

''நான் ஜீவானந்தம். மிஸ்டர் வில்லியம் ஜான்ஸனின் நிலத்தைப் பார்த்துக்கறேன். அவருடைய சிறிய பண்ணையையும் கவனிக்கறேன்'' என்று தன் முன் நீட்டப்பட்ட கரத்தைப் பற்றிக் குலுக்கினான் ஜீவானந்தம்.

''நீங்க விமானப் படையிலே இருந்திருக்கீங்களோ? நீங்க தோளை மேலும் கீழுமா அசைச்சு அசைச்சு நடக்கிறதைப் பார்த்துத் தான் கேட்கிறேன்'' என்றான் தியாகராஜன்.

ஜீவானந்தம் திகைத்துப் போனான். ''சரி, நான் வரட்டுமா? அப்புறமா சந்திப்போம்'' என்று கையை ஆட்டி விடை பெற்றுக் கொண்டு அவன் புறப்பட்டு விட்டான். ஒரு சரிவில் இறங்கிக் கொண்டிருந்த அவனுடைய உருவத்தையே உற்றுப் பார்த்தபடி நின்றான் ஜீவானந்தம். அவனால் தியாகராஜனைச் சட்டென்று புரிந்து கொள்ள முடியவில்லை. அவனுடைய கடைசிக் கேள்வி சாதாரணமாகத்தான் கேட்கப் பட்டதா, அன்றி எந்த விசேஷ அர்த்தத்தோடாவது கேட்கப்பட்டதா என்பது தெரியவில்லை. ஜீவானந்தம் வெறுப்புடன் தன் கண் முன்னால் சிறுகச் சிறுக மறைந்து போகும் அந்த வெள்ளைக் குதிரையைப் பார்த்துக்கொண்டிருந்து விட்டுத் தன் குடிசையை நோக்கி நடந்தான்.

சூரியன் அஸ்தமித்துவிட்டான். சிவப்புக் கடல் போல் அவன் அஸ்தமனமான வட்டத்துக்குச் சரியாகக் கிரண வெள்ளம் பரவிக் கிடந்தது. ஜீவானந்தம் வருகிற போதே பூட்டைக் கழற்றி ஒரு பாறை மறைவில் வைத்து விட்டு, விக்னேசுவரர் கோவிலின் பின்புற வழியாக வந்தான். எதிரில் நீல நிறம் கொண்டது போல், வெள்ளி நுரைகள் சீறிப் பொங்க, மலையருவி ஓடிக் கொண்டிருந்தது. அருவியருகில் ஒரு சாய்வு நாற்காலி போல் அமைந்திருந்த ஒரு பாறையின் மீது போய்ப் படுத்துக்கொண்டான் ஜீவானந்தம். முழங்கால் வரை கால் சட்டையை மடித்து விட்டு, குதுகுதுப்பும் வேகமும் நிறைந்த அருவியில் இரண்டு கால்களையும் விட்டுக் கொண்டான். ஜலம் மெல்ல உந்தித் தள்ளுவது போல் அவன் கால்களின் கனத்தைக் குறைத்து விட்டு ஓடிக் கொண்டே இருந்தது. வீடு திரும்பும் பறவைகள் வானத்தில் விமானங்களின் வரிசை போன்று சென்றன. வானம் ஊதா நிறம் பெற்று வெள்ளித் திலகம் போல் ஓர் ஒற்றை நட்சத்திரம் சுடர் வீசியது.

அதற்கு மேல் அவனால் பார்க்க முடியவில்லை. இரண்டு தண்மையான கரங்கள் அவன் கண்களைப் பொத்தின. நிஷாதான்.

''என்ன நிஷா! இதுக்கு மேலே நான் பார்க்கக் கூடாதா?'' என்று அவன் கைகளை விலக்காமலேயே கேட்டான்.

''எவ்வளவு நேரமா நான் பின்னாலேயே நிக்கிறது! நீ திரும்பிப் பார்த்தால்தானே ஜீவா?'' என்று அலுத்தபடியே அவன் கண்களிலிருந்து கரத்தை எடுத்தாள் நிஷா. மெய்யாகத்தான் கோபித்துக் கொண்டிருளோ என்று படுத்தவாறே தலையைப் பின்னுக்குச் சாய்த்து அவளைப் பார்த்தான். உதட்டில் மெல்லிய புன்னகை தெளிந்தது. ஜீவானந்தம்

---



---

எழுந்து விக்னேசுவரர் கோவில் கல்மேடைக் குத் தாவினான்.

சாட்டை போன்ற இரு நீண்ட பின் னல்கள் மார்பின் மீது துவள, நிஷா அவன் அருகில் வந்து உட்கார்ந்தாள். இன்றைக்கு என்னவோ அவளுடைய முகத்தில் புன்னகை யின் பிரகாசம் மங்கவேயில்லை. இருவரும் வந்து அமர்ந்த போது சந்திரோதயம் ஆகி விட்டது. சந்திரிகையின் இலேசான கிர ணங்கள் முத்துத் தாள் பூசினாற் போல, நிஷா வின் முகத்தில் பட்டன. அவளுடைய மௌன வத்தின் வடிவழகு, அந்நேரத்தில் மெல்லப் பாடும் அருவியும், புராதனமான ஆலயமும் இருக்கும் சூழ்நிலையில் ஜீவானந்தத்துக்குக் கம்பீரமான உள்ளக் கிளர்ச்சியைக் கொடுத் தது. அவளோடு பக்கத்தில் அமர்ந்து பேசவோ எந்தத் தாழ்ந்த வகையிலும் அவளுடைய நட்பை அர்த்தப்படுத்திக் கொள்ளவோ அவன் விரும்பவில்லை. கடந்த இரண்டு வருஷ கால மாக அவன் மனத்தில் ஆறாத் தீயாக வருத்தி வரும் வேதனை ஒன்று உண்டு. அதன் வேலி களைத் தாண்டி ஜீவானந்தம் வரமாட்டான். எனவே சற்று நகர்ந்து உட்கார்ந்தான். அதை நிஷா கவனிக்கவில்லை.

''ஜீவா, ஜீவா! உன்கிட்டே இப்போது ஒண்ணு சொல்லணும்னுதான் இங்கே வந் தேன்! அது என்னவா இருக்கும் சொல்லு?'' என்று குழந்தை புதிர் போடுவதுபோலக் கேட் டாள் நிஷா. அவள் குழந்தையேதான். ஜீவானந்தத்துக்கு இதைக் கேட்டதும் சிரிக்கத் தோன்றியது. ஆனால் அவள் மனம் புண் படக் கூடாதே என்பதற்காக, ''எனக்கு எப்படித் தெரியும் நிஷா?'' என்றான்.

''சரி, அது அப்புறமா சொல்றேன். நீ எங்கே மத்தியானம் முழுதும் குடிசையிலேயே இல்லே. நான் நாலைஞ்சு தடவை வந்து வந்து உன்னைப் பார்த்துவிட்டுப் போனேன்!''

''நான் தொரைகிட்டே போயிருந்தேன். சீக்கிரம் வந்துட்டேனே, நீ எப்பத்தேடினே?''

''உச்சி வேளைக்கு.''

''அப்ப சரிதான். நான் அங்கே இருந் தேன். சரி, என்ன விஷயம் சொல்லு!''

''அப்பா உன்னைக் கூப்பிட்டுக்கினு வரச் சொன்னாரு. அதுக்காக வந்து தேடினேன்.''

''அப்பா கூப்பிட்டாரா? எதுக்காக?''

''நாளைக்குக் கிழக்குக் காட்டுக்கு வேட்டை யாடப் போகணுமாம். அதுதான் விஷயம்.''

வேட்டை என்று கேள்விப்பட்டதும் ஜீவா னந்தம் சிறிது உற்சாகமடைந்தான். அதில் ஒன்றில்தான் மனத் தொல்லைகளெல்லாம் மறந்து போய் விடுகின்றன. வேட்டையாடப் படும் மிருகத்துக்கும் மனிதனுக்கும் இருக்கும் விறுவிறுப்பான உயிர்ப் போட்டியில் முழுக்க ஐக்கியமாகும்போது அவனும் அதுவும் மட் டும் நிற்கிறார்கள். ஜீவானந்தத்துக்கு அதனா லேயே வேட்டை மிகவும் பிடித்தது.

''நாளைக்கா?''

''ஆமாம், ஜீவா! நான்கூட வரட்டுமா? எனக்கும் துப்பாக்கி சுடக் கத்துக்குடு'' என்று மலைவாசி மக்களுக்கே உரிய துணிச்ச லோடு கேட்டாள் நிஷா.

''ஏன் உங்கப்பாவையே கேளேன்!''

''கேட்டாக்க அதெல்லாம் உனக்கு வேண் டியதில்லேன்னு சொல்றாரே ஜீவா!''

''அம்மாடி, அந்தப் பழி எனக்கு வேண் டாம். அப்புறமா இந்தக் காட்டிலே பார்க் கிறதுக்கு ஒரு பட்சிகூட நிக்காது. நீ விளை யாட்டுத்தனமா என்ன செய்வியோன்னு தெரி யாமலேயே சுட்டுத் தீர்த்துடுவே!''

''அப்ப.....'' என்று இழுத்த நிஷாவின் முகம் குன்றி வருத்தத்தினால் வாடியது. ''நான் அவ்வளவு கொடூரமானவளா?''

ஜீவானந்தம் வேடிக்கையாக, ''இல்லையா, பின்னே?'' என்றான்.

நிஷாவுக்கு ரோசம் வந்தது.''கொடூரமான வனோடே எதுக்குப் பேசணும்? ஒண்ணும் இனிமேல் பேச வேண்டியதில்லே'' என்று கோபமாகக் கூறியபடியே எழுந்து இரண்டடி எடுத்து வைத்து விட்டாள். ஊதிவிட்ட நெருப்புப் போல் முகம் கன்றிச் சிவந்திருந்தது.

ஜீவானந்தம் அவசரத் தோடு எழுந்து அவளது வலது கையைப் பிடித்து நிறுத்தப் போனான். அவள் நின்றிருந்த இடம் அருவிக்குச் சிறிதே தூரம் தள்ளியிருந்த சின் னக் கல் மேடை.



அவன் பிடித்து இழுத்த வேகத்தில் அவள் தடுமாறிக் கொண்டு அருவியில் விழ இருந்தாள். சட்டென்று தியாக ராஜன் அங்கே தோன்றி அவள் மேனியைத் தாங்கிப் பிடித்துக் கொண் டான். அவன் எப்போது அங்கே வந்து சேர்ந்தான் என்பது தெரியவில்லை. ஆனால் ஜீவானந்தத்தின் முகத்தில் ஒரு சுருக்கம் தோன்றியது. நிஷாவை அவன் பற்றி யிருந்த பாவனையும் கண்களில் தெரிந்த உணர்ச்சியும், ஒரு சந்தர்ப்பத்தைப் பயன் படுத்திக் கொள்கிறவன் போல்தான் தெரி வித்தன. நிஷா ஆச்சரியத்தால் கொஞ்ச நேரம் சும்மா இருந்து விட்டாள். பின்னர் அலட்சியமாக அவனுடைய இரண்டு கை களையும் தட்டி விட்டு, ''ப்பூ! விழுந்திருந் தாக்கூட நான் ஒண்ணும் முழுகிப் போயிருக்க மாட்டேன்! எனக்கு நீச்சல் தெரியும்'' என்று பளிச்சென்று பதில் சொன்னாள்.

"ஓ, அப்படியா!" என்று அசடு வழியச் சிரித்தான் தியாகராஜன்.

இன்னும் தன் பக்கமே வராமல் தியாகராஜன் அவளையே பார்த்தபடி நின்று கொண்டிருப்பதையும், இச்சமயத்தில் தான் மௌனம் சாதித்துக் கொண்டு சும்மா இருப்பதையும் சகிக்காமல் ஜீவானந்தம் அவனோடு பேச்சை ஆரம்பித்தான்.

"இந்தச் சமயத்திலே வந்து உதவினதற்கு ரொம்ப நன்றி!"

தியாகராஜன் அவன் பக்கம் மிடுக்கோடு திரும்பி, "நன்றி ஒன்றும் அவசியமில்லை மிஸ்டர்..... ஆம், உங்கள் பெயர் என்ன சொன்னீர்கள்?" என்றான்.

"ஜீவானந்தம்!" என்று உணர்ச்சியற்ற குரலில் சிறிது தாமதமாகச் சொன்னான்.

"ஆம், மிஸ்டர் ஜீவன்! சமயத்திலே வந்து உதவிய சந்தோஷமே எனக்குப் போதும்."

"எனக்கு நீ ஒன்றும் உதவி செய்யலே! எனக்கென்ன கையில்லையா, கால் இல்லையா?" என்று வெடுக்கென்று இடைமறித்தாள் நிஷா.

தியாகராஜன் கலகலவென்று சிரித்தான். "இந்தப் பெண்ணுக்கு மரியாதை தெரியல்லே. ஆனால் அழகாகக் கோபிக்கக்கிறாள். இல்லையா மிஸ்டர் ஜீவன்?" என்றான்.

இந்த வெட்கமற்ற பேச்சும், அவளைக் கேலி செய்வது போல் இருந்த அந்தக் கேள்வியும் ஜீவானந்தத்தைக் கொதிப்புறச் செய்தன. ஆனால் அவனுக்கு ஒன்றும் செய்யத் தோன்றவில்லை. தன் அதிருப்தியைக் கண்களில் காட்டிக் கொண்டான். நிஷா அவனுக்காகச் சும்மா இருப்பவள் போல் திரும்பி நின்று, அருவியின் ஓட்டத்தைக் கவனிக்கலானாள்.

"நான் இறங்கி வந்து கொண்டிருக்கிறபோது வேட்டை—நாளைக்குன்னு என்னவோ பேசிக் கொண்டிருந்தாற் போலிருக்கு. என்ன விஷயம்? எனக்கு வேட்டைன்னு ரொம்ப இஷ்டம். உங்க ரெண்டு பேருக்கும் பாதகமில்லேன்னா நானும் கலந்துக்கப் பிரியப்படறேன்" என்றான் தியாகராஜன்.

அவன் பேச்சில் குறும்பு கலந்திருந்தது. அவன் எந்த அர்த்தத்தில் 'உங்க ரெண்டு பேருக்கும் பாதகமில்லேன்னா' என்ற வார்த்தைகளைப் பிரயோகப்படுத்தினான் என்பதை உணர்ந்ததும் ஜீவானந்தத்துக்கு உடல் கூசிற்று. அவன் அதிக நேரமாக அவர்கள் பேச்சைக் கேட்டிருக்க வேண்டும். கன்னத்தில் அறைவது போல் ஜீவானந்தம் அதற்குப் பதில் கூற விரும்பினான். ஆனால் ஏதோ ஒரு சக்தி அவனை இழுத்துப் பிடித்தது.

"சும்மா வேடிக்கைக்குப் பேசினோம். நாளை மறுக்குக் காட்டுப் பக்கமா இவளுடைய அப்பா வேட்டைக்குப் போகிறாராம். என்னையும் அழைச்சிருக்கார். நீங்க வந்து கலந்துக்கிறதுன்னு எனக்கென்ன ஆட்சேபம்? தாராளமாக வாங்க!" என்று சலனமற்ற குரலில் கூறினான் ஜீவானந்தம்.

"ஓ! நீங்க ஆட்சேபிக்க மாட்டீங்கன்னு நான் அப்பவே யூகிச்சேன். வர்றீங்களா? நான் கிளம்பறேன். நீங்க இன்னும் கொஞ்ச நேரம் இருந்துட்டு வருவீங்க" என்று கூறித் திரும்பினான் தியாகராஜன்.

அவனுக்காக—அவனுடைய விஷம் தடவிய வார்த்தைகளின் விகல்ப அர்த்தத்துக்காக—ஜீவானந்தம் புறப்படத் தொடங்கினான்.

"சரி, நிஷா! நீ வீட்டுக்குப் போய், நான் காலையிலே வர்றதாக உங்கப்பாகிட்டே சொல்" என்று அவளை அனுப்பி வைத்தான்.

"நிஷா, ரொம்ப அழகான பேர் இல்லையா மிஸ்டர் ஜீவன்? அந்த வார்த்தை மனசிலே தூண்டில் மாதிரி விழுந்து எதையோ இழுக்கிற மாதிரி இருக்கு."

அவனுடைய அந்தத் தைரியமான பேச்சைக் கேட்டு ஜீவானந்தம் இரண்டு கைகளையும் இறுகப் பிசைந்து கொண்டான். அவன் 'ஜீவன்' என்று அழைக்கும்போதெல்லாம் அவனுடைய உள்ளத்தின் மென்மையான பாகத்தில் வீற்றிருக்கும் அந்த மகத்தான துக்கம் மெதுவாக ஞாபகப்படுத்தப்படுகிறது. 'ஜீவன்'—'அவள்' தான் அப்படி அழைப்பாள். அவள் ஒருத்திக்குத்தான் அந்தப் பெயரை அவ்வளவு உயிரோடு உருக்கத் தெரிந்தது. இவன் யார்? ஜீவானந்தத்தின் துக்கங்களும் ரகசியங்களும் தெரிந்தவனா? தன்னோடு பழகும்போதெல்லாம் குத்திட்டிகள் போன்று இவன் ஏன் வார்த்தைகளை உபயோகிக்கிறான்? ஜீவானந்தத்துக்கு ஒன்றும் புரியவில்லை.

"சரி! மிஸ்டர் ஜீவன்! நான் இப்படியே பங்களாவுக்குப் போகிறேன். வேட்டை நாளைக்குக் காலையில்தானே? நீங்க நாளைக்குக் காலையிலே பங்களாவுக்கு வரணும். காலையிலே 'டிபன்' அங்கேதான். என்ன?" என்றான் தியாகராஜன்.

'அதை மறந்து விடு...மறந்துவிடு' என்று உள்ளத்திலிருந்து ஓர் உறுத்தல் கட்டளையிட்டது. ஆனால் ஜீவானந்தம் 'சரி' என்று ஒப்புக் கொண்டான்.

"நான் உங்களை அவசியம் எதிர்பார்ப்பேன்" என்று கட்டளையிடுவது போல் கூறி விட்டு ஒரு குறுக்குப் பாதையில் நுழைந்தான் தியாகராஜன். ஜீவானந்தம் ஜான்ஸன் துரையின் வீட்டை நோக்கிச் செல்லலானான்.

ஜீவானந்தம் தனது துப்பாக்கியை எடுத்துத் தோளில் மாட்டிக் கொண்டு கிளம்பினான். சூரியனின் பொற் கதிர்கள் பறவைகளின் உதய நேரக் குதூகலிப்பை அதிகரித்தவாறு, மர இலைகளினூடே, அருவி ஜலத்தின் மேலே ஜரிகை போல் நீண்டு விழுந்தன. அவன் உல்லாசமாகச் சீட்டியடித்தவண்ணம் மனித வாழ்வில் சாந்தியின் இந்த அபூர்வ தரிசனத்தை அனுபவித்துக் கொண்டே பாரஸ்ட் பங்களாவை நோக்கி நடந்தான். பங்களாவுக்கு வெளியிலேயே ஆபீஸ் உடையோடு பியூன் ஒருவன் பெரிய பலாப் பழத்தை உரிக்கிற முயற்சியில் ஈடுபட்டிருந்தான். அவனும் புதியவன் தான். பங்களாவுக்குச் சற்றுத் தள்ளி ஒரு பன்னீர் மர நிழலில் ஷிகாரி வெள்ளைக் குதிரைக்கு என்னென்னவோ தடவி 'மாஸேஜ்' செய்து கொண்டிருந்தான். தொலைவிலிருந்து பார்க்கும்போது சதுரமாகச் செதுக்கி விட்டிருந்த அந்த வெட்டவெளியில் வைத்த வெள்ளை முத்துப் போல் சமீபத்தில் பூச்சு வேலை செய்யப்பட்ட பங்களா தோன்றியது. பங்களாவை ஒட்டியே 'சிமெண்ட் ஷீட்'டினால் போர்த்தப்பட்டிருந்த ஒரு ஜீப் ஷெட் இருந்தது. ஆனால் அதில் குதிரையைக் கட்டி வைக்க விரும்பாமலோ என்னவோ மூங்கிலாலும் மஞ்சம் புல்லினாலும் வேயப்பட்டு, குதிரைக்கென்று



## அழகுக்கு அழகு செய்வது கைத்தறியே

கவின் வண்ணங்களில் பழமை பெற்ற டிசைன்களிலும், புது மோஸ்தர்களிலும் பட்டு, பருத்தி புடவைகள் கிடைக்குமிடம் ஹாண்ட்லூம் ஹவுஸ். காஞ்சீபுரம், கோயம்பத்தூர், தர்மாவரம், ஆரணி, பனாரஸ், ஜெய்பூர், காஷ்மீர், மற்றும் இந்தியாவின் எல்லா பாகங்களிலிருந்தும், கைத்தறி புடவைகளும், துணிகளும் தேவைக்கு ஏற்றவாறு கிடைக்கின்றது.

எழிலுக்கு ஏற்றது கைத்தறி துணிகள்

### ஹாண்ட்லூம் ஹவுஸ்,

9, ரட்டன்பஜார், சென்னை-3   போன் : ஷோரூம் 33405

மற்றும் : 221, டாக்டர் தாதாபாய் நௌரோஜி ரோடு, பம்பாய்-1

2, லிண்ட்ஸே தெரு, கல்கத்தா-16   9-ஏ, கன்னாட் பிளேஸ், புது டில்லி

தலைமை ஆபீஸ் :

அகில இந்திய கைத்தறித் துணிகள் விற்பனை கூட்டுறவு சங்கம் லிமிடெட்,

ஜன்மபூமி சேம்பர்ஸ், பம்பாய்-1



IDS/HH/7 TH



ஒரு தனிக்கொட்டகை மனைவாசிகள் நாலைந்து பேர்களால் கட்டப்பட்டுக் கொண்டிருந்தது. தியாகராஜனும் அதை மேற்பார்வையிட்டுக் கொண்டு நின்றிருந்தான்.

''டிர்ர்ர்... டிர்ர்ர்'' என்று ஒரு கார்டுக் குரல் எங்கிருந்தோ கூவியது. குதிரை 'மார்ஷல்' கைத்தை வாலை ஆட்டியபடி போலைக் கனைப்பதன் மூலம் தெரிவித்தது. தியாகராஜன் பூட்ஸ் ஓசையைக் கேட்டதும் 'டக்'கென்று திரும்பினான். -ஜீவானந்தம்.

''ஹல்லோ, மிஸ்டர் ஜீவன். பரவாயில்லையே, கரெக்டா வந்துட்டீங்களே!'' என்று பேசியபடியே அவனருகில் வந்து தோள் மேல் கை வைத்து உள்ளே அழைத்துச் சென்றான்.

முன்பு பல தடவை ஜீவானந்தம் அந்தப் பங்களாவுக்கு வந்திருக்கிறான். அந்தப் பங்களாதானா இது என்று ஐயம் அவனுக்கு இப்போது ஏற்பட்டது.

முன்னறையில் 'விசேஷியம்' விரிந்திருந்தது. பழைய நாற்காலி மேஜைகள் அகற்றப்பட்டு, கருங்காலி மரத்தினால் செய்யப்பட்ட பளிச் சென்ற ஆசனங்கள். கவிஞர்களும், மகான்களும், பெரிய எழுத்தாளர்களும் இருந்த படங்களுக்குப் பதில் பாடம் செய்து மாட்டப்பட்டிருந்தன மிருக வர்க்கங்களின் தலைகள். நேர்ச் சுவரின் நடுவில் இரட்டைக் குழல் துப்பாக்கிகள் இரண்டு ஒரு ஸ்டாண்டில் நிறுத்தப்பட்டிருந்தன. தியாகராஜனின் பக்தி நிறைந்த உபாஸனைக்கு ஆளான தெய்வங்கள் போல், பளபள வென்று அவை நன்கு மெருகேறி எதிர் ஜன்னலில் வந்து விழுந்த சூரிய கிரணத்தைப் பார்த்துச் சிரித்தன. ஈட்டியைத் தோளுக்கு மேலே ஓங்கிக்கொண்டு கண்களில் கனல் தெறிக்க, ஸ்பார்ட்டன் சிலை மார்பளவு பெரிய உருவில் நடுவில் வைக்கப்பட்டிருந்தது.

''உட்காருங்கள்'' என்று ஒரு நாற்காலியை இழுத்துப் போட்டுக் கொண்டு அவனுக்கு ஒரு சோபாவைச் சுட்டிக்காட்டினான் தியாகராஜன்.

''பங்களா எப்படி யிருக்கிறது? முன்னே வந்து பார்த்திருப்பீர்கள். இப்போது சொல்லுங்கள்'' என்றான். அவன் கண்களிலும் உதடுகளிலும் எதை ஜீவானந்தம் மனப் பூர்வமாக வெறுத்தானோ, அந்த அகம்பாவம் தென்பட்டது.

''பயங்கரமாக இருக்கிறது'' என்று கர்விதமாகப் பதிலளித்தான் ஜீவானந்தம்.

''ஓஹோ!'' என்று வாய் விட்டுச் சிரித்தான் தியாகராஜன்.

அதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறதோ என்று புரியாமல் ஜீவானந்தம் விழித்தான்.

''இருந்தாலும் நீங்க ரொம்பப் பயந்தவர் மிஸ்டர் ஜீவன்!'' என்று அவனை நோக்கி ஒற்றை விரலை ஆட்டியபடியே தியாகராஜன் எழுந்தான்.

'' உட்காருங்கள். இதோ, உள்ளே போயிட்டு வர்றேன். ஆமாம், உங்களுக்குப் புரட்டிக் கொண்டிருக்க ஏதாவது புத்தகம்'' என்று மேஜை டிராயரை இழுத்து எதையோ புரட்டலானான்.

''அடடே! உங்களிடம் புத்தகமெல்லாம் கூட இருக்கிறதா?'' என்று உணர்ச்சியற்ற குரலில் கேட்டான் ஜீவானந்தம்.

''என்ன அப்படி நினைத்து விட்டீர்கள்?'' என்று ஹிட்லரைப் பற்றிய ஒரு புத்தகத்தை அவனிடம் நீட்டினான் தியாகராஜன்.

''அதுதானே கேட்டேன்!'' என்று மனக்குள் சொல்லிக்கொண்டு ஜீவானந்தம் புத்தகத்தைப் புரட்டினான். அந்தக் கொலைகாரப் புத்தகத்தில் அவனுக்கு மனம் செல்லவில்லை. அதை அப்படி 'டீப்பா'யின் மீது போட்டு விட்டு அறையை ஒரு பார்வை பார்த்தான். அங்கே ரசிக்க ஒன்றும் இல்லை. ஜன்னலின் வழியே குதிரையும், 'மாலிஷ்' செய்துகொண்டிருந்த ஷிகாரியும் தெரிந்தார்கள். உட்கார்ந்தவாறே அந்தச் சதுரம் வரை தடுக்கப்பட்டிருந்த வெளியுலகை நோட்டமிட்டான்.

வீட்டுக்குள்ளேயிருந்து கிணற்று ராட்டினம் கிறீச்சிடும் ஒலியும், மெல்லிய இனம் விளங்காத மதுர சங்கீதம் போல் வளையல்கள் கிலுகிலுக்கும் சப்தமும் கேட்டன. வாளி ஒன்று தரையின் மீது வைக்கப்பட்டது.

''டேய், ஞானகிராம்!'' என்று அழுத்தமான குரலில் உள்ளேயிருந்து தியாகராஜன் அழைத்தான்.

''வர்றேன் சார்!'' என்று பதிலளித்தபடி பலாப்பழத்தைக் கையில் ஏந்தியபடி ஆர்ஸ்பியூன் உள்ளே சென்றான். அப்புறம் ஏதோ மந்தமான குரலில் யாரோ பேசினார்கள். மறுநிமிஷம் தியாகராஜன் வெளியே வந்தான்.

''எஸ், மிஸ்டர் ஜீவன்! கை கழுவிக்கலாமா? வாங்க போவோம்.''

ஜீவானந்தம் பூட்ஸ் லேஸைக் கழற்றி அவிழ்க்கத் தொடங்கினான்.

''ஓ, அந்தச் சம்பிரதாயமெல்லாம் பார்க்கிறீங்களா?''

''சம்பிரதாயம் ஒன்றுமில்லையே. கால் கழுவணுமேன்னுதான்.''

பூட்ஸையும், சாக்ஸையும் கழற்றி மேஜைக் கடியில் போட்டு விட்டு ஜீவானந்தம் அவனோடு உள்ளே நுழைந்தான்.

சாப்பாட்டு அறையில் நுழைந்ததும்தான் இந்த வீட்டிலும் தெய்வீகம் கொஞ்சம் இருக்கிறது என்று ஜீவானந்தத்துக்கு நம்பிக்கை வந்தது. கண்ணனின் இலேசான வர்ண மயக்கில், நிலவின் ஒளியைப் போல் நீட்டியிருந்தது. படத்தில் மீராவும், நிலவின் நிறைந்த பாவமும்தான் பிரதானமாகச் சித்திரிக்கப்பட்டிருந்தது. பக்கத்திலே பத்திரிகையிலே இருந்து கிழித்துப் படம் போட்டிருந்த ஆண்டாள் படம். இரண்டுக்கும் எதிரில் ஒரு ஸ்டாண்ட். அதன் மீது ஒரு ஊதுவத்திக் குழல். மறுபுறம் குளிர்ந்த நீலச் சுடர் வீசி நிற்கும் ஒரு பாவை விளக்கு. ஊதுவர்த்திக் குழலில் செருகியிருந்த வத்தியிலிருந்து மெல்லத் தன் வழியை நிதானித்துக் கொண்டாற் போன்ற அலை அலையான புகைச் சுருள். அதிலிருந்து கிளம்பிய இங்கிதமான வாசனை, இருதயத்தின் மீது எந்த அதிர்ச்சியையும் ஏற்படுத்தாமல் மெல்லத் தவழ்ந்து வந்து ஓர் அபூர்வ சுகத்தை அளித்தது.

ஒரு குடும்பத்தின் இந்தக் காட்சி!

ஜீவானந்தத்துக்கு மெய் சிலிர்த்தது. அதை அவன் அனுபவித்ததைக் கவனித்த தியாகராஜன் அலட்சியமாகச் சிரித்துக் கொண்டே ''எல்லாம் நம்ம மனைவியின் ருசி. நமக்கு இதெல்லாம் பிடிக்கிறதில்லே'' என்று கூறிக் கொண்டே அவனைச் சாப்பாட்டு மேஜையரு

யில் அமர்ந்துச் சென்றான். இருவரும் அமர்ந்தனர்.

''கங்கா!'' என்று தியாகராஜன் கூப்பிட்டு விட்டுப் பிறகு ஜீவானந்தத்தோடு பேச்சை ஆரம்பித்தான்.

''கங்கா!'' என்று அவன் கூப்பிட்டதும் ஜீவானந்தத்துக்குத் தன்னையே மறந்து விட்டது. மனக் குகையில் அந்த ஒலி அலை பட்டுக் கங்கை நதியின் கம்பீர முழக்கத்தைப் போல் பலத்த எதிரொலிகளைச் சிருஷ்டித்தது. எந்தப் பெயர் அவனுடைய வாழ்க்கையில் தேவாலயத்துத் தூங்காமணி விளக்குப் போல் துக்கத்திலூடே ஒளி வீசிக்கொண்டிருந்ததோ அந்தப் பெயர் அது. அந்தப் பெயரைத் தொடர்ந்து, நிலா முற்றத்தின் விளிம்புக்கு மேலே மெல்ல மெல்ல எழுந்து வரும் சந்திர வட்டம் போல் அவனது நினைவின் பொறிகளில் மெதுவாக....மெதுவாகப் பாதசரங்கள்கூட அதிகம் சப்திக்காமல் அவள் வந்து கொண்டிருந்தாள். தியாகராஜன் ஜீவானந்தத்தின் மனத்துக்குள் நேர்ந்துகொண்டிருக்கும் இந்தப் போராட்டத்தை உணராமல் சளசளவென்று பேசிக் கொண்டிருந்தான்.

''உங்களுக்கு 'மீரா' கேரக்டர் பிடிக்கிறதா மிஸ்டர் ஜீவன்? நான் விரும்புவதில்லை. புருஷனுக்கும் மீறிய, அவனையும் தாண்டிய பக்தியென்று என்னாலே ஒத்துக்க முடியல்லே. அது நம்ம சாஸ்திர தர்மங்களுக்கு விரோதமாயிருக்கிறதாக எனக்குப் படுகிறது. ஆண்டாள் பரவாயில்லே. கண்ணனுக்காகத் தவமிருந்து, அவனுடைய காதலைக் குறித்தே ஏங்கியிருந்தாள். தன்னுடைய மனசும் மேனியும் மானிடருக்கு என்று பேசப் பட்டால் எவ்வளவு கொதிக்கிறதுன்னு திருமணம் செய்துக்காமலே இருந்தாள். இது காதல்!''

ஒரு பக்கம் மனத்துக்குள் அந்த மகோன்னதமான அவஸ்தையை அனுபவித்துக் கொண்டு, ஜீவானந்தம் மறுபுறம் இந்த வார்த்தைகளையும் கேட்டான். அதற்காக அவன் தர்க்கிக்க விரும்பவில்லை.

அந்நேரத்தில் வாசற்படியோரத்தில் ஒரு சில்வர் தட்டை ஏந்திய இரு சிவந்த கரங்களும், சந்தன வண்ணப் பட்டுச் சேலையின் சிவப்புக் கரை முன்றானை காற்றில் அசைந்தாடுவதும் தெரிந்தன. அவள் தயக்கத்தைப் பார்த்துத் தியாகராஜன், ''உள்ளே வா!'' என்று உத்தரவிட்டான். அவள் மெதுவாக உள்ளே வந்தாள்.

ஜீவானந்தத்தின் உள்ளம் பதைத்துத் துள்ளியது. அதன் இயக்கம்? ஒரு கணம் நிசப்தமாகிப் பேரிரைச்சலோடு மீண்டும் தொடங்கிற்று. அவள்தான் ஜீவானந்தத்தின் ஜீவயாத்திரையில் இதுகாறும் இருந்து வந்த தீப வெளிச்சம். அவனுடைய கங்காவேதான். ஒரே ராகமாக அவனுக்குள் அமர்ந்திருந்த ஜீவனின் நாதம் பற்பல இழைகளாகப் பிரிந்தது. அவன் வெகு வருத்தத்துடன் அவளை ஏறிட்டுப் பார்த்தான்.

பழைய சாந்தம் தவழ்ந்த அதே முகம். இன்னும் அவள் அவனைப் பார்க்கவில்லை. எனவே முகத்தில் நிலவியிருந்த சகஜ பாவமே ஒரு சோகமான சோபையைக் கொடுத்தது. அவனுக்கு அப்போது தியாகராஜன் மறந்து விட்டான். இருக்கை மறந்தது. இடம் மறந்தது. ஓர் ஆழ்ந்த மனக் குறையை மலர்த் தட்டில் ஏந்தியவாறு தெய்வத்துக்கு நிவேதிக்க வந்த மௌன கங்கையாக அவள் மட்டும் தெரிந்தாள்.

''இவர்தான் மிஸ்டர் ஜீவானந்தம்; இவள்தான் என் மனைவி'' என்று தான் இருப்பதை ஸ்தாபிப்பது போல் தியாகராஜனின் குரல் கேட்டது.

எதைத் தாள முடியாது என்பதற்காக, எது நிகழக் கூடாது என்று ஜீவானந்தம் மனப்பூர்வமாக எதிர்பார்த்தானோ அது நேர்ந்தது. கங்கா அவனை நிமிர்ந்து பார்த்தாள். முதல் வெட்டில் மெல்லத் தள்ளாடும் வாழை போல் கங்கா தடுமாறினாள்.

''நமஸ்காரம்'' என்று தொண்டை மெல்லக் கனைக்க அவளை எச்சரித்தான் ஜீவானந்தம்.

மறுகணம் கங்கா சமாளித்துக் கொண்டாள். சட்டென்று சகித்தற்கரிய அந்தப் பார்வையைக் கீழே தாழ்த்திக் கொண்டு, ''நமஸ்காரம்'' என்று ஒலி குறைந்த குரலில் கூறினாள் கங்கா.

''சீக்கிரமா பரிமாறு கங்கா! கோட்டைக்கு இப்பவே நேரமாயிடுச்சு'' என்று கட்டளையிட்டான் தியாகராஜன். அவனுடைய முகம் இலேசாய்க் கறுத்தது.

துடி துடித்துக் கொண்டிருக்கும் ஜீவானந்தத்தின் மார்புக்கெதிரில், கங்காவின் கை பலகாரத் தட்டுக்களை எடுத்து வைத்துப் பரிமாறிற்று. அவளுடைய கூந்தலிலிருந்து அவனுக்கு மறக்க முடியாத தைலத்தின் வாசனை. ஜீவானந்தம் உதட்டைக் கடித்தபடி தலையைத் தாழ்த்தி விட்டான்.

''என்ன மிஸ்டர் ஜீவன்! மீராவைப் பற்றி நீங்கள் ஒன்றுமே சொல்லவில்லையே?'' என்று தியாகராஜன் ஆரம்பித்தான்.

பளிச்சென்று மின்னல் போல் அவனுடைய வார்த்தை ஜீவானந்தத்தைத் தகித்தது. அவன் எதையோ இலேசாகக் குத்திக் காட்டுகிறானோ? பலகாரத் தட்டிலிருந்து ஒரு விள்ளல் எடுத்து வாயில் போட்டுக் கொள்ளும் சாக்கில் கங்காவைப் பார்த்தான். கங்கா சுவரோரமாக இடது கையால் மணிக்கட்டைப் பிடித்தவண்ணம் நின்றிருந்தாள்; உதடுகள் துடித்தன. கண்களைக் கீழே தாழ்த்தி சூழ்நிலையிலிருந்து தன்னைச் சிறையிட்டுக் கொண்டு நின்றாள்.

''மீராவை எனக்கு மதிக்கத் தோன்றுகிறது சார்! அவளுடைய பக்தி ஆத்மீகமானது; அது காதலில்லை. ஆண்டாள் கண்ணனைக் காதலித்தாள். அவள் பாவம் வேறு. மீராவின் பாவம் வேறு.''

''அப்படியா! உங்களுக்கு மீரா 'கேரக்டர்' பிடிக்கிறதுன்னு சொல்லுங்க. நம்ம மனைவிக்கும் அப்படித்தான் மிஸ்டர் ஜீவன்!''

ஜீவானந்தம் பதறிப் போய் அவனைத் திரும்பிப் பார்த்தான். சாதாரண வார்த்தையொன்று சொல்லியவன் போல் தியாகராஜன் அமைதியாகச் சாப்பிட்டுக் கொண்டிருந்தான். எது வாயில் வரக் கூடாதோ அதுவே தியாகராஜன் வாயிலிருந்து வந்தது. அவன் அபிப்பிராயம் என்ன என்பது மூடுமந்திரமாகப் பெரிய புயலுக்கோ மழைக்கோ சூலுற்றிருக்கும் வானம் போல் எச்சரித்தபடியேயும் இருந்தது. அதற்கப்புறம் ஜீவானந்தம் பேசவேயில்லை. எழுந்து கைகழுவச் சென்ற போது மட்டும் தற்செயலாகக் கங்காவின் கண்கள்

அவனைச் சந்தித்தனர். மேனியெல்லாம் காயம் பட்டுத் தீனமாகப் பார்க்கும் பேடைப் புறாவைப் போல் அந்தச் சமயத்தில் கங்கா புலம்பட்டாள். சரேலென்று ஜீவானந்தம் அவளைக் கடந்து விட்டான்.

வெளி ஹாலுக்கு இருவரும் வந்தனர். நிஷாவின் தந்தை தேடிக் கொண்டிருப்பதாக பியூன் வந்து சொன்னான்.

"என்ன ஜீவன்! நீங்க தயார்தானே?" என்று கேட்டவாறு கவரில் நிறுத்தியிருந்த துப்பாக்கியை மடித்துச் சரி பார்க்கலானான் தியாகராஜன்.

"ஓ, நான் தயார்!"

"அப்ப கிளம்புவோம். ஜானகிராம் ராஜுவேலைக் கூப்பிடு" என்று பியூனுக்குத் தெரிவித்தான் தியாகராஜன்.

சிறிது நேரத்தில் ஷிகாரி ராஜுவேல் அங்கு வந்து நின்றான். அவனைக் கண்டதும் தியாகராஜனின் குரலில் இருந்த அதிகார மிடுக்கு சிறிது தளர்ந்தது.

"நீ டிபன் செஞ்சாச்சாப்பா?"

"ஏன்னேயோ ஆயிடுச்சு சார்!"

"அப்ப, புறப்பட வேண்டியதுதானே. ஜானகிராம்கிட்டே என்னென்ன தேவையோ எடுத்துக்கச் சொல்லிடு. ஜானகிராம்! ஆறு பேருக்குச் சாப்பாட்டுக்குச் சொல்லியிருக்கிறேன். ஒழுங்காகக் கட்டியெடுத்து ஜீப்பிலே கொண்டு போய் வை. சீக்கிரமா போ. சரி ராஜுவேல். நீ கையைக் கழுவிக்கிட்டு சீக்கிரம் வாப்பா" என்று இருவரையும் அனுப்பினான்.

"ஜீப் காரு அந்தப் பக்கம் போவாதுங்க!" என்று வெளியே நின்றிருந்த நிஷாவின் தந்தை துக்கோடன் மரியாதையுடன் தெரிவித்தான்.

"அப்படியா .... எவ்வளவு தூரம் வரையில் போகும்?"

"நாம போக வேண்டிய இடத்துக்கு ரெண்டு மைல் இப்பாலியே பாட்டை நின்னுடுதுங்க."

"சரி! அது வரையில் போனாப் போவுது! ஆமா, முன்னாடியே அந்த இடத்துக்குப் போயிருக்கிறியா நீ?"

"என்ன எசமான்! அப்படிக் கேட்குங்க? போனவாட்டிப் போய்ப் போட்டுட்டு வந்த பரணை இன்னும் பிரிக்கிலீங்க!"

"சரி, மிஸ்டர் ஜீவன்! நாம் போய் ஜீப்பை ஸ்டார்ட் பண்ணிக் கொண்டு வருவோம். வாங்க!"

ஜீவானந்தம் பூட்ஸை மாட்டிக் கொண்டு எழுந்திருக்கலானான். இருவரும் வெளியே வந்தபோது ஜான்ஸன் வெளியில் போய்க் கொண்டிருந்தார்.

"ஹலோ! குட்மார்னிங் ஸார்! நாங்கள் வேட்டைக்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கிறோம். நீங்களும் வந்து கலந்து கொண்டால் அது மிகவும் மகிழ்ச்சிகரமாக இருக்கும்" என்று அவரிடம் திரும்பி வணக்கத்தைக் கூட எதிர்பாராமல் விடுவிடுவென்று சொன்னான் தியாகராஜன்.

ஜான்ஸன் புன்னகையோடு அவன் சொல்லி முடிக்கும் வரை நின்றார்.



ஜீவானந்தம் ஒன்றும் கூறாமல் வெறுமனே வணங்கினான்.

"எஸ், எனக்குத் துப்பாக்கியெல்லாம் வீட்டிலே இருக்கு" என்று பதிலிறுத்தார் ஜான்ஸன்.

"ஓ, நீங்க இஷ்டப்பட்டால் என்னுடையதை - என்னிடம் இரண்டு இருக்கு - உபயோகப்படுத்திக் கொள்ளலாம்" என்றான் தியாகராஜன்.

* * *

அரை மணி நேரத்தில், நால்வரைச் சுமந்து கொண்டு கிழக்கு நோக்கி ஜீப் புறப்பட்டது.

தியாகராஜன் ஜீப்பை ஓட்டிக் கொண்டிருந்தான். வண்டி புறப்பட்டு, காட்டுப் பாதையின் கரடு முரடான குலுக்கலுக்கும், அதிர்ச்சிகளுக்கும் ஆளாய்ப் போய்க் கொண்டிருந்த போது ஜீப்புக்கு எதிரில் இரண்டு கைகளையும் ஆட்டியவாறே நிஷாவின் உருவம் தூரத்திலிருந்து ஓடி வந்தது.

"ஹோய்...... வண்டியை நிறுத்து, நிறுத்து!"

தியாகராஜனின் முகம் மலர்ந்தது. அவன் புன்னகையோடு வண்டியை நிறுத்தினான்.

"என்னம்மா, நிஷா!" என்று கோபத்தோடு கேட்டான் நிஷாவின் தந்தை.

"நானும் வேட்டைக்கு வருவேன்" என்று நன்றாக நிச்சயம் பண்ணிக் கொண்டு பேசுபவள் போல, வராவிட்டால் அடம் பிடித்து அழிச்சாட்டியம் செய்வாள் என்று எச்சரிக்கிற தொனியில் பேசினாள் நிஷா.

"வேட்டையுமாச்சு, கோட்டையுமாச்சு. போ, போ. உங்காத்தாகிட்டே அப்புறம் நான் பதில் சொல்ல முடியாது" என்று

# கல்யாணியின் கல்யாணம்























## ஆயுள் இன்சூரன்சு

போல ஆதரவு தருவது எதுவுமே இல்லை

ஜீப்பில் இருக்கிற அத்தனை பேரையும் மறந்து கத்தினான் ஜக்கோடன்.

கோபமும், ரோஷமும், அவமானமும் வருத்தமும் அவனுடைய அழகிய சிவந்த முகத்தில் ததும்பின. உதடுகளை இறுக மூடிக் கொண்டு அவன் எதிரிலேயே நின்றான்.

''பாவம், அதுவும் வரட்டுமே!'' என்று அவனுடைய தோற்றத்தை ரசித்தபடியே கூறினான் தியாகராஜன்.

''உங்களுக்குத் தெரியாதுங்க எஜமான்! இந்தப் பொம்பளைப் பிள்ளைக்கு அளவுக்கு மீறிச் செல்லம் கொடுத்திட்டேன். இது தம் போக்கிலே ஆடுது. வேட்டைக்கு வந்து இவ என்னத்தைக் கிழிக்கப் போறது?''

''இல்லே, ஜக்கோடன்! இவளும் வரட்டும். மலை ஜாதிப் பெண்ணானால், தைரியமும் வீரமும் அவள் உடம்பிலேயே ஓடணும். வேட்டைகளை அவள் பார்க்கணும்'' என்று இடைமறித்தார் ஜான்ஸன்.

ஜக்கோடன் முகத்தில் ஒரு தர்மசங்கடம் நிலவியது. அவர் வார்த்தை அவனுக்குத் தேவ வாக்கு. அவன் பேசாமல் இருந்து விட்டான். நிஷாவின் முகத்தில் புதுப் பூவொன்று மெல்ல மலர்வதைப் போன்ற களிப்பு உருவாகியது. அவள் அவசரத்தோடு ஜீப்பில் ஏறி ஜீவானந்தத்தின் பக்கத்தில் வந்து உட்கார்ந்தாள். அங்கேதான் சிறிது இடமிருந்தது. முன் புறம் இல்லை. ஜீப் மெல்லப் புறப்பட்டதும் நிஷாவின் முகத்திலிருந்த மந்தஹாசம் ஜீப்பின் இயக்கத்தால் புளகாங்கிதமுற்று அதிக சப்தமில்லாத சிரிப்பாக மலர்ந்தது. ஜீப்பின் ஓசையால் ஜீவானந்தத்துக்கும் ஜான்ஸனுக்கும் மட்டுமே அது கேட்டது.

அந்திக்கு மேல்தான் கருஞ் சிறுத்தைகள் நடமாட்டம் ஆரம்பிக்கும். ஆகவே காட்டில் விஸ்தாரமாக நுழைந்து பார்த்து விட்டு வருவது என்று தியாகராஜன் தன் திட்டத்தைப் பிரஸ்தாபித்தான். ஜான்ஸனுக்கும் அது சரியென்று பட்டது. நிஷாவையும் கூட இழுத்துக் கொண்டு அலைவது நன்றாயில்லை என்று ஜக்கோடன் அபிப்பிராயப்பட்டான். ஆனால் அவன் தன் பலத்த ஆட்சேபத்தை முகத்திலேயே தெரிவித்துக் கொண்டான். அதனால் அவளையும் கூட அழைத்துக் கொண்டு செல்ல வேண்டி நேரிட்டது. எல்லோரும் அந்த அமைதி நிறைந்த காட்டில் கலகலவென்று பேசியபடியே உயிர்ச் சந்தடியை ஏற்படுத்திக் கொண்டு நடந்தனர். பூட்ஸ் ஓசைகளையும், சிரிப்பொலிகளையும், கேட்டுப் பயந்து சில பறவைகள் கூட்டை விட்டுப் பறந்தன. அடர்ந்த புதர் ஒன்றின் அருகில் திடீரென்று ஒரு சலசலப்பு கிளம்பியது. சட்டென்று அனைவரும் சிலைகள் போன்று நின்று விட்டனர்.

மறுகணம் ''மர்...மர்... மான்!'' என்று கத்திக் கொண்டே ஜான்ஸன் துப்பாக்கியை உயர்த்தி, அந்த வேகத்திலேயே குறியை நிதானித்துக் கொண்டு விரைவாகச் சுட்டார். ஷிகாரியின் அடுத்த குண்டும் ஜக்கோடனின் குண்டும் அதைத் தொடர்ந்தன. புதரிலிருந்து ஒரு மின்னல் போல் துள்ளிப் பாய்ந்து அவர் களைத் தாவிக் கொண்டு ஓடியது ஒரு காட்டு மான்.

''அது தப்பிக்க முடியாது! ஜக்கோடன் என்று மலை போன்ற, வயதான கிழவர் ஜான்ஸன் இளைஞன் போல் துள்ளிக் கொண்டு அதைப் பின்தொடர்ந்தார். ஜக்கோடனும் ஷிகாரி ராஜவேலுவும் அவரைப் பின்பற்றிக் கொண்டு அடர்ந்த புதர் வழிகளில் இறங்கி ஓடலானார்கள். அந்த நடுக் காட்டில் திடீரென்று தனியே விடப்பட்ட மூவரும் மௌனமாக இருந்தார்கள். வெகு நேரம் கழித்துக் காட்டின் அதிக தூரத்துக்கப்பால் ஓர் உறுமல் போன்று ஒரு துப்பாக்கி ஓசை கேட்டது.

''சுட்டு விட்டிருப்பார்களா மிஸ்டர் ஜீவன்?'' என்று அவனைத் திரும்பிப் பார்த்தான் தியாகராஜன். இவ்வளவு நேரம் வரையில் தூங்கி எழுந்தது போல் அவனுடைய சுபாவம் மீண்டும் திரும்பியது.

''கட்டாயமா சுட்டிருப்பாங்க!'' தலையை அசைத்துக் கொண்டு முந்தினாள் நிஷா. அவள் பக்கமாக விசித்திரமான பார்வையோடு திரும்பிப்பார்த்தான் தியாகராஜன். அடர்ந்த மரங்கள். விந்தையான செடி கொடிகள். வெள்ளைக் கூழாங் கற்கள். விசித்திரமான இயற்கையின் அந்தப் பச்சைப் பந்தலின் கீழே அவளுடைய அழகில் ஓர் அபூர்வ வாகிரி சேர்ந்திருந்தது. தியாகராஜன் அடங்காத இதய தாகத்தோடு அந்த வாகிரியில் மெல்ல மெல்ல அவளையே பருகி விடுவது போன்று பார்த்தான். பின்பு ஏதோ ஒரு முக்கிய விஷயம் சொல்வது போன்ற குரலில் ஜீவானந்தத்தின் பக்கம் திரும்பி, ''இவள் ஒரு வனமோகினி மாதிரி இல்லே, மிஸ்டர் ஜீவன் ?'' என்று கேட்டான்.

ஜீவானந்தத்தின். நெற்றி நரம்புகள் புடைத்தன. துப்பாக்கியை நிலத்தில் ஊன்றியிருந்த அவனுடைய இரண்டு கைகளிலும் அடக்கமாட்டாத ஓர் உக்கிரம் தோன்றி, அவை விறைத்தன.

'எவ்வளவு துச்சமானவனிடமா கடைசியில் கங்கா ஒப்புவிக்கப்பட்டு விட்டாள்? ரத்ன மண்டபத்தின் உப்பரிகையில், நிலவின் அமிர்த கிரணங்கள் தாங்கச் செய்ய, மந்தமாருதம் கோதிவிட மேன்மையான இடத்தில் இருக்க வேண்டிய அந்த இள மலர் எவ்வளவு நீசமானவனிடம் விசிறி எறியப்பட்டிருக்கிறது?'

ஜீவானந்தம் காலாக்கினி போன்ற ஆத்திரத்தின் வசப்பட்டான். துப்பாக்கியை உயர்த்தி வெறும் வானத்தை நோக்கிச் சுட்டான். நிஷா பீதியடைந்து தியாகராஜுவின் தோளைப் பற்றிக் கொண்டாள். அந்தக் குண்டின் ஓசை ஒரு தெளிவற்ற முனகல் ஒலி போல் மெல்ல மெல்ல அடங்கியது.

தியாகராஜன் கடகட வென்று சிரித்தான். ''என்ன மிஸ்டர் ஜீவன்! துப்பாக்கி சுட்டுப் பழகிக் கொள்கிறீர்களா?'' என்று நறுக்கென்று கேட்டான்.

ஜீவானந்தம் பளிச்சென்று அவளை நிமிர்ந்து பார்க்கையில் தியாகராஜனின் தோளைப் பிடித்துக் கொண்டு நிஷா மலங்க மலங்க விழித்தபடி நின்றிருந்தாள். அவளைக் கண்டதும் அவனுடைய இருதய வேகம் தாழ்ந்தது. தன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

''ஒன்றுமில்லே சார். சும்மா துப்பாக்கி சுடுகிறதா என்று பார்த்தேன்?''

''அப்படியா?'' என்று அலட்சியமாகப் பார்த்தபடி தியாகராஜன் அதைத் தான் நம்பவில்லை என்பது போல் நின்றான்.

"இன்னும் இவர்களைக் காணவில்லை. நாம் கொஞ்சம் அப்படியே சுற்றி விட்டு வருவோமா?" என்று அவன் அலட்சியத்தை மதியாது ஜீவானந்தம் நடக்கத் தொடங்கினான். அவன் மனத்தில் அந்தக் கோபமெல்லாம் அப்படியே ரஸவாதமானது போல் வருத்தமாகி விட்டது.

"ஓ, போகலாம்! ஆனால் நீங்கள் துப்பாக்கி சுடுகிறதா என்று என் மேலே சுட்டுப் பார்த்து விடாதீர்கள். என்ன நிஷா?" என்று கூர்மையான அர்த்தத்தோடு சிரித்தான் தியாகராஜன். ஜீவானந்தத்தால் பேச முடியவில்லை. நிஷாதான் சளசள வென்று தியாகராஜனோடு பேசியவண்ணம் வந்து கொண்டிருந்தாள். துப்பாக்கி எப்படிச் சுடுகிறது? எப்படிச் சுட வேண்டும் என்று என்னென்னவோ கேள்விகளைக் கேட்டுக் கொண்டே வந்தாள். பேச்சு சுவாரசியத்தில் தியாகராஜனும் நிஷாவும் பின்னால் ஓரடி தங்கிவிட்டதால் ஜீவானந்தம் முன்னால் நடந்து கொண்டிருந்தான். கங்கா என்ற வட்டத்தைச் சுற்றியே ரத்தம் சிந்தியவாறு அவன் எண்ணம் ஓடியது. பழைய நினைவுகள்.... பழைய சம்பாஷணைகள்.... பழைய காலம்!

"இவ்வளவு கேக்கிறியே! உனக்குத் துப்பாக்கி சுடணும்னு ஆசையாய் இருக்கா?" என்று கேட்டான் தியாகராஜன்.

"அப்பப்பா! எனக்கு எவ்வளவு ஆசை தெரியுமா?" என்று சிவந்த உதடுகள் குவிய அவனைப் பார்த்தாள் நிஷா.

"முதல்லே நான் சுட்டுக் காட்டறேன், இதோ அந்தப் பறவையை!" என்று அவன் சொல்லி முடிக்குமுன், ஜீவானந்தத்தின் தலைக்கு வெகு அருகில் ஒரு குண்டு சீறிக் கொண்டு, நீல வானில் ஹாய்யாக வட்டமிட்ட ஒரு ராஜாளியை நோக்கிப் பறந்தது.

ஜீவானந்தம் திடுக்கிட்டுத் திரும்பினான்.

ராஜாளி ஒன்று சற்றுத் தொலைவுக்கப்பால் போய்த் துவண்டு விழுந்தது.

"பயந்து விட்டீர்களா மிஸ்டர் ஜீவன்? நிஷாவுக்குச் சுட்டுக் காண்பிச்சேன். அதோ பாருங்க அந்தப் பறவையை!" என்று அவனுக்குச் சுட்டிக் காட்டினான் தியாகராஜன். நிஷா கலகல வென்று நகைத்துக் கொண்டு கீழே விழுந்த பறவையை எடுத்துவர ஓடினாள்.

ஜீவானந்தம் தீர்க்கமாக அவனையே உற்றுப் பார்த்தான். தியாகராஜன் அந்தப் பார்வையை இலட்சியம் செய்யாமல் நிஷாவைப் பின்தொடர்ந்து நடந்தான்.

"என்ன நிஷா, கெடச்சுடுச்சா?" என்று அவனது குரல், ஜீவானந்தத்தைப் பரிகாசம் செய்வது போல் காற்றில் மிதந்து வந்தது. அவன் துப்பாக்கியைக் கீழே ஊன்றி, ஒரு பாறையின் மீது உட்கார்ந்தான். கைகள் இரண்டும் கோத்தாற்போல் துப்பாக்கியைப் பிடித்திருந்தன. நெற்றியின் மீது இரண்டு கைகளையும் துப்பாக்கியையும் சாத்திக் கொண்டு மெல்லக் கண்களை இறுக மூடிக் கொண்டான்.

"ஜீவா...ஜீவா, நீ வரல்லியா?" என்று நிஷா கத்தினாள்.

"இல்லே." என்று கண்களைக் கூடத் திறக்காமல் பதில் சொன்னான் ஜீவானந்தம்.

"என்ன சமாசாரம் மிஸ்டர் ஜீவன்?" என்று கேட்டான் தியாகராஜன்.

"தலை ஒரு மாதிரியா வலிக்கிறது!"

"அப்போ இங்கேயே உட்கார்ந்திண்டு இருங்க. இவளுக்குத் துப்பாக்கி சுடக் கத்துக் கொடுக்கிறேன். நிஷா, அந்த ராஜாளியைக் கொண்டுபோய் அவர் பக்கத்திலே போட்டுட்டு வா" என்றான் தியாகராஜன்.

நிஷா ராஜாளியைக் கொண்டு வந்து அவனருகில் போட்டுவிட்டுச் சிறிதுநேரம் நின்றாள். துப்பாக்கியின் மீது குனிந்து கொண்டிருந்த அவனைக் கருணையோடு நோக்கினாள். மெதுவாக, அலையலையான அந்தக் கிராப்பை வருடியவண்ணம் மனத்தினுள்ளிருந்து பேசுவது போல் "ரொம்ப நோவுதா ஜீவா?" என்றாள். ஜீவானந்தத்துக்கு மனம் கலங்கியது. நிமிர்ந்து அவளைப் பார்த்தான். விளையாட்டுத்தனம் நிறைந்த அந்தக் கண்களில் உண்மையான வருத்தம் கண்டிருந்தது.

"கொஞ்சம் தான்."

"இங்கேயே ஒக்காந்துக்கினு இருப்பியா?"

"ஊம்."

"சரி. நான் போவட்டுமா?"

"செய்" என்று அவளை அனுப்பி வைத்தான் ஜீவானந்தம். அவர்கள் இருவரும் பிரிந்து சென்றதும் எந்தக் கட்டுகளுமற்ற அவன் மனம் 'ஹோ'வென்று பொங்கி எழுந்தது. கரையின் மீது நுரையைத் துப்பி விட்டுத் திரும்பி ஓடும் அலை போல் அவன் நினைவுகள் சீறின. அந்த அலையோசையில் செயலற்றுச் சிறுகச் சிறுக அமிழ்ந்து விட்டான் ஜீவானந்தம்.

ஜீவானந்தத்தின் பழைய நாட்கள்.

அநாதையான அவன் ஆம்பூர் கஸ்பாவில் மாமா வீட்டில் தங்கிப் படித்துக் கொண்டிருந்தது....அடுத்தடுத்த இரண்டு மாடி வீடுகளில் பக்கத்து மாடி வீட்டில் கங்காவின் குடும்பம் வசித்தது.....இனிமை வாய்ந்த அநேக தினங்கள்....ஆகியவைகளெல்லாம் அவன் அகக் கண்ணில் பிலிம் சுருள்போல் வேகமாக ஓடின.

ஜீவானந்தத்தின் மாமா பாலகிருஷ்ண முதலியார், ஆம்பூரில் ஒரு பெரிய தோல் கிடங்கில் கணக்குப் பிள்ளையாக வேலை பார்த்து வந்தார். முப்பது வயதுக்கு மேல் அவர் கல்யாணம் செய்து கொண்டதால் ஜீவானந்தம் அங்கே படிக்கப் போய்ச் சேர்ந்தபோது குஞ்சும் குளுவானுமாக அவருக்கு அரை டஜன் குழந்தைகள். அவருக்கு ஜீவானந்தத்தின் பேரில் மிகவும் பிரியம். மாடியையும் அதிலிருந்த அறையையும் அவனுக்காகவே ஒழித்துக் கொடுத்து விட்டார். அந்த வீடும் சரி, அதற்கு அருகிலிருந்த இன்னொரு மாடி வீடும் சரி பழங்காலத்து முறையில் கட்டப்பட்டவை. மாடியிலிருந்து கீழே எட்டிப் பார்க்கக் கொஞ்சம் இடத்தை நடுவில் விட்டு விட்டு மற்ற நான்கு பக்கங்களிலும் கம்பிகள் பொருத்திச் சுவர் எழுப்பியிருப்பார்கள்.

அவன் பள்ளிப் படிப்பையெல்லாம் முடித்து விட்டு, ஆம்பூருக்குப் பக்கத்திலுள்ள வாணியம்பாடியில் கல்லூரியில் சேர்ந்திருந்த நேரம் அது. பக்கத்து வீட்டுக்குப் புதிய குடித்தனக்காரர்கள் வந்திருப்பதை அறிந்திருந்தான். ஆனால் யார் இன்னாரென்று தெரியாது.

அன்று அதிகாலை வழக்கம் போல விளக்கைப் போட்டுக் கொண்டு படித்துக் கொண்

# சிக்கனமாகவே அவள் குடித்தனம் நடத்தினாள்...

செலவினங்களைக் கட்டுப்படுத்தி, கணவனுக்கு அனுசரணையாக இருந்தாள் அவள். ஆயினும் ஒரு விஷயத்தில் சற்று கவனக்குறைவாக இருந்து விட்டாள். தான் வாங்கிய பருத்தித் துணியில் 'ஸான்ஃபோரைஸ்ட்' முத்திரை இருக்கிறதா என்பதைக் கவனிக்கவில்லை. முடிவு ! ஒரேயொரு சலவைக்குப்பிறகு அவளுடைய புதுச் சேலை சுருங்கிப் போய்விட்டது.

யார் கூறுவதையும் நம்பிவிடாதீர்கள். நீங்கள் வாங்கும் பொருள்கள் முழுப்பயனளிக்குமா என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்—

லேபில மேல் ·SANFORIZED·

என்ற முத்திரையுள்ளதா

உடைகள் உடம்புக்குப் என்று பாருங்கள், உங்கள்

பொருந்தாதபடி சுருங்காது.

விவரங்களுக்கு : 'ஸான்ஃபோரைஸ்ட்' ஸர்விஸ்,
95, மெரீன் டிரைவ, பம்பாய்-2

SAN.277A TAM

டிருந்தான் ஜீவானந்தம். மனம் லயித்துப் படித்துக் கொண்டிருந்த ஜீவா, பட்டென்று பக்கத்து வீட்டு மாடியில் மின்சார விளக்கு போடப்பட்டதையும் வளையல் ஓசையும் கேட்டுத் திரும்பினான். இந்த வீட்டு மாடியிலிருந்தவாறே பக்கத்து மாடியை நன்கு பார்க்க முடியும். விடியலின் வெளுப்பில் தோய்ந்த பொன் போல் பிரகாசிக்கும் மின்சார வெளிச்சத்தில் ஈரத் தலையை ஆற்றியவாறே ஒரு துண்டைக் காயப் போட்டுக் கொண்டிருக்கும் ஓர் இளம் பெண் அவன் கண்ணில் தென்பட்டாள். ஜீவா அதிசயமும் குறுகுறுப்பும் மனத்தில் நிலவச் செயலிழந்து பார்த்துக் கொண்டேயிருந்தான். சிவந்த மேனியும் ஒரு கம்பீரமான சாந்தமும் முகத்தில் நிலவ, அடர்ந்திருந்த கூந்தலைச் சுமையை யாய் அவிழ்த்து விட்டு, ஆடிய இளங்காற்றில் அதை ஆற்றிக் கொண்டிருப்பது, மஹா கங்கை பகீரதன் தவத்திற்காக வானின்று இறங்கி வந்தது போல் அவனுக்குத் தோன்றிற்று. அப்படி ரவிவர்மாவின் படம் ஒன்றை அவன் பார்த்திருக்கிறான்.



அவளுடைய நீண்ட விழிகள், காற்றின் இலேசான கொஞ்சலை அனுபவிப்பது போல் சற்றே மூடியிருந்தன. இதழ்களில் ஒரு புன்முறுவல். ஜீவா பார்ப்பதை அவள் கவனிக்கவில்லை. எனவே அவளுடைய முழு சௌந்தர்யமும் அந்தக் காலை வேளையில் சுவேச்சையோடு விகசித்தது.

அதற்குள் வீதியில் பாடிக் கொண்டு போகும் ஒரு முஸ்லீம் பக்கிரின் குரல் கேட்டது. அவள் கீழே எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பினாள். ஓர் இளைஞன், ஆச்சரியமான பார்வையோடு தன்னையே பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டு திடுக்கிட்டுத் திரும்பி நடந்தாள். மின்சார விளக்கு அணைந்தது.

ஜீவாவுக்கும் அப்புறம்தான் வேறு நினைவுகள் வந்தன. 'என்னடா இது அசடன் மாதிரி வெறிக்க வெறிக்கப் பார்த்துக் கொண்டிருந்து விட்டோமே! அந்தப் பெண் என்ன நினைத்தாளோ?' என்று வருந்தினான். ஆனால் அன்று காலையில் அவனது ஒவ்வொரு நடவடிக்கையிலும் ஒரு புத்துணர்ச்சி பாய்ந்திருந்தது. விடிகாலையில் கண்ட அந்த நேர்த்தியான சித்திரம் அன்றைய தினத்தின் அனேக அலுவல்களுக்கிடையில் அடிக்கடி ஞாபகம் வந்தது.

மறுநாள் காலையில் அவள் அங்கு வரக் கூடும் என்று எதிர்பார்த்தான். மாறாக, கல்லூரிக்குப் போவதற்காக அவன் புறப்பட்ட போது வீதியில் அவளைக் கண்டான். கையில் புத்தகங்களை அடுக்கியவாறு, பள்ளிக்குச் சென்று கொண்டிருந்தாள். அடக்கமான பெருமிதம் கலந்த தளிர் நடையும், சற்றே தாழ்ந்த முகமுமாக அவளைப் பார்க்கப் பார்க்க ஜீவாவுக்கு முந்தின நாள் காலையின் ஆச்சரியம் சற்றும் மாறவில்லை. நிதானமான நடையோடு அவள் பஸ் ஸ்டாண்டை அடையும்போது அவன் அவளைக் கடந்தான். நினைவில் கல்வெட்டுப் போல் அந்த முகமும் நடையும் பதிவாகி விட்டன.

அவர்களுக்குள் ஒருவர் இதயத்தின் பாஷை எப்படி மற்றவரால் புரிந்து கொள்ளப்பட்டது என்று இருவருக்குமே தெரியாது. சிறிது நாட்களில் பார்வையிலும், உதடுகளிலும் ஒரு சௌஜன்யம் நிலவத் தொடங்கியது. ஜீவானந்தம் இளமையின் வசந்த வேளையில் இருந்தாலும் அவனுக்கு மற்றவர்களைப் போல் அனாவசியமான மனக் கிளர்ச்சிகள் ஏற்பட்டதில்லை. அநாதையாக மாமா வீட்டில் தங்கிப் படிக்கிறோம் என்ற எண்ணமும், வாழ்க்கையில் முன்னுக்கு வரவேண்டும் என்ற உள்ளத் தீயும் அதற்குக் காரணமாக இருந்திருக்கலாம். பக்கத்து வீட்டில் குடி வந்திருக்கும் யுவதியின் பெருந்தன்மையான தோற்றமும், அருளும் மனத்தின் பிரகாசம் கலந்த புன்னகையும், அவனையறியாமல் அவன் வாழ்வில் ஒரு புது விறுவிறுப்பை ஏற்படுத்தின.

அதிகாலை நேரத்தில் படிப்பதற்காக அவன் புத்தகத்தை விரித்துக் கொண்டு உட்காரும் போது, தலைக்குக் குளித்து விட்டு அவள் தலையை ஆற்றிக் கொள்ள வருவது நித்திய நிகழ்ச்சியாயிற்று. அவர்கள் மத்தியில் சம்பாஷணை இல்லை. ஏன் இருவர் குரலுமே இருவருக்கும் சரியாகத் தெரியாது. யாராவது கீழே இருந்து கூப்பிட்டால் 'இதோ வர்றேன்' என்று அவள் போவாள். வெளியில் வீதியில் எப்போதாவது ஓரிரண்டு வார்த்தைகளை அவன் யாரோடாவது பேசும்போது அவள் கேட்டிருப்பாள்.

இரண்டு கஜ தூரத்தில் அவர்கள் நெஞ்சின் ஆசைகள் வளர்ந்தன. வெறும் பார்வையிலும், கன்னியமான சிரிப்புகளிலும், ஒப்பற்றதும் சத்தியமானதுமான பிரேமை ஆடம்பரமின்றி வளர்ந்து வந்தது. பின்னும் பேச்சுவாக்கில் அத்தை மூலமாக அவளைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டான் ஜீவானந்தம். அவள் மஹாராஷ்டிர குடும்பத்தைச் சேர்ந்தவள். அவளுடைய அப்பா ஒரு சப்-ரிஜிஸ்டிரார். மிகவும் நல்லவராம். அவள் பெயர் கங்கா. பெயரைக் கேட்டதும் ஜீவானந்தம் திடுக்கிட்டான். அவளைக் கண்ட முதல் சந்தர்ப்பத்தில் அவளுடைய அழகும்

பெருந்தன்மையும் எந்தத் தொனியில் அவன் நெஞ்சில் அலையெழுப்பினவோ அதற்கு ஒத்தாற் போலவே அவள் பெயரும் கங்கா தான் என்று கேள்விப்பட்டது அவனுக்கு ஆச்சரியத்தை உண்டுபண்ணிற்று. கங்காவுக்கு அப்புறம் நித்யா என்றும் ராதா என்றும் இரண்டு சகோதரிகள் இருப்பதாகவும் இரண்டு பிள்ளைகள் படிப்பதாகவும் அறிந்து கொண்டான்.

விடுமுறை நாட்களில் தென்னந்தோப்புக்கள் அடர்ந்த பாலாற்று மணலில் படிக்கப் போகிறவன் இப்போது மாடியிலேயே விழுந்து கிடந்தான். அவளும் கீழே உள்ள குழந்தைகள் கூச்சலுக்காக, மேலே படிக்க வருவாள். இருவரும் முழுக்க ஒரு பக்கம் படிக்க மாட்டார்கள். அதற்குள் நிமிர்ந்து பார்ப்பார்கள். ஜீவானந்தம் பார்ப்பதை அறிந்து வெட்கத்துடன் இங்கிதமான புன்முறுவல் மலர, கங்கா தலையைக் கவிழ்த்துக் கொள்வாள். ஜீவாவும் தன் அடக்கமின்மைக்காக லஜ்ஜையடைந்து புத்தகத்தில் மனத்தைப் பதிய வைப்பான். எதுவும் அதிக நேரம் நிற்காது. பளபளவென்று பளிங்கு போல் மின்னும் கங்காவின் கருவிழிகளில் எழுதிக் காட்டப்படும் அவளுடைய மன உணர்ச்சிகளை அலுக்காமல் ஜீவா பார்த்துக் கொண்டிருப்பான்.

இந்த நிலை அதிக நாட்கள் நீடிக்கவில்லை. மணிக்கூண்டு சம்பவத்துக்கு அப்புறம் கங்காவின் வீட்டுக்குச் சென்று படிக்கவும், போக வரவும் சந்தர்ப்பம் வாய்த்து விட்டது. அன்று காலை காலேஜுக்குப் போக பஸ்ஸை எதிர்பார்த்துக் கொண்டு ஜீவா நின்று கொண்டிருந்தான். ஏனோ கங்கா அன்று தாமதித்து வந்தாள். பஸ் ஸ்டாண்டுக்குள் இருக்கும் மணிக்கூண்டில் மணி பார்க்கிற சாக்கில் ஜீவாவைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே நடந்தாள். இடப்புறம் வந்த பஸ்ஸை அவள் கவனிக்கவில்லை. எதிரில் வந்த சைக்கிளைத் தான் கண்டாள். அதற்கு வழிவிட ஒதுங்கியபோது, பின்னால் ஹாரன் ஓசை கேட்டது. திகைத்துத் தடுமாறினாள். அதற்குள் சைக்கிள்காரன் பிரேக் பிடிக்க முடியாமல் வந்த வேகத்திலேயே அவள் மீது மோதி விட்டான். கங்கா தடுமாறிக் கீழே விழுந்து விட்டாள். நடுச் சாலையில் புத்தகங்கள் சிதறின. அவள் புத்தகத்தை எடுப்பதற்குள், தன் பேரில் தப்பு வராமல் இருக்க சைக்கிள்காரன் 'கன்னா பின்னா' வென்று பேச ஆரம்பித்து விட்டான்.

"ஏம்மா, கண்ணு தெரியல்லே. நான்தான் எதிரிலேயே மணி அடிச்சுக்கிட்டு வர்றேன். நீ நடு ரோட்டிலே டான்ஸ் ஆடிக்கிணு இப்படியும் அப்படியும் நடக்கிறயே. ஒரு ஓரமாப் போவறது தானே?" என்று இஷ்டம் போல் பேசிக் கொண்டு போனான்.

ஜீவானந்தம் அவசரமாக அங்கே போனான். கங்கா தலைகுனிந்து கொண்டு புத்தகங்களை எடுத்துக் கொண்டிருந்தாள். கண்களில் நீர் கலங்கி விட்டது என்று உதடுகள் துடிப்பதிலேயே தெரிந்தது.

"யோவ், யாரய்யா காட்டானா இருக்கிறே! அவங்க பேரிலே மோதிட்டது இல்லாமே மெரட்டிக்கிட்டு நிக்கறயே? ஏதோ தவறி நடந்துட்டதுன்னு விடாமே, பெண் கன்னு கூடப் பார்க்காமே நடுரோட்டிலே கேஸ் விசாரிச்சுட்டுக் கூட்டம் கூட்டறியே? போய்யா சரிதான்" என்று அவனை விரட்டி விட்டுக் கீழே விழுந்திருந்த புத்தகங்களைப் பொறுக்கிக் கொடுத்தான் ஜீவா.

கங்கா நன்றி ததும்ப பார்த்தவாறு அவன் கையிலிருந்த புத்தகங்களை யெல்லாம் வாங்கிக் கொண்டாள்.

"உங்களுக்கு அடிபட்டு விட்டதா கங்கா?" என்று கேட்டு விட்டான். அவள் பெயரை உச்சரிக்கிறோம் என்ற பிரக்ஞையில்லாமல், நெஞ்சில் சதா ஒலித்துக் கொண்டிருந்த அந்தப் பெயர் தானாக வந்து விட்டது.

அவள் நாணத்துடன் தலையைத் தாழ்த்திக் கொண்டு "இல்லை" என்று சிறு குரலில் சொன்னாள்.

"உங்களுக்கு ஆட்சேபனை இல்லையென்றால் பள்ளிக்கூடம் வரையில் நான் வரலாமா?"

அதற்கு என்ன பதில் சொல்வது என்று அவள் தீர்மானிப்பதற்குள் ஜீவா அவளோடு நடக்கத் தொடங்கினான்.

"ஹிந்து ஹைஸ்கூல் தானே!"

"ஆமாம்" என்றாள் கங்கா.

"என்ன படிக்கிறீர்கள்?"

"எஸ். எஸ். எல். ஸி."

"ஓ! தனியாக வருகிறீர்களே. தம்பி தங்கைகள் எல்லாம் ..... "

"அவர்கள் கன்காரிடியாவில் படிக்கிறார்கள்...."

முன்னால் பள்ளிக்குச் செல்லும் மாணவிகள் கும்பல் ஒன்று போய்க் கொண்டிருந்தது. கங்கா அவர்களைக் கண்டதும் அவனுக்கு மட்டும் கேட்கும் மெல்லிய குரலில் வினயத்துடன், "நான் அவர்களோடு சேர்ந்து கொள்கிறேன். ரொம்ப நன்றி. இரண்டு பேரையும் பார்த்தால் ஏதாவது வித்தியாசமாக நினைப்பார்கள்!" என்றாள்.

"சரி, வரட்டுமா எனக்கும் பஸ் வந்து விட்டது!" என்று விடைபெற்றுக் கொண்டான் ஜீவா.

அன்று மாலை வாணியம்பாடியிலிருந்து திரும்பியதுமே, பக்கத்து வீட்டில் கூப்பிட்டனுப்பியதாக ஒரு பையன் வந்தான். ஜீவானந்தம் போனான். நெற்றியில் இலேசான விபூதியுடன் சிவந்த மேனியும் புன்னகை செய்யும் கண்களுமாக ஐம்பதுவயது மதிக்கத்தக்க மனிதர் ஒருவர் உட்கார்ந்து ஒரு பைபிளைப் புரட்டிக் கொண்டிருந்தார்.

"நமஸ்காரம்" என்று கைகளைக் கூப்பினான் ஜீவானந்தம்.

"ஓ! வாங்க நமஸ்காரம். நீங்கதான் பக்கத்து வீட்டுப் பிள்ளையா. காலையிலே மணிக்கூண்டுகிட்டே நடந்ததைப் பற்றிக் கங்கா சொன்னாள். உட்காருங்கோ ஸார். கூச்சப்படறீங்களே. என்ன ஸார் இந்தக் காலத்து காலேஜ் பிள்ளைங்களெல்லாம், ஊரையே கலக்கறாங்க. நீங்க பக்கத்து வீட்டிலே இருக்கிறதும் தெரியறதில்லே, போறதும் தெரியறதில்லே. அட உட்காருங்க ஸாருன்னு...." என்று வலுக்கட்டாயப்படுத்தி உட்கார வைத்தார்.

பிறகு அன்று இரவு ஒன்பது மணிக்குத்தான் வீட்டுக்குத் திரும்பினான் ஜீவானந்தம்.

"பக்கத்திலே தானே இருக்கிறீங்க. அடிக்கடி வீட்டுக்கு வாங்கோ ஸார். இந்தச் சின்ன வயசிலே எவ்வளவோ விஷயம் தெரிஞ்சுகிண்டு இருக்கீங்க. அடிக்கடி வாங்க. ஏதாச்சும் வாழ்க்கையிலே பெரிசா செய்ய முடியல்லேனு

னும் பெரிசாவது பேசிட்டிருப்போம். என்ன வர்றீங்களா? சொல்லுங்கோ ஸார். எனக்கும் ஆபீஸ் ரெகார்டுகளோட மாரடிச்சுட்டு வீட்டுக்கு வந்தால் ஒடம்பு நொறுக்கப் போறது. உற்சாகமாப் பேசறத்துக்கு ஆள் இருந்துட்டா நான் அவங்களை விடத் தயாரில்லே'' என்று விடை கொடுத்து அனுப்பினார் வெங்கோஜி ராவ். மிகவும் நல்ல மனிதர். மனதில் கல்மஷமின்றிக் குஷியாக வயது, அந்தஸ்து பாராமல் பேசினார். அவர் பேசப் பேச உட்கார்ந்து கேட்டுக் கொண்டே இருக்கலாம் போல் தோன்றியது.

அவன் எங்கே வரக் கூச்சப்படுவானோ என்று கருதி, ஆபீஸில் ஏதோ வேலையாக வந்த அவன் மாமாவையும் பார்த்து, ''என் மூன்று குழந்தைகளுக்கும் டியூஷன் சொல்லிக் கொடுக்கணும். உங்க பிள்ளையை அனுப்பி வையுங்க'' என்று சொல்லி விட்டார். கங்கா வீட்டுக் கதவு அவனுக்காகத் திறந்து விடப்பட்டது.

ஒரு மணி நேரம் டியூஷன் — கங்காவுக்கும் கூடத்தான் — நடத்தி விட்டு, ராயரம்மாள் கப்படாத பல நல்ல பண்புகளை அவனுக்குச் சொல்லித் தந்தது. கூடக் கங்காவும் இருந்தாள். மணி விளக்கு குளிர்ந்த சுடர் வீசி ஒளிர்வது போன்ற அவள் புன்னகை இருந்தது.

அந்த நாட்கள் உண்மையில் தெய்வ நாட்கள்தான். வாழ்க்கையில் எந்த மூலையிலிருந்தாலும், எந்தத் தேசத்திலிருந்தாலும் புராதனமான அந்த வீட்டில் வசித்த நாட்களை, பண்பாடு மிக்க வெங்கோஜி ராவின் குடும்பத்தை இலேசில் மறக்க முடியாது. எப்போது நினைத்தாலும் சிரித்த உருவமும் கம்பீரமான தோற்றமுமுள்ள ராயர் தம்பதிகள் அவன் மனத்துக்கு நிழல் தரும் விருட்சங்கள் போல் தென்பட்டார்கள். குறும்பும், பாசமுமுள்ள நித்யா, குழந்தைகள் கணேஷும், தாமோதரும் இவர்களையும் மறக்க முடியாது.

அவர்களுக்கெல்லாம் டியூஷன் சொல்லிக் கொடுக்க ஆரம்பித்த பின் அவர்கள் வீட்டில் அவனுக்கு முழு சுதந்திரம் ஏற்பட்டது. ராவுஜி வேலைத் தொந்தரவுள்ளவரானபடியால், ஏதேனும் கடைக்குப் போவதாயிருந்தாலும், சினிமாவுக்குக் குடும்பத்தை அழைத்



போட்டுத் தரும் அற்புதமான காப்பியை மணக்க மணக்கப் பருகி விட்டு, அவரோடு அரட்டைக் கச்சேரியில் உட்கார்ந்து கொள்வான் ஜீவானந்தம். வானசாஸ்திரத்திலிருந்து வெங்காய ஏற்றுமதிவரை சுவாரஸ்யமாக—பயனுள்ள வகையில் அவர்கள் அரட்டை செல்லும். வெங்கோஜி வம்பு தும்பு என்று வீண் விவாதம் பேச மாட்டார். அவர் ஒரு பல்கலைக் களஞ்சியம். வாழ்க்கையில் நிரம்ப அடிபட்டவர். அவருக்கேற்ற மனைவி. கங்காவோடு ஜீவா தனித்திருந்தால் கூடத் துளியும் தப்பாக எடுத்துக் கொள்ள மாட்டார்கள். ஜீவா அப்படி நடந்து கொண்டான் என்பதோடு அவர்களும் அவ்வளவு தங்கமானவர்கள்.

டியூஷன் நேரத்திலேயே கங்காவோடு பேச வேண்டியதை எல்லாம் கலகலப்பாகப் பேசி விடுவான். அந்தப் பெருந்தன்மையான வீட்டில் அவனுடைய மனம் இன்னும் பிரகாசமடைந்தது. வெங்கோஜியின் குடும்பமே, மௌனமாகக் கல்லூரியில் சொல்லிக் கொடுக்

துப் போவதாயிருந்தாலும், ஜீவா தான் போவான். மாமா வீட்டில் அதற்கு ஏதும் நல்ல காலமாக ஆட்சேபணை எழும்பவில்லை. ராயரம்மாவே ஒரு தடவை வாய் விட்டுச் சொல்லி விட்டாள்.

''ஏண்டா, ஜீவு, நீ எங்க வீட்டுப் பிள்ளையாய் இல்லாமே போயிட்டியே. பேசாமே கண்ணை மூடிக்கொண்டு கங்காவை உன் கையிலே ஒப்படைச்சுட்டு மறு வேலை பார்ப்பேனே'' என்று ராயரம்மாள் சிரித்தவாறே அங்கலாய்த்துக் கொண்டாள். ஜீவா, கங்காவைத் திரும்பிப் பார்த்தான். கண்கள் சந்தித்தன. நாணம் ததும்பக் கங்கா தலையைத் தாழ்த்திக் கொண்டாள்.

எந்தவிதத் தடைகளுமில்லாமல் கானகத்தில் முற்றிக் காய்ந்த சருகுகளிடையில் தீயைக் குடி வைத்துச் சந்தர்ப்பக் காற்றும் வீசவே காதல் சுவேச்சையாகப் பற்றித் தொடங்கி விட்டது. இப்படி ஒன்று நேர்ந்து விடக் கூடாது என்று பொதுவாக எல்லோரும் எதிர்

கும் பயப்படுவார்களோ. அதற்கு ராவுஜி ஜீவானந்தத்தின் குண விசேஷத்தைப் பார்த்து, பயப்படாமல் நம்பிக்கையோடு இருந்தார். ஆனால் ஜீவாவின் உள்ளத்தில் கங்கா என்ற காதல் ஜோதி எந்நாளும் அணையாத உன்னத ஜோதியாய்ப் பிரகாசிக்கத் தொடங்கி விட்டது.

பின்னர் ஒருநாள் ராவுஜியின் கண்களுக்கும் அது தென்பட்டது; உணர்த்தப்பட்டது. ஜீவா கண்ணியமாகவே நடந்து கொண்டான். ஆகவே எந்த விஷயமும் அவர் நெஞ்சில் படவில்லை. கங்காவைப் பெண் பார்க்க வருவதாக யாரோ கடிதம் எழுதி இருந்தார்களாம். முதலில் திருமணமே வேண்டாம் என்று மறுத்தவள் பிறகு அப்பாவிடம் வெட்கத்துடன் ஜீவாவைப் பற்றிச் சொல்லி விட்டிருக்கிறாள். அன்றைக்கு டியூஷனுக்குப் போனபோது ராவுஜியே வீட்டிலிருந்தார்.

"வா ஜீவு" என்று அவனைத் தம் அறைக்கு அழைத்துக் கொண்டு சென்று விட்டார். பின்பு சிரித்த முகத்துடனேயே விஷயத்தை ஆரம்பித்தார்.

"ஜீவு! சின்ன வயசிலே வயசுக்கு ஒத்த அழகான ஆசைகள் எத்தனையோ ஏற்படலாம். அது நிறைவேற முடியாதுன்னு தெரிந்தாலும் வயசும் மனமும் பிடிவாதத்தை விடாது. நான் எதையும் வெளிப்படையாகச் சொல்லி விடுவேன். சமூகக் கட்டுப்பாடு, அதன் வரம்பு. இவைகளெல்லாம் ஆயிரமாயிரம் வருஷங்களா மனுஷ மனசிலே ஊறிப் பழகிப் போனவை. அவைகளெல்லாம் மாறி முன்னேறணும்ன்னு 'அது அவ்வளவு லேசா? நீ சொல்லு."

அவர் பேச்சின் பீடிகையே அவர் எதைச் சொல்ல வருகிறார் என்று தெளிவாக்கி விட்டது. அதைப் புரிந்து கொண்டாலும் நியாய உணர்ச்சியோடு ஜீவா பேசத் தொடங்கினான்.

"நான் ஒப்புக்கறேன், ஸார். ஆனா மாற்றம்..... புரட்சின்னுல்லாம் வேண்டாம் நாம். அதற்கு ஊக்கந் தராட்டா அந்தச் சமூகக் கட்டுப்பாடு எப்படித் தானாக அகல முடியும்?"

"தர்க்கரீதியா நீ சொல்றது சரி. ஆனால் சமூக மனப்பான்மை என்பது வளர்ச்சி பெறாத வரைக்கும் ஒரு தனி மனிதனின் எந்தத் துணிச்சலான காரியத்திலும் ஈடுபடறது சமூக விரோதமாகத்தானே நினைக்கப் படறது! சமூகம். இந்தக் கட்டுப்பாடுகளை யெல்லாம் ஒரு நன்மையை உத்தேசித்து விதிக்கிறது. அதன் கருத்துப்படி இது நியாயம். அந்தச் சமூகத்தைச் சேர்ந்த, பண பலமோ ஆள் பலமோ இல்லாத ஒருத்தன் தீவிரமா இருந்தால் அது அவனை அல்லது அவன் குடும்பத்தை நிராகரிக்கிறது."

அவர் பேச்சின் நியாயத்தை உணர்ந்து ஜீவா மௌனமாயிருந்தான்.

"கங்கா தேடி வர இருந்த ஒரு சம்பந்தத்தைப் பிடிவாதமாக உதறிவிட்டு உன்னைத்தான் கேட்கிறதாக என்கிட்டே சொன்னாள். ஜீவு! உண்மையிலேயே சொல்றேன், எனக்குத் தர்ம சங்கடமாப் போச்சு. என் பெண்ணை உனக்குக் கொடுக்கறதிலே எனக்கு எவ்வளவு சந்தோஷம் தெரியுமா? துரதிர்ஷ்டவசமா நான் ஒரு மகாராஷ்டிரன். எனக்குக் கங்கா ஒரே பெண்ணாயிருந்தாளானாலும்- முன்னே சொன்னேன் பாரு - அந்த மாதிரி சமூகத்திலே ஒரு இளைச்சிக்காரனாக, உன்னைப் போன்ற ஒரு நல்ல மாப்பிள்ளைக்காக இருந்து பார்ப்பேன். கங்காவுக்கு அப்புறம் நித்யா இருக்கா. அவளுக்கும் விவாகமாக வேண்டும். நான் என்ன செய்வேன்? நீ சொல்லு. என்னைப் போல் ஒரு தகப்பன் ஸ்தானத்திலே நின்னு நீ யோசிச்சுப் பார்."

பகிரங்கமாக அவன் விசாரிக்கப்பட்ட போது ஜீவானந்தத்தினால் ஒன்றும் பேச முடியவில்லை. ராமரம்மாள் புன்சிரிப்புடன் காப்பி கொண்டு வந்து வைத்தாள்.

"என்னங்க அதைப் பிடிச்சிட்டு விசாரிக்கக் கிட்டு இருக்கீங்க. அது நம்ம பிள்ளை. அதற்கு இத்தனை சொல்லணுமா? 'வாண்டாண்டா, என் பிள்ளைக்கே என் பெண்ணைத் தர முடியாது'ன்னு ஒரு வார்த்தை சொன்னால் ஒப்புக் கொண்டு போகிறான்."

ராமம்மாளின் குளிர்ந்த முகமும், பாசம் நிறைந்த சொற்களும் அவனை இன்னும் வெட்கிக் குன்ற வைத்தன.

"காப்பி சாப்பிடுடா ஜீவு."

அதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியாததால் ஜீவா காப்பி சாப்பிடத் தொடங்கினான். அவன் சாப்பிட்டானதும் "இதனாலே நம்ம நட்பு முறிந்து போயிட்டதாக நீ நினைக்கக் கூடாது ஜீவு. நாளைக்குச் சாயந்திரம் நான் உன்னை இங்கே கட்டாயமா எதிர்பார்க்கிறேன். நீ வரலேன்னா அங்கேயே வந்து உட்கார்ந்துட்டாலும் உட்கார்ந்துடுவேன்" என்று அவர் சிரித்தவாறு மிரட்டினார்.

மனசில் அழுத்தும் பாரத்தால், ஜீவாவின் கண்கள் கலங்கின. அவன் ராவுஜி தம்பதிகளைக் கைகூப்பி வணங்கி விடை பெற்றுக் கொண்டான். மௌனமாகவே அவன் டியூஷன் நிறுத்தப்பட்டு விட்டது. வந்து போகும் பெண்ணைப் போல் கங்காவையும், பருவக் கிறுக்கினால் ஏற்பட்ட உணர்ச்சி என்று அவன் காதலையும் அவன் எப்போதும் கருதியதில்லை. எளிய வார்த்தைகளில் உண்மையான அன்போடு தங்கள் குடும்ப நிலையை எடுத்துக் கூறிய ராவுஜியின் வேண்டுகோளையும் அவனால் நிராகரிக்க முடியவில்லை. பொன்னால் விலங்கிட்டிருந்தாலும் முறித்து விடலாம்; நம்பிக்கை நிறைந்த இதயத்தோடு ராவுஜி அவனுக்குப் பூ விலங்கிட்டிருந்தார். அதை அறுக்க முடியாது. ஜீவாவைப் போல் ஒரு விசுவாசம் நிறைந்த இளைஞன், ஒரு பண்புமிக்க குடும்பத்தால் மிகவும் நேசிக்கப் பட்ட ஒருவன் அதை மீறவும் மாட்டான்.

ஜீவா வாழ்க்கையில் தாய் தந்தையர் இல்லாமையால் எத்தனையோ கஷ்டங்கள் பட்டிருக்கிறான். சொல்லப் போனால் எதிர்பாராத சிக்கலான திருப்பம் இப்போது அவன் எதிரே நின்றது. கங்கா - பழகிக் கொஞ்ச மாதங்களாவதற்குள் அவளை வைத்து அவன் எவ்வளவு கோட்டைகள் கட்டி விட்டான்? நேரிலும் மனதிலும் ஒவ்வொரு நிமிஷத்திலும் உணர்ச்சியினால் நிர்மாணியாது நிதானமாக அவளைப் பற்றிச் சிந்திக்க வேளையெல்லாம் அவனுடைய பிரசன்னம் அவன் வாழ்க்கைக்கு எத்தனை அத்தியாவசியமானது என்று அவனே ஆச்சரியப்படுமளவு, அவள் நிறைவாகி விட்டாள். இன்று அவனே விரும்பினாலும், அவனுடைய ஸ்தானத்திலிருந்து அவளை விலக்க முடியாது.

# இந்த விளக்கு உங்கள் பணத்தை பாழாக் குகிறது



மாற்றி

# Osram

அதிசய விளக்கை பொருத்துங்கள்

அது பிரகாசமான
ஒளியை தருகிறது.




இப்பொழுது 80, 125 வாட்டுகளில் நிறம் சரிப்படுத்தின மெர்குறி வேப்பர் விளக்குகளும் அவசியமான, ஆனால் இப்பொழுது ஏராள மாக கொடுக்க முடியாத OSRAM ப்ளோரசெண்ட் டியூபுகளும், இந்தியாவில் தயாரிக்கப் படுகிறது.

ஒரு G.E.C. தயாரிப்பு

தி ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட் லிட்., GEC/G/253

அவனுக்குப் பைத்தியம் பிடித்து விடும் போல் ஆகி விட்டது.

மறுநாள் காலையில், தலை ஆற்றிக்கொள்ள மாடிக்கு வந்த கங்கா மாடிக் கைப்பிடியைப் பற்றிக் கொண்டு அப்படியே நின்று விட்டாள். சூர்யோதயமாகி இளம் கிரணங்கள், சிவந்து நீர் கலங்கி விட்டிருந்த அவள் கண்களையும், துடிதுடிக்கும் செவ்விதழ்களையும் வெகு அனுதாபத்தோடு தழுவின. இளம் வெய்யில் பிரகாசிக்கும் அந்தச் சோகத்தைத் தாள மாட்டாமல் ஜீவா தலைகுனிந்து கொண்டான். நேரம் வளர்ந்தது. கங்கா கைப்பிடியைப் பற்றியவாறே நின்று கொண்டிருந்தாள்.

"நேரமாகிறது. உள்ளே போ கங்கா!" என்று குரல் கலங்கச் சொன்னான்.

"ஊம், என்ன செய்யப் போகிறீர்கள்?" என்று கண்களைத் துடைத்தவாறே கேட்டாள்.

"அப்பா பேசினதை யெல்லாம் கேட்டாயா?"

"கேட்டுக் கொண்டு தான் இருந்தேன். அவருடைய நியாயம் அவருக்கு. உங்களுக்கும் எனக்கும் எது நியாயம்?"

"கங்கா...." என்று வேகமாகக் கையை நீட்டியவாறு சொல்ல வந்தவன், குளிர் காலத்தில் உறைந்து போகும் மஹா கங்கை போல் உள்ளம் சாம்பி நிற்கும் கங்காவின் தோற்றத்தைக் கண்டு, தன் வேகத்தைக் கட்டுப்படுத்தியவாறு, "கௌரவம் நிறைந்த ராவுஜியின் மகள் நீ. நித்யா, தாமு, கணேஷ், ராதா ஆகியவர்களுக்கு மூத்தவள். நமது விருப்பங்களை நியாயமாக்க முடியுமா?" என்று உருக்கமாய்க் கேட்டான் ஜீவானந்தம்.

"அப்படியானால் நீங்கள் ஒருபுறமும், நான் ஒரு புறமும் வேதனையால் செத்துக் கொண்டிருக்கலாமா?"

"கங்கா...." வருத்தத்துடன் அவளைத் தடுக்கப் போனான்.

கீழேயிருந்து ராயரம்மாளின் குரல் கூப்பிட்டது. "கங்கா....அரீ கங்கா."

"அம்மா கூப்பிடுகிறாள்" என்று அவன் முகத்தை ஏறிட்டுப் பார்த்து விட்டுக் கங்கா கீழே இறங்கிப் போய் விட்டாள். மாலையில் ராவுஜி வீட்டுக்குப் போகவே விருப்பமில்லை. அங்கே போகும் ஒவ்வொரு நிமிஷமும் கங்காவின் உணர்ச்சிகளையும், தன் உணர்ச்சிகளையும் பரிசோதனைக்குள்ளாக்கிக் கொள்வதாகத்தான் ஆகுமென்று அவனுக்கே தோன்றிற்று. ஆனாலும் ஏழு மணிக்கு ராவுஜியே கூப்பிட்டுக் கொண்டு போக வந்து விட்டார்.



"என்னப்பா ஜீவு. நேத்திக்கு அவ்வளவு தூரம் சொல்லி ஏறுப்பிச்சேன். இன்னும் இங்கேயே உட்காந்துண்டு இருக்கியே. வா, வா. மாமி வேறே காப்பி போட்டு வச்சுட்டுக் காத்துக் கொண்டிருக்கா" என்றார்.

அதை மறுப்பதுதான் தவறாக அவனுக்குத் தோன்றிற்று. வேதனையோடு அவர் கூட நடந்தான்.

"என்னடா ஜீவு! பொண்ணைத் தராத இந்த மனுஷான் முகத்திலேயே விழிக்கிறதில்லைன்னு தீர்மானம் பண்ணிட்டியா? ஏன்டா கொழந்தே. நீயே ஒதுங்கிட்டாலும் நாங்க சும்மா இருந்துடுவோமா? இந்தா எங்க மஹாராஷ்டிர பட்சணம் சந்தேஷாம், பர்பியும். ஒனக்காகப் பண்ணியிருக்கிறேன். மாப்பிள்ளை முறுக்கெல்லாம் பண்ணிக்காமெ சாப்பிடு. நீ வராமே எங்களவர் சாதகப் பட்சி மாதிரி தவிச்சுப் போயிட்டார். அவரும் தான் தம் பிரதாபத்தை யெல்லாம் யாரு கிட்டே கொட்டுவார்? நான் பொம்மனாட்டி. அடுப்பங்கரையாச்சு. அண்டை வீடாச்சு. பிள்ளைகளுக்கெல்லாம் அப்பா கதை பிடிக்காது. நீ ஒருத்தன் வசமாகச் சிக்கிட்டிருக்கே. அந்தனை லேசிலே உன்னை விடுவாரா?" என்று சிரிப்பும் குறும்புமாக நிலைமையைச் சுவாதீனப் படுத்தினாள் ராயரம்மாள்.

"அடியே....அடியே!" என்று சிரித்தவாறு கிழவர் கையை ஓங்கிக் கொண்டு எழுந்தார்.

இவர்கள் வீட்டிலிருந்தால் மாறாத பாசமும் அன்பும் நிலவும். இந்த வீட்டிலிருந்தா கங்காவை இஷ்ட விரோதமாக நான் கொண்டு போக முடியும்? நெஞ்சு பொருமிப் பொருமிச் சக்தி யிழந்து வந்தது. ராயரம்மாள் காப்பியை வைத்துவிட்டுப் போனாள்.

"என்ன ஜீவு! இதெல்லாம் வாழ்க்கையிலே ரொம்ப சகஜம். இந்தமாதிரி பிரச்னைகள் கூட இல்லேன்னா, அப்புறம் எதுதான் இருக்கு? இதுக்காக மனசு சங்கடப்படப்படாது. விஷயம் இப்படின்னு தெரிஞ்சுக்கிட்டியா, சரி, அதற்கேத்த மாதிரி நடந்துக்கணும். இதைதான் பெரிசா எடுத்துக்காதப்போ நீ ஏன் அவஸ்தைப் படறே?" என்று தெம்பூட்டினார்!

காப்பியைச் சாப்பிட்டானதும் "கங்கா, இந்தப் பாத்திரங்களை வந்து எடுத்துப் போ, அம்மா!" என்று மராட்டியில் கூறினார்.

கங்கா தலை குனிந்தபடியே பாத்திரங்களை வந்து எடுத்துச் சென்றாள். ராவுஜி அறியாமலா, இல்லை வேண்டுமென்று தானா இப்படி எல்லாம் அக்னி பரீட்சை செய்கிறார் என்று அவனுக்குத் திகைப்பாக இருந்தது. வெகு நேரம் வரையில் அவனைச் சம்பாஷணையில்

சுவாரசியமாக ஈடுபட வைத்து விட்டுத்தான் அனுப்பினார்.

தினசரி ராவுஜியின் வீட்டுக்குப் போவது தவறவில்லை. ஆனால் இப்போது அவர் அறையோடு சரி. முன் போல் வீட்டுக்குள்ளே நுழைந்து எல்லோரிடமும் கலகலப்பாகப் பேசுவதென்பது அவனாலேயே முடியாமற் போய்விட்டது. ஆனால் காலை வேளைகளில் மாடிச் சந்திப்பு நிகழ்ந்து வந்தது. எவ்வளவு துக்கத்தை வெளியிட முடியுமோ, அவ்வளவு கங்கா வெளியிடலானாள். கொஞ்சநாட்கள் தேற்றிப் பார்த்தான். தன்னையே ஏமாற்றிக் கொண்டு நியாயம் கூறிப் பார்த்தான். எல்லாம் வீணான பின், மௌனமாகக் கண்ணீர் விட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கலானான். கங்கா திட்டவட்டமாக வேறு யாரையும் திருமணம் செய்துகொள்ள முடியாது என்று தெரிவித்தும் விட்டாள். அந்த நேரத்தில் அவளை யாரோ பெண் பார்க்க வந்திருந்தார்கள்.

கங்கா என்ன செய்யப் போகிறாளோ என்று பயந்தவாறே தான் ஜீவா கல்லூரிக்குச் சென்றான். வீடு திரும்பியதும், முகம் கழுவிக் கொண்டு ராவுஜி வீட்டுப் பக்கமாகப் போனான். இன்னும் வந்தவர்கள் போகவில்லை. அன்றிரவு சீக்கிரமாகவே தூங்கி விட்டான். அவன் மாடியில் தான் படுத்துத் தூங்குவது வழக்கம். ஏதோ ஓர் அகால வேளையில் திடுக்கிட்டு விழித்தான்.

''ஜீவா.. ஜீவா....'' என்று மிக மெல்லிய குரல் ஒன்று அவனை அழைத்தது. ஆச்சரியத்துடன் எழுந்து பார்த்தான். நிலவொளி வீசிக் கொண்டிருந்தது. கனவு மோகினி போல் தலையில் ஒரு முக்காட்டுடன் அடுத்த மாடியில் கங்கா நின்று கொண்டிருந்தாள்.

''என்ன கங்கா?'' என்று கலக்கத்தோடு கேட்டான்.

''கீழே இறங்கி வாருங்கள்'' என்றாள்.

ஜீவானந்தம் திகைத்தவாறு ஓசை செய்யாமல் கீழே இறங்கி வந்தான். கையில் ஒரு பையுடன் தயாராகக் காத்திருந்த கங்கா அவன் வந்ததும், கையைப் பிடித்துக் கொண்டு விடுவிடென்று ஒரு கோவில் அருகில் அவனை அழைத்துச் சென்றாள்.

''ஜீவா!'' என்று கோயிலை நெருங்கியதும் அவன் தோளின் மீது முகத்தைச் சாய்த்துக் கொண்டு விம்மி விம்மி அழலானாள்.

''தயவுசெய்து, எனக்காக என்ன விஷயம் நடந்ததென்று சொல்ல மாட்டாயா? எங்கே சொல்லு! சொ ல் லு !'' என்று அவள் முகத்தை இரண்டு கரங்களாலும் ஏந்திக் கெஞ்சினான் ஜீவா.

''என் மனப்பூர்வமாக உங்களுக்கு என்னை ஒப்படைத்து விட்ட பிறகு, அடிக்கடி நடக்கும் இந்தப் பெண் பார்க்கும் நாடகத்தில் நான் நடித்துக் கொண்டே இருக்க வேண்டுமா?''

ஜீவானந்தம் அதற்குப் பதில் சொல்லவில்லை.

''நீங்கள் என்ன பதில் சொல்வதாயிருந்தாலும், நான் மாட்டேன் ஜீவா. போதும் இந்த நரக வேதனை. உங்களையே முழுக்க நம்பிக் கொண்டு புறப்பட்டு வந்து விட்டேன், வீடு வாசல், அம்மா, அப்பா, சகோதரிகள் எல்லாரையும் துறந்து விட்டு. கொண்டு போய்க் கிணற்றில் தள்ளுவதாயிருந்தாலும் தள்ளி விடுங்கள். இனி என் மன வேதனைகளை என்னால் சகித்துக் கொண்டிருக்க முடியாது.''

''கங்கா!'' என்று சற்று உரக்கவே, தூக்கத்தில் நடமாடுபவளை உலுக்கி எழச் செய்வது போல், அவள் தோள்களைப் பற்றி உலுக்கி, ''உனக்குப் பைத்தியம் பிடித்து விட்டதா? உங்க அப்பா என்னை எவ்வளவு நேசிக்கிறார் தெரியுமா? அவர் என்னை கேவலமான ஈனப் பிறவியென்று தம் நல்ல உள்ளம் நோகக் காறித் துப்ப வேண்டுமா? உன் உணர்ச்சிகளைப் பற்றி நீ பெரிதாக மதிக்கிறாயே ஒழிய உனக்கப்புறம் நித்யா இருப்பதை அடியோடு மறந்தே போய் விட்டாயா? உன்னைக் கிணற்றில் தள்ளும் அதிகாரமோ, உன்னை எங்காவது அழைத்துக் கொண்டு செல்லும் அதிகாரமோ எனக்குக் கிடையாது. வீட்டுக்குத் திரும்பிப் போய் விடு. ராவுஜியின் மகளா இப்படி என்று எனக்கே மனம் திடுக்கிடுகிறது.''

''ஜீவா, ஐயோ ஜீவா...!'' என்று அவன் கைகளைப் பிடித்து அதில் முகத்தைப் பதித்துக் கொண்டு அழுதாள். ''நான் உங்கள் சொத்து. நீங்க என்னை என்ன வேணுமானாலும் செய்யலாம்'' என்று சிறு குழந்தை போல் அழுதாள். அவளைச் சமாதானப்படுத்தி, படாத பாடு பட்டு வீட்டுக்குத் திருப்பிக் கூப்பிட்டு வந்தான். கதவைத் தட்டி ராவுஜியை எழுப்பினான்.

பாதி உறக்கத்தில் என்னமோ ஏதோ என்று அவர் எழுந்து வந்தார். கங்காவோடு உள்ளே நுழைந்து, ''ஸார், என்னை மன்னிச்சுடுங்கோ. நான் ஒரு கிராதகன். நீங்க எவ்வளவோ சொல்லியும் வலுக்கட்டாயமாகக் கங்காவை அழைச்சுட்டு ஸ்டேஷன் வரைக்கும் போயிட்டேன். அப்புறமாத்தான் எனக்கும் புத்தி தெளிந்தது. இதோ அழைச்சுட்டு வந்து விட்டேன். என்னை என்ன பண்றதானாலும் பண்ணுங்கோ'' என்றான்.

அவர் கங்காவை உள்ளே அனுப்பி விட்டு, ''ரொம்ப சந்தோஷம் ஜீவு! பொறுப்புணர்ந்த மனுஷனா, கொழந்தையைத் திருப்பி அழைச்சுக்கிட்டு வந்தியே, போதும். இனிமேயும் நான் உன்னோட பழகினா அது எனக்கும் நல்லா இருக்காது. உனக்கும் நல்லா இருக்காது. இதற்கு உன்னைத் தப்பு சொல்றேன்னு அர்த்தமில்லே. வயசு அப்படித்தான். எல்லாத்திலேயும் ஓர் அவசர முடிவு வரும். அது திடீர்னு மாறும். நானும் டிரான்ஸ்பர் கேட்டிருக்கேன். கூடிய சீக்கிரத்திலேயே மாத்திக்கிட்டுப் போயிடுவேன். அகாலமாகி விட்டது. போய்த் தூங்கு போ'' என்று சுருக்கமாகப் பேசி விட்டுக் கதவை அடைத்தார். ஜீவானந்தத்துக்கு அந்த வீட்டின் கதவு மட்டுமல்ல, கங்காவின் மனக் கதவும் அடைக்கப்பட்டு விட்டன. ஆனால் அது அத்தனை சுலபத்தில் அவன் நெஞ்சிலிருந்து மறைவதாயில்லை.

மௌனமாக வீதியில் தலை குனிந்து கொண்டு நடந்து செல்லும் அவன் இதயத்தில் எப்பேர்ப்பட்ட போராட்டமும் எவ்வளவு காயங்களும் நிரம்பி யிருக்கின்றன என்று யாரும் ஊகிக்க மாட்டார்கள். கங்கா அழுது தீர்த்துக் கொள்வாள். ராவுஜி தம்பதிகள் நொந்து தீர்த்துக் கொள்வார்கள். ஆனால் அவன்....?

பாவம் சிறுமி வின்னி! குழந்தைகள் கோஷ்டியிலேயே தனியாக ஒதுக்கப்பட்டதுபோல இருக்கிறாள். ஏன்? அவளது சட்டை பிரகாசம் குறைந்தும் மங்கலாயும் இருப்பதே காரணம்.






இப்பொழுது தாய் ராபின்ப்ளூ உபயோகித்து வருகிறாள் அதன் பயன் துணிமணிகள் தூய வெண்மையாக துலங்குகின்றன பளபள வென்று ஜ்வலிக்கும் உடைகளில் வின்னியின் சந்தோஷம் எவ்வளவென்று கூறமுடியுமா!




ரெக்கிட்ஸ் (ஈஸ்ட்) லிமிடெட் (இங்கிலாந்தில் இணைக்கப்பட்டது)

# குடிகூரா

## ஆயின்ட்மென்ட்

### ஒரு நூற்றாண்டுக்கு மேல் சருமப் பராமரிப்பை அளித்து வருகிறது




நூற்றுப்பத்து வருஷங்கள்!
அவ்வளவு நெடுங்காலந்தான்
குடிகூரா ஆயின்ட்மென்ட்
உலகெங்கிலும் உபயோகிக்கப்
பட்டு வருகிறது.
குடிகூரா ஆயின்ட்மென்ட்
களங்கமேற்படுத்தும் கிருமிகளை
நசித்து. அதனால் கருப்பு மச்சங்
களையும், சருமத்தின் மேலாக
உண்டாகும் பருக்களையும்
எக்ஸிமா சொறியையும் அறவே
நீக்குகிறது; மேலும் அவை
திரும்பத் தோன்றுதபடி பாது
காக்கிறது. அதன் உயரிய கிருமி
நசிக்கும் சக்தியுடைய தைலங்கள்
புண்கள், வெயில் சொறி சிரங்கு
கள், பூச்சிக்கடிகள் இவற்றை
சமனப்படுத்துவதுடன் வெட்டுக்
காயங்களும் கட்ட புண்களும்
குணமாக உதவுகிறது.

**குடிகூரா ஆயின்ட்மென்ட்**

ஒரு டப்பா குடிகூரா டால்கம்
பவுடரையும் வாங்குங்கள்—
அது குடும்ப முழுவதற்குமேற்ற
ஒரு சர்வ-காரிய டால்கம்



NATIONAL CO 3062A

ராவுஜிக்கு மாற்றல் வரும் வரை கூட அவளால் அங்கு இருக்க முடியவில்லை. ஒரு வாரத்தில் மாமாவிடம் சொல்லிக் கொண்டு படிப்பைப் பாதியில் நிறுத்தி விட்டுப் புறப்பட்டு விட்டாள். ஆனால் கங்கா அவன் நெஞ்சில் சாகவில்லை. ஊழிக் காலத்துக்கும் அணையாத செந்தழலாக, அவன் வாழ்வெங்கும் துக்கத்தினால், எரிந்துக் கொண்டிருந்தாள்.

**கா**லடியோசைகளும் பேச்சுக் குரல்களும் கேட்டுத் துப்பாக்கியின் மீது கைகளையும், கைகளின்மீது முகத்தையும் ஊன்றிக் கொண்டிருந்த ஜீவா தலையை நிமிர்த்தித் திரும்பினான். சுட்ட மானைத் தோளில் போட்டுக் கொண்டு, ஜக்கோடன் பின்தொடர ஜான்ஸனும் ராஜவேலுவும் வந்து கொண்டிருந்தார்கள்.

கைக்குட்டையை எடுத்து முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டு வரவழைத்துக் கொண்ட புன்சிரிப்போடு, ஜீவா எழுந்து அவர்களை நோக்கிச் சென்றான்.

"நிஷா எங்கே சாமி?"

"வெல்கம் பாய், நீ என்ன இங்கே உட்கார்ந்துக்கிட்டு இருக்கே. அவங்க எல்லாம் எங்கே?" என்றார் ஜான்ஸன்.

"அவன் அவளுக்குத் துப்பாக்கி சுடக் கத்துக் கொடுக்கப் போயிருக்கான்!"

அவன் குரலில் தொனித்த அவமரியாதையைக் கண்டு ஜான்ஸன் விருட்டென்று அவனை ஏறிட்டுப் பார்த்தார்.

"துப்பாக்கி கூடவா, நீங்க ஏன் சாமி அனுப்பிச்சீங்க? அந்தக் களுதையைக் கூட்டிக்கிட்டு வந்ததே தப்பு" என்று பொருமினான் ஜக்கோடன்.

"இரு இரு ஜக்கோடா! அவள் துப்பாக்கி சுடக் கத்துக்கறதிலே என்ன தப்பு?" என்று அவனை அடக்கினார் ஜான்ஸன்.

ஜக்கோடன் குண்டுபட்டு, மருண்ட கண்கள் அச்சத்தால் நிலைகுத்தி நின்று விட்டிருக்க மாண்டு போயிருந்த மானைக் கீழே இறக்கினான்.



"சாமி! நான் போயி அவளை இழுத்துக்கிட்டு வர்றேன்" என்று முன்னால் போன ஜக்கோடனை நிறுத்தி, "அவங்களை எங்கே போய்த் தேடுவே? இதோ ஒரு குண்டு சுடுவோம். அப்ப அவங்க புரிஞ்சுக்கிடுவாங்க" என்று துப்பாக்கியை உயர்த்தி ஒரு வேட்டு போட்டார் ஜான்ஸன். காடு அதிர்ந்தது.

சிறிது நேரத்தில் நிஷாவும் தியாகராஜனும் சிரித்தவாறே வந்து சேர்ந்தார்கள். அவர்களைச் சேர்த்துப் பார்க்கப் பார்க்க ஜீவாவின் உடம்பு பற்றி எரிந்தது. அவர்கள் இருவருக்கும் பின்னால் தியாகராஜன் வீட்டில், ஏக்கம் நிறைந்த முகத்தோடு கண்ட கங்காவின் இரண்டு பெரிய கண்ணீர்த் துளிகள் தெரிவது போல் அவனுக்குத் தோன்றியது. ஒரு வரையறையில்லாத முரடனிடம் கங்காவை ஒப்படைத்து விட்டிருக்கிறாரே அவள் தந்தை என்று உள்ளம் கொதித்தது. அவன் ஏதாவது பேசவும் பயந்தான். அந்தப் பேச்சு அவனை உணர்ச்சிவசப்படுத்தி விபரீதமான காரியங்களில் இறக்கிவிடக் கூடும் என்பதே அதன் காரணம். சாப்பாட்டிலும் கலகலப்பான பேச்சுக்களிலும் காலம் கழிவதே தெரியாமல் மாலை மங்கிவிட்டது.

"எல், பரணெல்லாம் தயார்தானே ஜக்கோடன்?" என்றார் ஜான்ஸன். நிஷாவுக்கு இப்போதுதான் சற்றுப் பயம் தட்ட ஆரம்பித்தது. மிருகங்களின் மோசமானதும் குரூர புத்தி வாய்ந்ததுமான சிறுத்தை வேட்டைக்கு அது ஒரு பீடிகை என்று அவளுக்குள் உணர்வு பாய்ந்து உடம்பு குளிர்ந்தது.

"எல்லாம் தயார் சாமி!" என்றான் ஜக்கோடன்.

சிறுத்தை தண்ணீர் குடிக்க வரும் ஒரு துறைக்குச் சற்றுத் தூரத்தில் ஓர் அடர்ந்த மரத்தில் சௌகரியமாகப் பரண் அமைக்கப்பட்டிருந்தது.

"நிஷா! ஒன்னும் பேசக் கூடாது. இருமக் கூடாது. தும்மக் கூடாது. ஏதாவது பண்ணினால் உயிருக்கே ஆபத்து. ஜாக்கிரதை!" என்று அவளைத் தாழ்ந்த குரலில் எச்சரிக்கை செய்துவிட்டுப் பரணின் மேல் சாத்தியிருந்த ஏணியில் ஏறத் தொடங்கினார் ஜான்ஸன். ஒருவர்பின் ஒருவராக மௌனமாக ஏணியின் மீது ஏறினார்கள். நிஷாவுக்கு முன்னால் பரணில் ஏறிவிட்ட தியாகராஜன், நிஷா ஏறும்போது அவளுக்குக் கைகொடுத்துத் தூக்கி விட்டான். ஜீவாவின் முகம் வெறுப்பினால் கறுத்தது.

அனைவரும் அமைதியாக, இலேசான சுவாச ஓசை மட்டும் கேட்கப் பரணின் மீது படுத்திருந்தார்கள். காட்டில் ஏற்படும் சின்னஞ்சிறு சருகோசைகள், சிட்டுக் குருவிகள் 'விர்'ரென்று சிறகடித்துச் செல்லும் ஓசை, காட்டுக் குயில்கள் எப்போதாவது இடை விட்டு இடை விட்டுக் கூவும் குரல் எல்லாம் அவர்களைச் சிலிர்க்க வைத்தன. மரணச் சாயையின் மகா மௌனம் அங்கே பரிபூரணமாக நிலவியது.

சீக்கிரத்தில் சந்திரோதயமானதால், காட்டில் பளிங்கு போன்ற இள நிலவின் தண்ணொளி பரவியது. நீல விளக்கால் அக்கானகம் அலங்கரிக்கப்பட்டது போல் ஒரு விசேஷமான அழகு சுற்றிலும் சோபித்தது. ஐந்து

துப்பாக்கி முனைகள் ஐந்து வேறு திசைகளில் குறி பார்த்தன. மருள மருள விழித்தவாறு நிஷா படுத்துக் கொண்டிருந்தாள். அவளுடைய இதயத் துடிப்பு அதிகரித்தது அவளுடைய மார்பு விம்மி விம்மித் தாழ்வதிலிருந்து தெரிந்தது. நீண்ட நேரமாக அவ்விதம் காத்துக் கொண்டிருந்தார்கள். திடீரென்று காட்டில் இயற்கைக்கு மாறான ஒரு சலசலப்பு ஏற்பட்டது. சிறுத்தை தண்ணீர் குடிக்கும் துறையை நோக்கித் துப்பாக்கியைக் குறி வைத்துக் கொண்டிருந்த ஜான்ஸனின் கண்களில் நீண்ட பளபளப்பான ஓர் உடல் கறுப்பு வரிகளும், மஞ்சள் பட்டைகளும் தெரிய தெளிந்தது தெரிந்தது. அவருடைய பிடி இறுகியது. குறி பார்க்கும் துவாரத்தில் அவருடைய கூர்மையான கண் உஷாராயிற்று.

"அப்பா.... அப்பா, தொறவுக்குப் புலி வந்திருக்குது!" என்று சிறு குரலில் நிஷா அப்பாவிடம் சொல்லி விட்டாள்.

"உஸ்!" என்று யாரோ எச்சரித்தார்கள்.

"அசைய வேண்டாம்!" என்று எல்லோருக்கும் ஜான்ஸன் எச்சரித்தார். தியாகராஜன் வேட்டை வெறியானதலால் அவனுடைய துப்பாக்கி மட்டும் மிக மெதுவாகத் துறையை நோக்கித் திரும்பியது. அந்தச் சிறிய ஓசைகளையே சந்தேகப்படுவது போல் அந்தப் புலி — ஆம், அது சிறுத்தையல்ல — மெதுவாகத் தலையைத் தூக்கிப் பார்த்தது. கண்கள் அக்கினிக் கொழுந்து போல் செஞ்சுடர் வீசின. எதிர்ப்புறத்திலிருந்த பிரதேசத்தின் ஆத்மாவையே துருவிப் பார்ப்பது போல் வெகு பயங்கரமான பார்வை. நிலவொளியில் அதன் உடல் நன்கு தெரிந்தது. சவுக்கு போன்ற நீளமும் லாகவமும் வாய்ந்த அழகான புலி அது. வயதாகி விட்டது என்று அதன் தளர்ந்த நடையிலேயே தெரிந்தது. கழுத்தை அது சற்று வளைத்த போதுதான் அதற்குள்ள ஒரு விசேஷ அடையாளம் தெரிந்தது. எல்லாப் புலிகளுக்கும் போல் அல்லாது, கழுத்திலிருந்து முன் முதுகு வரை அதற்குக் கறுப்பு வரிகளே இல்லை.

"ஹா!" என்று ஏதோ உணர்ச்சி வசப்பட்டவர் போல் ஜான்ஸன் கிசுகிசுத்தார்.

தியாகராஜன் சட்டென்று துப்பாக்கியை உயர்த்தினான்.

"நோ... நோ... நாட் நௌ!" என்று தம்மைச் சமாளித்துக் கொண்டு அவனைக் கடுமையாக எச்சரித்தார் ஜான்ஸன்.

புலி சுற்றுமுற்றும் பார்த்து விட்டு மெல்ல உறுமியவாறே முன்னங் கால்களைச் சௌகரியமாக இரண்டு பாறைகளின் மீது ஊன்றிக் கொண்டு தலையை வளைத்து, உறிஞ்சி, உறிஞ்சித் தண்ணீர் பருகலாயிற்று. நேரம் மரணப் பளுவோடு தள்ளாடிக் கொண்டு கழிந்தது. ஜான்ஸன் குறி வைத்து டிரிக்கரை (விசையை அழுத்த முயலும்போது இன்னொரு புலி அதைத் தொடர்ந்து உடலைக் கம்பீரமாக வளைத்தவாறு புதர் மறைவிலிருந்து வெளிப்பட்டது.

தியாகராஜன் மீண்டும் துப்பாக்கியை உயர்த்தினான்.

"தியாகராஜன்! நான் உங்களை எச்சரிக்கிறேன்! அந்தப் புலிக்காக இருபது வருஷங்கள் காத்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் அதைச் சுட முயன்றால் ஒரு நாயைச் சுடுவது போல் உங்களைச் சுட்டுக் கொல்லுவேன்" என்று வெறி பிடித்தவர் போல் ரத்தம் உறைந்து போகும் மெல்லிய குரலில் எச்சரித்தார் ஜான்ஸன். அவர் அதைச் செய்வார் என்று அந்தக் குரல் நிர்த்தாட்சண்யமின்றித் தெரிவித்தது. தனது உடலில் பொங்கிய ஆத்திரத்தைப் புத்திசாலித்தனமாகக் கட்டுப்படுத்திக் கொண்டு தியாகராஜன் துப்பாக்கியைத் திருப்பிக் கொண்டான்.

நிஷா மிகவும் பயந்து விட்டாள். ஜான்ஸனுடைய கோபத்தை அவள் இதுவரை கண்டதே யில்லை. எதிரில் புலி உலாவுவதைவிட அதிகமான அவருடைய கோபாக்கினி வீசும் முகம் அவளுக்குக் கிலி மூட்டியது.

தண்ணீர் குடித்துக் கொண்டிருக்கும் புலிக்கு அருகில் சென்று தானும் தண்ணீர் பருக ஆரம்பித்தது புதிய புலி. சிறிது நேரம் சென்றதும் தண்ணீர் குடிப்பதை நிறுத்தி விட்டு முதலில் வந்த பெண் புலியின் உடலை நக்கிக் கொடுக்கத் தொடங்கிற்று. பெண் புலியும் தண்ணீர் பருகுவதை நிறுத்தி விட்டுத் திரும்பி ஒரு வீட்டு நாய் போலக் கழுத்தை இசைவாக அதற்குக் காட்டிற்று. அதன் கழுத்தையும் முகத்தையும் நாவால் நக்கிக் கொடுத்தது ஆண் புலி.

நிலவொளி வீசும் அந்த முன்னிரவில், அடர்ந்த கானகத்தில் வெறும் விலங்குகளின் மிருக உணர்ச்சி போல் அந்த நிகழ்ச்சி தோன்றவில்லை. யுக யுகாந்திரங்களாக, அன்பும் பாசமும் தழுவிக்கொள்ள, ஜீவ ராசிகள் மன லயிப்போடு நடத்தி வரும் முடிவற்ற காதல் நாடகமாகவே அது தென்பட்டது. சிற்றலைகளால் மெல்லச் சப்திக்கும் அந்த நீர்த் துறையின் அருகில், அந்த வயோதிகத்தம்பதிகளின் சரசம் வெகு அழகாக இருந்தது. புதிய மேகங்களும், புதிய பறவைகளும் ஜான்ஸனின் மனவானில் பறந்தன. அவர் துப்பாக்கியைத் தாழ்த்தி, கண்களில் மளமளவென்று நீர் வழிய, இமைகளைச் சிமிட்டிச் சிமிட்டி மங்கும் கண்களைத் தெளிவாக்கியவாறே, எல்லோரும் மூச்சையும் அடக்கிக் கொண்டு காத்திருக்கும் அந்த அவ்வேளையில் முழு மனித உணர்ச்சியோடு அதை ரசித்துக் கொண்டிருந்தார். இளந் தம்பதிகள் போல் அந்தப் புலிகள் கட்டிப் புரண்டு விளையாடின.

''அவைகளைச் சுடுங்கள், மிஸ்டர் ஜான்ஸன்! சுடுங்கள்!'' என்று வேட்டை வெறியோடு கிசுகிசுத்தான் தியாகராஜன்.

''சுடுங்கள், சார்! இன்னுமேன் தாமதம்?'' என்று ஜீவாவின் குரல் பின்னாலிருந்துவந்தது.

நீஷா மெதுவாகக் கையை நீட்டி ஜான்ஸனின் முதுகைத் தொட்டாள். அவள் விரல்கள் நடுங்குவதை அவர் அறிந்தார். ஆனாலும் தாழ்த்திய துப்பாக்கியை உயர்த்தவில்லை.

''நான் கெஞ்சுகிறேன் மிஸ்டர் ஜான்ஸன்'' என்று கூறியவாறே அதற்கு மேலும் தாள மாட்டாதவன் போல் துப்பாக்கியை உயர்த்தி 'டிரிக்கரை'த் தள்ளினான் தியாகராஜன். சட்டென்று தம் துப்பாக்கியால் அந்தக் குறியைத் தடுத்து வேகத்தோடு அவனுடைய துப்பாக்கியை மேலே உயர்த்தினார் ஜான்ஸன். சீறிக் கொண்டு ஒரு குண்டு கிளம்பி ஏதோ ஒரு மரத்தின் உச்சியில் வெடித்தது. கீச் கீச்சென்று பறவைகளின் பெரிய ஓலமும், குண்டின் எதிரொலியும் வெகு பயங்கரமாகக் கிளம்பின.

உஷார் அடைந்த புலிகள் 'உர்'ரென்று உறுமியவாறே குண்டு வந்த திசையை நோக்கிப் பாய்ச்சல் நோக்கில் தயாராக நின்றன. சட்டென்று துப்பாக்கியைத் தூக்கி நீலவானத்தில் இரண்டு முறை சுட்டு வேட்டுக் கிளப்பினார் ஜான்ஸன். பளிச்சென்று திரும்பி மின்னல் போலத் துள்ளிப் புதருக்குள் பாய்ந்தோடி விட்டன அந்தப் புலிகள். காட்டில் சிறிய மிருகங்களின் அச்சக் கூக்குரலும், பறவைகளின் சோகமான முறையீடுகளும் ஓயாத அலைபோல் 'ஓ' வென்று கேட்டுக்கொண்டிருந்தன.

''இது என்ன மடத்தனம்?'' என்று கத்தினான் தியாகராஜன்.

''என்ன சார், வேண்டுமென்று விட்டு விட்டீர்கள்?'' என்று ஆச்சரியத்தோடு ஜீவானந்தம் கேட்டான்.

''என்னுங்க, தொரை! உங்க குறி எப்போப் பட்டுது! உங்களுக்கா தப்பிச்சுக்கிச்சு?'' என்று விஷயம் தெரியாமல் அங்கலாய்த்துக் கொண்டான் ஜக்கோடன்.

எல்லாவற்றுக்கும் மௌனமாக இருந்த ஜான்ஸன், முகத்தில் பூத்திருந்த வேர்வையை ஒரு கைக்குட்டையால் சாவதானமாகத் துடைத்தவாறு பைப்பை எடுத்துத் தீக்குச்சியினால் பற்ற வைத்துக் கொண்டு பேசலானார்.

''முதலில் உங்களிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன் மிஸ்டர் தியாகராஜன்!'' என்று தம் கையில் இருந்த துப்பாக்கியைத் தோளில் சாத்திக் கொண்டு தியாகராஜனுடைய துப்பாக்கி பிடித்த கையைத் தமது பெரிய கைகளால் பற்றிக் கொண்டு உலுக்கினார். பரண் கிறீச்சிட்டு மெல்ல அதிர்ந்தது. வயதான அந்தப் பெரியவரின் பணிவைக் கண்டு, தன் உணர்ச்சிகளை மறந்து தியாகராஜன் அந்தக் கைகளை இடது கையால் பிடித்துக் கொண்டான்.

''நான் மிகவும் வருந்துகிறேன் மிஸ்டர் தியாகராஜன். அந்தப் பெண் புலியைப் பார்த்ததும் எனக்கு வெறி பிடித்து விட்டது. அதற்காகத்தான் நான் தேசத்தை விட்டு, உற்றார் உறவினர்களையெல்லாம் விட்டு விட்டு இருபது வருஷங்கள் இந்த மலைப் பிராந்தியத்திலே காத்துக் கொண்டிருந்தேன்'' என்று மேலே பறந்து கொண்டிருந்த பறவைகளைப் பார்ப்பது போல உணர்ச்சிகளைச் சமாளித்தார் ஜான்ஸன்.

''அப்படின்னு...?'' என்று ஜக்கோடன் இழுத்தான்.

''ஆம், ஜக்கோடன், அதுதான் என்மனைவி மேரியை அடித்துக் கொன்றது. நான் அதனால் தான் இங்கே தாமதித்து விட்டேன். என் இளமைப் பிராயமெல்லாம் என்னோடு அருமையான வாழ்க்கை வாழ்ந்து, என் வாழ்க்கைக்கே தனி அழகையும் சாந்தியையும் தேடித் தந்த மேரியை அது வீடு புகுந்து அடித்துக் கொன்றது. அதுவே ஒரு மனிதனாக இருந்தால், அவன் எந்தக் கண்டத்துக்கு ஓடியிருந்தாலும் நான் அவனை விட்டிருக்க மாட்டேன். நான் கொலை வெறி பிடித்து அலையவில்லை. என் மேரியின் மேல் நான் வைத்திருந்த அன்பு அத்தனை பரிபூரணமானது.

''எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு என்று பாரதியார் சொன்னார். ஆனால் சுதந்திரம் என்பது வீண் பேச்சுதான்!''

''புரியறதுயா! நான் ஒழிஞ்சா, நீ சுதந்திரமா வாழலாம்!''

''என் ஒருத்தியை நான் சொல்லல்லே! ஊருக்குத்தான் சொல்றேன்''

''அப்ப! ஊரில் இருக்கிற மாமியாரெல்லாம் ஒழியணும் என்கிறயா?''

உணர்ச்சி வசத்திலும் அவளுக்கே துரோகம் செய்யக் கூடிய அவமானகரமான காரியம் ஒன்றில் நான் ஈடுபட்டும் கூட, என்னை வாய் பேசாமல் மன்னித்து அவள் ஏற்றுக் கொண்டாள். அவள் விவாகரத்து செய்து விட்டு பிரிட்டனுக்குக்கூடப் போயிருக்கலாம். அவள் ஒரு தேவ மகள். அப்படிச் செய்யவில்லை. அப்படிப்பட்ட சொத்தை நான் இழந்தேன். இருபது வருஷ காலமாக அவளை அடித்துக் கொன்ற புலியை நான் இந்தக் காட்டின் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் தேடினேன், அதைத் துடிக்கத் துடிக்கச் சுட்டுக் கொல்ல வேண்டும் என்று. என் நரம்புகளெல்லாம் கொதித்தன. நாளாக நாளாகத் தனிமையும் வைராக்கியமும் என்னைச் சுத்தப்படுத்திக் கொண்டு வந்தன. அதன் அடையாளத்தைப் பற்றி, சம்பவம் நடந்தபோது பார்த்தவர்கள் சொன்னார்கள். இன்று அதையே, என் வாழ்நாட்களை யெல்லாம் பாலைவனமாக்கி விட்டு ஒரு நாடோடிப் பிரயாணி போல் அலைய விட்ட அந்தப் புலியையே பார்த்தேன். ஆனால் காலம் மாறிவிட்டது'' என்று ஜான்ஸன் யோசனை வயிப்பில் சற்று நிறுத்தினார்.

''அந்தப் புலியும் என்னைப் போலவே வயோதிகம் அடைந்து விட்டது. மேலும் அதன் ஆண் புலியும் கூட வந்திருந்தது. எந்தப் பிரிவை நான் இப்போது சகித்துக் கொள்ள நிர்ப்பந்தப்பட்டிருக்கிறேனோ, அதே பிரிவைச் சதா உறுமியவாறு சாகும் வரையில் அந்த ஆண் புலியின் மேல் சுமத்த நான் அனுமதிக்கப் படவில்லை. நான் ஒரு உண்மையான கிறிஸ்தவன். ஒரு கன்னத்தில் அடிவாங்கி விட்டு, மறு கன்னத்தைக் காட்டக் கடமைப்பட்டவன். இந்த வயதான காலத்தில் ஒரு கோழையைப் போல் அந்தப் புலியை வஞ்சம் தீர்த்துக் கொள்ள விரும்பவில்லை. அது கேவலம் மிருகம். நான் இருதயமுள்ள ஒரு மனிதன். என்னிடம் நியாயமாகக் கர்த்தரால் எது எதிர்பார்க்கப்படுமோ அவ்விதம் நான் நடந்து கொண்டேன்'' என்று நிறுத்தினார் ஜான்ஸன்.

''ஸார்....'' என்று உணர்ச்சி வசப்பட்டு அவரது பெரிய தோளில் கையை வைத்தான் ஜீவானந்தம்.

''உண்மையிலேயே, மேரியின் மீது நான் வைத்திருந்த அன்பை உங்களுக்கு என்னால் விளக்க முடியாது. அப்படியே அதைச் சிரமப் பட்டு நான் விளக்கினாலும் அதை நீங்கள் நம்புவது கஷ்டம். இயற்கையின் பொது விதிகள் எனக்கும் அந்தப் புலிக்கும் ஒன்று தானே மிஸ்டர் ஜீவா!'' என்று கேட்டார் ஜான்ஸன்.

யாரும் ஒன்றும் பேசவில்லை. வெறும் பேச்சால் பிரதிநிதித்துவப் படுத்த முடியாத உயர்ந்த நினைவுகள் எல்லோர் உள்ளத்திலும் இருந்தன.

''நான் உங்களை மிகவும் பாராட்டுகிறேன்'' என்று ஆங்கிலத்தில் சிறிய குரலில் கூறினான் தியாகராஜன். சூழ்நிலைக்கு அந்த வார்த்தைகள் வெகு நன்றாக இருந்தன.

பறவைகளின் கூச்சலும், விலங்கினங்களின் ஆரவாரமும் இரவின் அமைதியில் சிறிது நேரத்துக்குள் புதைந்து விட்டன.

**மா**ய விக்னேஸ்வரர் கோவில் மத்தியான வெய்யிலில். பாரத தேசத்தின் புராதனப் பண்பாடுகளும், தலைமுறை தலைமுறையாகக் காத்து வளர்க்கப்பட்ட புனிதமான தர்மங்களும் தன் மகிமையோடு சிரஞ்சீவியாக நின்று நிலைத்திருப்பது போல் எத்தனையோ வருஷங்களுக்கு முன் கட்டப்பட்டிருந்தும், குலைவுறாமல் கம்பீரமாகப் பிரகாசித்தது. அதைச் சுற்றிலும் ஓடிய அருவி கற்றுணர்ந்து அடங்கிய ஞானிகள் போல் ஆரவாரமின்றி மெல்ல ஓடிக் கொண்டிருந்தது. ஜீவானந்தம் உயர்ந்த மரம் ஒன்றின் கீழே படுத்துக் கொண்டு யோசனையில் ஆழ்ந்திருந்தான்.

தூங்கில் மரங்களின் இலைகளிலிருந்து வரும் சலசலவென்ற ரகசியங்களும், வெய்யிலில் சோம்பலோடு காய்ந்தவாறு மந்தமாக வட்டமிட்டுக் கொண்டிருந்த பருந்து ஒன்றும் சூழ்நிலையை அழகாக்கின. திடீரென்று வளையல்களின் ஓசை கேட்டது. எழுந்திராமல் கழுத்தை மட்டும் வளைத்துப் பார்த்தான். நிஷாதான் வந்து கொண்டிருந்தாள். அவனுக்கு உடம்பு எரிந்தது.

''ஏய் நிஷா!'' என்று அவளை உரக்கக் கூப்பிட்டான்.

அவனைப் பார்த்தவாறே கலகலவென்று சிரித்தவாறே அவனருகில் வேகமாக ஓடி வந்தாள் நிஷா.

''உட்கார்'' என்று உணர்ச்சியின்றிச் சொன்னான் ஜீவானந்தம்.

''முடியாது'' என்று வேடிக்கையாக மறுத்தாள் நிஷா.

''வேடிக்கை யெல்லாம் வேண்டாம். உட்கார்.'' அவன் குரலில் கடுமை ஏறிற்று. நிஷா விழித்தவாறு உட்கார்ந்தாள்.

''உனக்கு வெட்கமிருக்கிறதா? அந்தத் தியாகராஜன் கல்யாணமானவன். அவனுக்கு ஒரு மனைவி இருக்கிறாள். அவனோடு போய்ச் சிரித்துக் கொண்டும் ஆடிக் கொண்டும் இருக்கலாமா?'' என்றான் ஜீவா.

''ஏன், என்ன தப்பு?'' என்று ஒன்றும் புரியாமல் கேட்டாள் நிஷா.

''அவன் தன் மனைவியை அப்புறம் அடியோடு மறந்து விடுவான். நிஷா, உன்னால் அந்தப் பெண்ணின் வாழ்க்கை பாழாவதென்றால், இதோ ஓடும் இந்த அருவியில் உன் கழுத்தை நெரித்துத் தூக்கிப் போடுவேன்'' என்று அநாவசியமாக இரைந்தான் ஜீவா.

நிஷா பயந்து போய் அவன் முகத்தைக் குழந்தை போல் பார்த்தாள்.

''உன்னைக் குற்றம் சொல்லிப் பயன் இல்லை. அவன்—அந்த வெறியனுக்குத் தன் கையிலிருக்கும் பொருளின் மதிப்புத் தெரியாது. அவன் எவ்வளவு நல்ல மனைவியென்று தெரியாமல் முரட்டு ஜன்மம் போல் நடந்து கொள்கிறான். அந்தப் பெண், கொட்டிலில் கட்டிவிட்ட பசுவைப் போல் சாகாமல் செத்துக் கொண்டிருக்கிறாள்.''

''சொன்னதெல்லாம் சரிதான் மிஸ்டர் ஜீவன், ஆனால் பிற்பகுதி தான் நேர்மாறு'' என்று திடீரென்று இடைமறித்தவாறு ஏந்திய துப்பாக்கியோடு எதிரில் வந்து நின்றான் தியாகராஜன்.

ஜீவானந்தம் திடுக்கிட்டுப் போய் எழுந்து உட்கார்ந்தான்.

''ஏன் பயப்படுகிறீர்கள்? உங்களை நான் சுட்டுவிட மாட்டேன். நான் நிஷா போவதைப் பார்த்து அவளைத் தேடி வந்தேன்.

இப்போது சௌகரியமாகப் பேசலாம்'' என்று கூறி உட்கார்ந்தான் தியாகராஜன்.

''நீ யாரென்று எனக்குத் தெரியும் ஜீவானந்தம். நீ விமானப் படையிலிருந்து தப்பி ஓடி வந்திருக்கும் ஒரு குற்றவாளி'' என்று மரியாதையை விட்டு விட்டு ஆரம்பித்தான் தியாகராஜன். ஜீவானந்தத்தின் முகம் இருண்டது.

''நீ நினைப்பது போல் நான் உன்னைக் கொல்ல மாட்டேன். அது வெறு அற்பமான விஷயம். உன்னைக் கொன்று விடுவதால் மட்டும் என்னுடைய குடும்ப வாழ்க்கையில் எனக்கு ஏற்பட்டிருக்கும் மனவேதனைகள் போய்விடப் போவதில்லை. ராவுஜியின் பெண்ணை — என் கங்காவை நீ காதலித்தாய். கடைசியில் அவர் அனுமதிக்காததால் பிறகு விமானப் படையில் சேர்ந்து விட்டாய்.. ராவுஜி அவளை என் தலையில் கட்டினார். ஜீவானந்தம், நீ படித்தவன்; உன்னை ஒரு கேள்வி கேட்கிறேன். பதில் சொல். நீ திருமணம் செய்து கொண்ட ஒரு பெண், கணவனை அடைந்த பிறகும் அவனுடைய பழைய காதலனையே நினைத்துக் கொண்டிருந்தால் உன்னால் சகிக்க முடியுமா?' என்று இடிபோல் முழங்கினான் தியாகராஜன். அவன் முகம் சிவந்து கண்களும் செம்மை யுற்றன.

'சொல்....'' என்று அவன் மீண்டும் உறுமிய போது ஜீவானந்தம் தலைகுனிந்தான்.

''நீ சகிக்க மாட்டாய். ஆனால் நான் சகித்துக் கொண்டேன். இன்னும் சகித்துக் கொண்டிருக்கிறேன். இன்னும் ஒன்று சொல்கிறேன் ஜீவானந்தம், நான் அந்தப் பெண்ணை நிச்சயித்துக் கொள்ளப் போகுமுன்பே ஊரில் இலேசான வதந்தி எட்டியது. நீ வேறு ஜாதி என்பதால் அவர் உனக்கு மறுத்து விட்டார்; அதற்கு அப்புறம் அவள் தங்கை இருக்கிறாள் என்ற பயம் அவருக்கு என்று எண்ணி உங்கள் காதலுக்காக நான் அவரிடம் 'உங்கள் இரண்டாவது பெண்ணை நான் திருமணம் செய்து கொள்கிறேன். உங்கள் முதல் பெண்ணை அவள் நேசித்த இளைஞனுக்கே கொடுத்துவிடுங்கள்' என்று கேட்டேன். அப்படி எதுவும் நடக்கவில்லையென்றும், ஊரில் பொறாமையால் அப்படிக் கதை கட்டி விடுகிறார்கள் என்றும் அவர் சொன்னார். அவர் மிகவும் நல்லவரான படியால் அவர் வார்த்தைகளை நான் நம்பினேன். ஆனால் திருமணத்துக்குப் பிறகு என் மனைவியின் பெட்டியில் உன் புகைப்படம் ஒன்று கிடைத்தது. நீ ஒரு விமான விபத்தில் சிக்கித் தப்பித்துவிட்ட செய்தி வெளியாகியிருந்த பத்திரிகையையும் அவள் பெட்டியில் கண்டேன். நீ நம்பினால் நம்பு; நம்பாவிட்டால் போ. அவள் என்னிடம் ஒரு சன்யாசி போல் நடந்து கொள்கிறாள். இதயமற்ற எந்திரம் போல் அவள் என்னை மௌனமாக உதாசீனப் படுத்துகிறாள்.''

ஜீவானந்தத்தின் முகத்தைப் பார்த்துப் பேசப் பிடிக்காமல் தலைகுனிந்து கொண்டு பேசலானான் தியாகராஜன்.

''என் வாழ்க்கை பாழடைந்து விட்டது. எனக்கிருக்கும் ஒரே சந்தோஷம் வேட்டை தான். நான் பழி வாங்கப்பட்டவன் போல, மிருகங்களைக் கொன்று கொன்று குவிப்பதில் ஜான்ஸனோடு காட்டுக்குப் போகிற வரையில் அலாதித் திருப்தி அடைந்து வந்தேன். ஜீவானந்தம்! காதல் எவ்வளவு உயர்ந்தசங்கதி என்று எனக்குத் தெரியும். ஆனால் வாழ்வின் பல்வேறு உணர்ச்சிகளுள் அதுவும் ஒன்று. அந்த ஒன்றை மட்டுமே வைத்துக் கொண்டு இந்த மாபெரும் வாழ்க்கை ஸ்தாபிக்கப்பட்டு விடவில்லை. நீஜாவோடு கொஞ்ச நாட்கள் சிரித்துப் பழகியதற்கே நீ இவ்வளவு அவஸ்தைப்படுகிறாய் என்றால், மூன்று வருஷங்களாக நான் பட்டு வரும் வேதனைகள் எப்படி இருக்கும்?''

''தியாகராஜன், கங்கா....கங்கா அப்படியா இருக்கிறாள்?'' என்று திகைப்போடு கேட்டான் ஜீவா.

''அப்படியே தான் இருக்கிறாள். நீ கொஞ்ச நேரத்துக்கு முன் சொன்னாயே அவள் எவ்வளவு உயர்ந்த மனைவி என்று. அவ்வளவு உயர்ந்த மனைவியை நாம் பூரணமாக அடைய வேண்டும் என்கிற காரணத்துக்காக நான் பொறுமையோடு காத்துக் கொண்டிருக்கிறேன். அன்றைய தினம் காட்டுக்குப் போகும் வரையில் எமனாக வந்திருக்கும் உன்னைச் சுட்டுக் கொன்று விடுவது என்றுதான் நான் தீர்மானித்திருந்தேன், அந்தப் பிரிட்டிஷ்காரர் கண்ணைத் திறந்து விட்டார். என்னோடு வாழ்ந்தவாறே தன்னைக் கொன்று கொண்டிருக்கும் அந்தப் பைத்தியக்காரிக்காக நான் ஒரு கொலைகாரனாக மாற விரும்பவில்லை. நீ சொல் ஜீவானந்தம். காதல் என்றும் தெய்வீகம் என்றும் ஓயாமல் நினைத்துக் கொண்டிருக்கிறார்களே. இப்படித்தான் அதனால் பாதிக்கப்பட்டவர்கள் குரூரமாகத் தண்டிக்கப்பட வேண்டுமா?'' என்று குமுறிய வாறே கேட்டான் தியாகராஜன்.

ஜீவானந்தம் ஏதும் சொல்ல முடியாமல் நெற்றியை இரண்டு கைகளாலும் தாங்கிப் பிடித்துக் கொண்டு சித்திரவதையை அனுபவித்துக் கொண்டிருந்தான். தியாகராஜனின் ஒவ்வொரு வார்த்தையும் நொந்து போன அவன் உள்ளத்தின் ஒவ்வோர் உருக்கமான புண்களாக ஒன்றன் பின் ஒன்றாக வந்து தாக்கின.

'கங்கா ... அவள் என்ன கற்சிலையா? உணர்ச்சியும் இல்லாத அறிவுமற்ற இவ்வளவு வன்மையான உள்ளம் படைத்தவளா? இதோ, தியாகராஜன் சல்லடைக் கண்களாகத் துளைக்கப்பட்டவன் போல் நிற்கிறான். அவனுக்காக, என் பர்சில் இருந்த அவள் போட்டோவைக் கண்டு சக விமானி கேட்ட கிண்டலான கேள்வியினால் ஆத்திரப்பட்டு அவனைத் தாக்கினேன். அந்த விபத்து என்னால் நேர்ந்தது. விபத்திலிருந்து மீண்டு நான், விமானப் படைக்குப் போனால் விசாரணையில் என் குற்றம் ருஜுவாகி விடுமே என்று தலைமறைந்து திரிகிறேன். கையை விட்டுப் போன பொருளுக்காக அவளும் நானும் எங்களைச் சித்திரவதைப்படுத்திக் கொண்டிருக்கிறோம். கிழவர் ஜான்ஸன் தம் மனைவியைக் கொன்ற புலியை மன்னித்து விட்டு விட்டார். அதை வைத்து என்னை நினைக்கையில்....சே, என்ன கேவலம்?'

''தியாகராஜன் .... தியாகராஜன்'' என்று ஜான்ஸன் எங்கிருந்தோ கூவி அழைக்கும்

---

**இந்தக் கதையில் வரும் ஒரு காட்சியைத்தான் இவ்விதழ் அட்டைச் சித்திரமாக வழங்கியிருக்கிறார் ஓவியர் கல்பனா.**

குரலும், மலைவாசிகளின் கூச்சலும் அவன் நினைவுகளை அறுத்தெறிந்தன.

''என்ன, என்ன?'' என்று பதறினான் நிஷா.

''இங்கே இருக்கிறேன் ஸார்'' என்று கூச்சலிட்டான் தியாகராஜன். மூவரும் பரபரப்போடு அவர் குரல் வந்த திசையை நோக்கி நடந்தார்கள். அவனைத் தேடிக் கொண்டு வந்த கும்பல் அவர்களைச் சந்தித்தது.

''நான் மிகவும் வருத்தப் படுகிறேன், தியாகராஜன்!'' என்று கருங்கிய முகத்தோடு பீடிகை போட்டார் ஜான்ஸன்.

''என்ன ஸார்?''

''உங்கள் மனைவி தண்ணீர் எடுக்க அருவிக்குப் போயிருந்தபோது ஒரு சிறுத்தை அறைந்து கொன்று விட்டது.''

''கங்கா!'' என்று கதறியவாறே வீட்டை நோக்கி ஓடினான் தியாகராஜன். ஜீவானந்தம் பிரமை பிடித்தவன் போல் நெடுமரமாக நின்றான். அவன் செவிகளையே அவனால் நம்ப முடியவில்லை. நேரமாக ஆகத்தான் அவனால் சுயநிலைக்கு வர முடிந்தது.

'கங்கா — அந்தப் பெண் வாழவில்லை. வாழவும் விடவில்லை. என்னாலேயே சிறுகச் சிறுகச் செத்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு இது தண்டனையாக விதிக்கப்பட்டதா?'

ஜீவானந்தம் கங்காவின் அழகிய உருவம் சிறுத்தையால் சின்னாபின்னப் படுத்தப்பட்டதையோ, அவளுக்கு நடந்த ஈமச் சடங்குகளையோ அல்லது அந்தச் சடங்குக்கு வந்த அவள் பெற்றோர் மலைக்கு வந்ததை அறிந்தும் அவர்களைப் பார்க்க அவன் விரும்பவில்லை.

அவனுடைய குடிசையின் கயிற்றுக் கட்டிலில் படுத்துக் கொண்டு அதன் சிறிய ஜன்னல் வழியே தெரியும் காட்டைப் பார்த்தவாறே அவனுடைய வாழ்க்கையைக் கவ்வியிருந்த பேரிருளையும், கங்காவையும் பற்றித் துக்கங்களால் சக்தியிழந்து, உணர்ச்சிகளே மரத்துப் போன மனத்தில் எண்ணிக்கொண்டிருந்தான்.

கங்காவின் இதயத்தில் அவன் மூட்டி விட்ட அக்னி, அணையாத காட்டுத் தீயாகக் கடைசி வரையில் நின்று எரிந்து, அதன் உதிர்ந்த சாம்பல் குவியலில் அவள் அணைந்து விட்டாள். எத்தனை புனித அர்த்தத்தில் அவர்கள் உறவு முதன் முதலில் கொழுந்து விட்டுக் எழும்பிற்றோ அந்த அர்த்தமே ஜீவானந்தத்துக்கு இப்போது நினைக்கப் பெரிதும் வருத்தத்தைத் தந்தது.

தியாகராஜன் — அவன் தான் எவ்வளவு பொறுமைசாலி? துப்பாக்கியும் கையுமாகத் திரிபவனாயிருந்தாலும் அவன் உள்ளத்தில்-தான் எப்படிப்பட்ட மனிதத்தன்மை நிலவியிருந்தது. கங்கா மாறக்கூடும் என்று அவன் பொறுத்திருந்திருக்கிறான். சன்யாசினியைப் போல் கூட வாழும் ஒரு மனைவியைக் காலம் சிகிச்சைப் படுத்தும் என்பதற்காகச் சகித்து வந்திருக்கிறான். அவன் கேட்ட கேள்விகள், வலுவான இரும்புச் சங்கிலிகளாக ஜீவானந்தத்தைச் சுற்றிப் பிணைத்தன.

'காதல் என்றும் தெய்வீகம் என்றும் பேசுகிறீர்களே, அதனால் பாதிக்கப்பட்டவர்கள் இப்படித்தான் குரூரமாகத் தண்டிக்கப்பட வேண்டுமா?'

'இல்லை தியாகராஜன், இல்லை! உங்களைப் போன்ற மனிதர்களும் இந்த பூமியில் இருக்கிறார்கள். அவர்களுக்காகவாவது வாழ வேண்டும். அவர்களை வாழ்விக்க வேண்டும்.'

'மிருதுவான உணர்ச்சிகளும், மாதுரியமான உள்ளமும் படைத்த கங்கா, தியாகராஜனுக்கு இழைக்கப்பட்ட அநீதிகளுக்கெல்லாம் என்னைக் குற்றவாளி யாக்கிவிட்டிருக்கிறாளே.'

தலையணையின் மீது முகத்தைப் புதைத்துக் கொண்டு, கண்ணீரும் ஓசையும் வெளியே தெரியாமல் ஜீவானந்தம் அழுதான்.

கங்காவின் உள்ளத்தில் பற்றியிருந்த அக்னி, யாருக்கும் உபயோகப்படாமல், வெறும் உணர்ச்சிகளின் மூர்த்தண்யத்தினாலேயே யாரைக் கையெடுத்துக் கும்பிட வேண்டுமோ அவளைப் பொசுக்கி வந்திருக்கிறது. அவளுடைய காதல் எவ்வளவு மேன்மையானது என்று ஜீவானந்தத்தால் உணரப்பட்டாலும், அதைப் பெருமையோடு அங்கீ



கரிக்க இயலவில்லை. பெண் வாழ்விப்பவள் தான். தன் உணர்ச்சிகளை, உள்ளத்தை, தன் வாழ்வையே மற்றவர்களை வாழ்விப்பதில் தான் அவள் செலவிடுகிறாள்.

''கங்கா, ஐயோ கங்கா!'' ஜீவா அவளுக்காக அவளுடைய தவறுகளுக்காக வருந்திக் கொண்டான்.

''நான் இங்கிலாந்துக்குப் போவதாக முடிவு செய்து விட்டேன்'' என்று தமது அறையில் உட்கார்ந்திருந்த அனைவரிடமும் கூறினார் ஜான்ஸன். தியாகராஜன் தெம்பும் சோபையும் இழந்த முகத்தை உயர்த்தி அவரை நிமிர்ந்து பார்த்தான். ஜீவானந்தத்திடம் அவர் இவ்விஷயத்தை ஏற்கெனவே சொல்லி விட்டிருந்ததால் அவன் முகத்தில் எந்தச் சலனமுமில்லை.

ஜக்கோடன் மிகவும் கவலையோடு அவரை நிமிர்ந்து பார்த்தான். எல்லோரையும் ஒரு முறை நிதானமாகப் பார்த்தவாறே ''என் கூடவே என் மகள் நிஷாவும் வருகிறாள்'' என்றார் ஜான்ஸன்.

''என்ன?'' என்று ஆச்சரியத்தோடு ஜீவானந்தமும் தியாகராஜனும் ஒரே சமயத்தில் கேட்டார்கள்.

''ஆம்! நிஷா என் மகள்தான். இங்கு ஒரு மலைஜாதிப் பெண்ணுக்குப் பிறந்தாலும் அவளுடைய தந்தை நான்தான். ஏற்கெனவே சொன்னாற்போல் நான் என் வாழ்நாளில் மேரிக்குச் செய்த இந்தப் பெரிய துரோகத்தையும் அவள் மன்னித்து விட்டாள். இந்தக் குழந்தையைப் பெற்று விட்டு, நிஷாவின் தாய் காலமாகி விட்டாள். மேரியின் இஷ்டப் பிரகாரம் நான் அந்தப் பெண் குழந்தையை ஜக்கோடனிடம் ஒப்படைத்து விட்டேன்.. மேரிக்கு அப்புறம் அவள் இஷ்ட விரோதமாக நான் நடந்து கொள்ளப் பிரியப்படவில்லை. அவள் முழுக்க ஒரு மலைஜாதிப் பெண்ணாகவே வளர்ந்து விட்டாள். ஆனால், அவளை என் தேசத்தில் நான் சுலபமாகத் திருத்திக்கொள்ள முடியும். என் கூடவே ஒரு தமிழ் பேசும் மகளை அழைத்துக் கொண்டு நான் தாய்நாட்டுக்குத் திரும்புகிறேன்'' என்றார்.

அவருடைய மேன்மை மிக்க பண்பாடும், ஒரு முறை செய்த தவற்றுக்காக வருந்தும் கழிவிரக்கமும் எல்லோர் நெஞ்சையும் உருக்கி விட்டன.

தியாகராஜன் ஜீவானந்தத்தை ஏறிட்டுப் பார்த்தான். அந்தப் பார்வையின் பொருள் அவனுக்குத் தெரிந்தது.

அந்தக் கள்ளங்கபடமற்ற குழந்தையைத் தான் காதலித்ததாகவும், அவளுடைய இழப்பைத் தான் சகிக்க முடியாதென்றும் தியாகராஜன் கருதுகிறான் என்பதைப் புரிந்து கொண்டான் ஜீவானந்தம். அவளை இழந்து விட முடியாது என்பது என்னவோ அவனைப் பொறுத்த வரையில் உண்மைதான். ஆனால் தன்னந் தனியான ஜான்ஸனின் வாழ்க்கையில் அவள் ஒருத்தி தான் இனி பற்றுக்கோலாக விளங்கப் போகிறாள். சொந்த தேசத்தையும் உற்றார் உறவினர்களையும் பார்க்க விரும்பும் அவர் ஆசைகளைப் பங்கம் செய்து, தன் வாழ்நாளில் ஒருவர் விடாமல் எல்லோருக்கும் துன்பமே அளித்து வந்தது போல் அவளுக்கும் ஏன் அளிக்க வேண்டும் என்ற எண்ணத்தில் அவன் தன் நினைவுகளை ஆழ மூடிப் புதைத்து விட்டான்.

''நீங்கள் புறப்படுகிற வரையில் இங்கே இருந்து விட்டு நானும் விமானப் படையில் போய்ச் சரணாகதி அடைந்து விடுகிறேன் ஸார்!'' என்றான் ஜீவானந்தம்.

அங்கே கூடியிருந்த எல்லோருடைய உள்ளத்திலும் பெரிய புயல் வீசி அடங்கின களைப்புத் தென்பட்டது.

''ரொம்ப சரி! உனக்கு நான் அதையே சொல்லலாம் என்று நினைத்தேன். மை பாய்! இனிமேல் பெரிய விஷயங்களுக்காக ஆசைப்படு'' என்று சுருக்கமாகச் சொல்ல வேண்டியதைச் சொல்லி முடித்தார் அந்தக் கிழவர். சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, ஜான்ஸனுடைய வீட்டை விட்டு வெளியே வரும்போது, தியாகராஜனின் தோள்களை அன்போடு பற்றிக் கொண்டு ஜீவா கரகரத்த குரலில் பேசலானான்.

''உங்களிடம் நான் மன்னிப்புக் கேட்க வேண்டும், தியாகராஜ். என்னை அறிந்தோ அறியாமலோ உங்கள் வாழ்க்கையில் சண்டமாருதமாக நான் நுழைந்து உங்கள் இன்பங்களையும் நிம்மதியையும் சூறையாடி விருக்கிறேன். இந்த இளமைப் பருவத்தில் மூன்று வருஷ காலம் நீங்கள் வெந்து வெந்து உள்ளுக்குள் சாம்பலாகிக் கொண்டிருந்தீர்கள். காலம் மாறுகிறது. தயவு செய்து என்னை மன்னிக்கிற சமிக்ஞையாகவாவது அதை மாற்றிக் கொள்ளுங்கள். எனக்கு உங்கள் கல்யாணப் பத்திரிகை ஒன்றை அனுப்பி வையுங்கள்'' என்று கண்ணீர் மல்கக் கூறினான் ஜீவானந்தம்.

தன் தோள்களின் மேல் விழுந்திருந்த கைகளை எடுத்து, நன்றியும் துக்கமும் வேதனையும் சூழ்ந்திருந்த இருதயத்திலிருந்து கண்ணீரைத் தவிர எந்த வார்த்தைகளும் வராமல் நின்றான் தியாகராஜன். அந்தச் சமயத்தில் அவனைப் பார்க்கையில், ஒரு போர்க்களத்தில் அனேக காயங்களுடன், வீட்டுக்கு நிர்ப்பந்தமாக அனுப்பப்பட்ட ராணுவ வீரனைப் போல் இருந்தது.

அந்த மலையில் – மாய விக்னேசுவரர் கோயில் அருகில் – மூங்கிற் புதர்களுக்கு மத்தியில் – ரஸ்தாவுக்கு அருகில் போடப்பட்டிருந்த ஜீவானந்தத்தின் சிறு குடிசையில் அதற்கப்புறம் பழைய சந்தடிகள் இல்லை. நிஷாவின் தண்டைச் சதங்கைகள் குலுங்கும் ஓசையும், ஜீவானந்தத்தின் குஷியான குரலும், கிழவர் ஜான்ஸன் மாடுகளை ஏர் உழும் போது மிரட்டும் ஓசையும் நிரந்தரமாகக் கேட்கவில்லை. தியாகராஜன் எப்போதாவது குதிரையின் மேல் போகும்போது, மாய விக்னேசுவரர் கோயில் அருகில் ஒரு பாறை மீது குந்துக்காலிட்டு இரண்டு கைகளாலும் தாடையைத் தாங்கியவாறு உட்கார்ந்திருக்கும் ஜக்கோடனைப் பார்ப்பான். பிரியத்துடன் வளர்த்த பறவை ஒன்று பாடி விட்டு எங்கோ தொலை தூரத்துக்குச் சென்று விட்டதைத் தாங்க முடியாமல் ஏக்கத்துடன் அவன் அங்கேயே விக்கிரகமாகி விட்டது போலவே, தியாகராஜனுக்குப் பிரமை தட்டும்.

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon




சட்டை, வேட்டி, சேலை, ரவிக்கை, துண்டு, சிறுவரின் உடைகள் ... நம் வீட்டுத் துணிகள் எல்லாவற்றுக்கும் ஏற்ற சலவை ... வீட்டிலேயே ஸர்ப் சலவை ... வெகு இலகுவாக வெள்ளைவெளேரென்று துப்புரவாக்கும் சலவை! எல்லாம் ஸர்ப் செயல், அதன் அளவுகடந்த ஆற்றல்! இன்றே செய்வீர் ஸர்ப் சலவை ... இல்லத்திற்கான இணையற்ற சலவை!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை!

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு SU. 24-X3